உ

திருச்சிற்றம்பலம்.

# பெற்றான் சாம்பனார்

# சரித்திரக்கீர்த்தனம்.

இஃது,

மாயூரத்தைச் சார்ந்த கூறைநாடு தமிழ் வித்வான்

சித்தாந்த ரத்நாகரம்

அ. கந்தசாமி தேசிகர் அவர்களின் குமாரரும்

சிதம்பரம்

பாகவத சிகாமணியாகிய பிரும்மஸ்ரீ,

எம்பார். ஸ்ரீ ரங்காசாரியார் அவர்களுடைய

சிஷ்யருமாகிய

ரஞ்சித மோகனகவி பாகவதர்,

தியாகராஜ தேசிகர் அவர்களால்

இயற்றியது.

கூறைநாடு ஸங்கீதவித்வான்

பிரும்மஸ்ரீ, சாம்பமூர்த்தி அய்யர் அவர்களால்

சீர்திருத்தியது.

சிதம்பரம் புக்ஷாப்

சி. ஜி. இராமாநுஜம் செட்டியார்

அவர்களால்.

சென்னை-சூளை.

பி. வே. நமசிவாய முதலியாரவர்களது

நிரஞ்சனவிலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

இதன்விலை 1915. அணா 12.

உ



சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்



இஃது.

இந்நூலியற்றினருக்கு ஆசிரியரான
சிதம்பரம் பிரம்மஸ்ரீ
எம்பார். ஸ்ரீரங்காசாரியார் பாகவதர்,
அவர்களால் இயற்றிய

ஶ்லோகம்

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

வேதாகமாதிகளினலே துதிக்கப் பட்டதாயும் ஸ்ரீ விராட் புருஷனுடைய ஹ்ருதய கமலஸ் தானமாயும்தரிசன மாத்திரத்தினலே முத்தியைக் கொடுக்கக் கூடியதாயும் விளங்கும் ஸ்ரீ சிதம்பர க்ஷேத்திரத்தில் கநகசபையில் அனவரதம் பஞ்சக்ருத்ய பரமானந்த த்தாண்டவம் செய்யும் ஸ்ரீமந் நடராஜ மூர்த்தியினுடைய் அபராவதாரமான ஸ்ரீ உமாபதிபதி சிவாசாரிய சுவாமிகளின் பரமக்ருபையினல் ஞானவலோகன தீக்ஷை பெற்று எரியப்பட்டு. சிவத்தோடு இரண்டறக் கலந்த தீண்டப் படாதவர் குலத்தரான "பெற்ருன் சாம்பானர்" என்னும் பக்தரின் திவ்ய சரித்திரமானது, பொன்னிநதி வளம்பெற்றதாயும் ப்ரும்ஹகானமென்று சொல்லத் தக்கதாயும் விளங்கும் திருமயிலாடுதுறையென்னும் மாயூர க்ஷேத்திரத்தில் வசிக்கும் மெய்கண்டார் மரபிலுதித்த சைவசித்தாந்த ரத்நாகரம், ஸ்ரீ ஸ்ரீ கந்தஸ்வாமி தேசிகர்

குமாரன் சிரஞ்சீவி தியாகராஜனுல் புராணங்களுக்கும் நாடகத் தமிழுக்கும் பொருந்த நல்லவர்ண மெட்டுகளுடன் சங்கீத சாஸ்திரபாகு பாட்டினதாய் செய்யப்பட் டிருக்கிறதையான் நன்ருய் கவனித்துப் பார்த்ததில் சொற்சுவை பொருட்சுவை யெல்லாம் மிகவும் நன்ருய் பொருந்தி யிருக்கிறது. இச்சரிதம் கேட்போருக்கும் வாங்கிப் படிப்போருக்கும் ஸ்ரீமந் நடராஜ மூர்த்தியி னிடத்திலும் அவரடியார்க ளிடத்திலும் பேரன்பு விளைவிக்க இது உயர்வான நூலென்பது எனது அபிப்ராயம். ஆனதினுல் இந்நூலியற்றின, ரஞ்சித மோனகவி தியாக ராஜனுக்கு, ஸ்ரீமந் நடராஜ மூர்த்தியினுடைய அனுக்ரஹமும், தீர்க்காயுசும், ஆரோக்கமான சரீரமும் நல்லகீர்த்தியும் உண்டாக வேணுமென்று பகவத் தரிசன காலங்களில் என்னுல் பிரார்த்திக்கப் படுகிறது. சுபம்!

---

இஃது.

மாயூரத்தைச் சார்ந்த கூறைநாடு
ஸங்கீத ஸாஹித்ய வித்வத் சிகாமணியாகிய
ம-ா-ா-ஸ்ரீ. சாம்பமூர்த்தி அய்யர்,
அவர்கள் இயற்றியது.

---

இவ்வுலகின் கண் விராட்புருடனது இதயத் தானமாகிய திருத்தில்லை மாநகரில் ஏமச்சபையில் அனவர தாண்டவம் புரியும் ஸ்ரீமந் நடராஜ மூர்த்தியின் குஞ்சித சரணத்தில் மெய்யன்புடையாரான ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகளால் தீக்ஷை செய்யப்பட்டு உத்தமசாயுஜ்ய பதமடைந்த குருபத்தி சிரோன்மணியான பெற்ருன் சாம்பனுர் சரித்திரத்தைக் கானரூபமாய் இயற்றின கூறைநாடு, சித்தாந்த ரத்நாகரம். தமிழ் வித்வான் சுந்தரசாமி தேசிகரின் செல்வப்புதல்வர் தியாகராஜ தேசிகரது பெருமை மிக மேன்மையுளதே.

---

திருக்கைலாய பரம்பரை தருமபுரவாதீனம்
அடியார் குழாங்களி லொருவரும்,
சிதம்பரம் செந்தமிழ்ச் சங்கத்து வித்துவானுமாகிய
ஸ்ரீல , சண்முகத் தம்பிரான் சுவாமிகள்,
இயற்றிய.

கட்டளைக் கலித்துறை.

சீருற் றசோழ வளநாட் டிற்காவிரி சேர்ந்திலங்கு
நாருற் றயாரும் புகழ்கூ றையம்பதி நன்னகரிற்
ரூருற் றபாவல ளுங்கந்தசாமி தருங்கு ரவன்
பேருற் றபுத்திர னுந்தியாக ராசன் பெரிதுவந்தே.

பெற்றான்விரும்பும் பெரும்புலியூரான் பேரருளாற்
பெற்றான்மகிழும் பெருந்தகைசந்ததி பெற்றுயர்வைப்
பெற்றாளுமாபதி தேசிகனேக்கினைப் பெற்றருளைப்
பெற்றான் சரித்திரம் பேசினன்யாவரும் பேறுறவே.

---

வைதீசுவரன் கோயில்
ம-ா-ா ஸ்ரீ, சோமசுந்தர தேசிகர்,
அவர்கள் இயற்றியது
வெண்பா.

பெற்றான் சரிதத்தைப் பேரழகாய்ச் சொற்றிட்டுப்
பெற்றான் பெரும்புகழைப் பேருலகிற் கற்ற
வியாபகனுங் கந்தசா மித்தேசி கன்சேய்
தியாகரா சத்தே சிகன்.

---

ஸ்ரீ கௌரி மாயூரம் கீழண்டை மாடவீதி
மெய்கண்ட சந்தானம்
ல ஸ்ரீ, மாயூரநாத தேசிகர்
அவர்களியற்றியது.

அருமறைப் பொதுவின் தாய வாகம
வுட் பொரு ளதனை
வருமுறை யாக வளருப தேசம் வழங்கிட
வந்த மாதவத் தோன்

தருநிறை கூறை நாட்டினன் சைவ சாத்திரப்
பயிற்சி யிற் றக்கோன்
குருதிரு மேனிக் கொண்ட தேசிகனுங்
குறைதவிர் கந்த சாமிப்பேர்.

தூயவ னேற்ற துகளறு தவத்தாற்
றோன்றிய விற்பனச் சுதனு
மாயவன் சித்ரகூடத்தின் றெழுந்த
மல்குசீ வைணவ மரபி
லாயவன் சீரங் காசாரி யைய
னவரின் மாணாக்கனாய் வந்தோன்
நேயவன் வல்ல விசைப்பிர சங்க
நிபுணனு நீள்புவியதனில்.

நற்றவப் பெற்றான் சாம்பனார் சரித
நானில மகிழுற நவின்றான்
மற்றசீர் செஞ்சொல் மலர்ந்திடு நந்தன்
மணிக்கதை யினும்பெரு மாண்பாய்ச்
சொற்றவிக் காதை சுவையினுஞ் சுவையாஞ்
சொலச்சொலக் கேட்பவர் தூய்மை
பெற்றிடு தியாக ராஜதேசிகனும்
பிரபலன் கவியில் வல்லோனே.

இஃது

மாயூரம் ம-ள-ள-ஸ்ரீ தமிழ் வித்வான்
தண்டபாணி தேசிகர்,
அவர்களியற்றிய.

விருத்தம்.

நிலமலி சோழ நாட்டி னிகழ் மயிலைக்கு மேல்பா
னலமணி வளஞ்சால் கூறை நாட்டின னபிடேகங்கொள்
குலமலி கந்தசாமிக் கோதில்தே சிகன்பால் வந்த
பலமலி தியாக ராச தேசிகப் பாவ லோனே.

அருளுறு பெற்றுன் சாம்பா ஞன்றமான் மியத்தையாய்ந்து
தெருளுறு கீர்த்த னத்தாற் செப்பினு னந்த ஞரின்
வெருளறு கீர்த்த னத்தின் மேலுள தென்று பார்த்த
வருளொரு வருஞ் சொலாதார் மற்றிலை மகிழ்ந்து மாதோ.

இத்திற மிவர்க்குவாய்த்த தேழிசைப் பரவை தன்னி
னத்துநீர்க கடல்சூழ் வைப்போர் நாரதமுனியே யென்னும்
வித்தகன் றிருவை யாற்றில் வேதியர் குலத்துதித்த
வுத்தமன் றிருப்பேர்கொண்ட வுயர்வென வுரைக்கலாமால்.

---

மாயூரத்தைச்சார்ந்த கூறையம்பதி சொர்க்கபுர ஆதீனம்,

சிதம்பர நாதசுவாமிகள்,

இயற்றியது.

பொன்னிநதிக் கரையோரம் பொலிகூறை நகரில்வசிப்
போனுஞ் சைவ
மன்னிடுமெய் கண்டகுரு மரபிலவ தரித்துகுல
மணியாய் மிக்க
வுன்னதநற் சிவஞான போதமெனு முயர்நூலை
யுணர்ந்து யோகக
தன்னிலனு பவமுடையோன் றண்டமிழின் சுவையறிந்தத்
தக்க மேலோன்.

பாரதனிற் சித்தாந்த ரத்திஞகர மெனும்பேர்
பரிவர்ப் பெற்றேன்
சீரதனை வாய்ந்தகந்த சாமிதேசிகன்றவத்தாற்
சேயாய் வந்து
பேரதனு லேதியாக ராஜதேசிகன்மிக்கப்
பெரியோ ரன்பன்
நாதனல் மகிழ்ந்திடுசங் கீதமொடுப் பிரசங்கம்
நவிற்ற வல்லோன்

செந்தமிழின் கவியினங்கள் குகனருளால் தேன்போலே
சிறக்கச்செய்வோன்
அந்தமிகு ரஞ்சிதமோ கனக்கவிஞ னெனும்பேரன்
னவ னியற்றித்

தந்தவிந்த பெற்ருன்சாம் பான்சரிதந் தாரணியோர்
தக்க தென்று
சிந்தையொடு புகழ்ந்திடும் புலவருளங் களித்திடவுந்
திகழ்ந்த மாதோ.

---

மாயவரம் ம-ா-ா-ஸ்ரீ, வக்கீல்
ஏ. நடேச பிள்ளை,
அவர்கள் இயற்றியது.

ஜீவான் மாக்கள் இகலோக பறலோக சாதனங்களை யடை யச்செய்வதற்கு முக்கிய ஹேதுவாயுள்ளது ஈஸ்பர பத்தியே யன்றி வேறல்ல வென்பதை நாம் சுருதி யுக்தி அனுபவம் இம் மூன்றினுலுந் தெரிந்து கொண்டிருக்கிறேம் இவ்விந்தி யாவில் பற்பல மதஸ்தர்கள் குடியேறி தங்கள் தங்கள் மதங்களை பரவச் செய்வதற்கு பெரு முயற்சிசெய்து வருகிருர்கள் கொடுங்கோன் மன்னர்களாகிய மகமதியர்களின் அரசாக்ஷியிலும்அழியாமல்நிலை பெற்று நிற்பது நமது இந்து மதம் இந்த மதம் இவ்வுலகின்கண் ணுள்ள எல்லா மதங்களிலுஞ் சிறந்த தென்பதை நாகரீகத்தில் மிகச் சிறந்தவர்களென பெயர் பெற்ற ஐரோப்பியர் அமெரிக் கர்களும் ஒப்புக்கொண்டிருக்கிருர்கள் அவ்விதம் அன்னியநாட் டார்களாலுங் கொண்டாடப் பெற்ற நமது மதத்தைத் நன்னில மைக்குக் கொண்டு வரச்செய்ய வேண்டியது நம்மவர்களின் முக் கிய கடமை யென்பது சொல்லாமலே விளங்கும். பக்திமார்க்கங் கள் பல வற்றுள்ளும் அடியார்களின் சரித்திரங்களை சங்கீத ஞானத்துடன் பிறசங்கித்தலும் அவைகளை செவியுற்றுக்கேட்டு ஆனந்தித்தலும் நாம் இடைவிடாது ஈஸ்வர பக்தி செய்வதற்கு தூண்டு கோலா யிருக்கும் பழிபாவங்க ளுக்கஞ்சாத இழி குலத் தவர்களும் ஈஸ்வற பக்திசெய்து மோக்ஷ சாதனங்களைப்பெறலா மென்பது ஜீவன் முக்தி க்ஷேத்திர மென்னும் பூலோக கைலாய மென்றும் சொல்லப்படும் சிதம்பற ஸ்லத்துக்கு கிழக்கிலுள்ள ஓர் குககிராமத்தில் வசித்து வந்த பெற்ருன் சாம்பனுரென்பவரு டைய சரித்திரத்தினுல் நன்கு விளங்கும்இவர்தான் ஈஸ்வறபக்தி யிற்சிறந்தவராக விருந்து வந்தது மன்றிதன்னினத்த வர்களையும் ஈஸ்வற பக்தி செய்யும்படியாக புத்தி மதிகளைப் புகட்டி வந்தார் இவர் ஸ்ரீ நடராஜாவின்

அடியார்க் கெளியவன் சிற்றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதிய கைச்சீட்டு படிமிசையிப்
பெற்றான் சாம்பானுக்கு பேதமறத்தீக்கைபண்ணி
முத்திக்கொடுக்க முறை.

என்றதிருவாக்கின்படி சிவபக்தசிரோன்மணியாகிய ஸ்ரீஉமாபதி சிவாசாரியார் அவர்களால் தீக்ஷை செய்யப்பெற்று சாயுஜ்ஜ பதவி யடைந்திருக்கிறார் இச் சரித்திரம் பவுஷியோத்திர புராணம் சந்தான சாரியர்ர் புராணம் இவைகளி லிருந்ததை கூறைநாடு கந்தசாமி தேசிகரவர்களின் தவபுத்திர னாகிய தியாகராஜ தேசிகரவர்கள் சொற்சுவை பொருட் சுவைகள் பொருந்த இலேசான நடையில்கீர்த்தனைகளாகச் செய்திருக்கிறார்கள் இச்சரித்திரத்தை தமிழில் கீர்த்தனைகள் ரூபமாகச் செய்திருப்பது இவர்கள் கதாப்பிரசங்கங்கள் செய்வதி ஒத்த சாமார்த்தியமுடையவர்களென்பதை உள்ளங்கை நெல்லிக் கனிபோற் காட்டுகிறது இவ்வுலகுக்கு இவ்வித நன்மை செய்த இவர்களின் குலகோத்திரங்கள் மென்மேலுந் தழைத் தோங்கஸ்ரீ நடராஜாவைநாம்அநுதினமும் பிரார்த்திக்கக் கடமைப் பட்டிருக்கிறோம்.

---

## குத் தாலம்.

ம-ா-ா-ஸ்ரீ, தமிழ்வித்வான் சோமசுந்தரம் பிள்ளை,
யவர்கள் இயற்றியது.

அன்னங்க னடன்மிட வேபொன்னி யருகினே
　　ரறியதொரு வாவியதனு
னமையும்வல் வனைபயங் தகம்விரித் தேதரள
　　மதையீன்றிடக் கண்டதோர்
வன்னிமிக் கார்சிறைப் புள்ளினத் தேமிக்க
　　வாண்மைபெறு கனுழனுண்டு
வார்குழன் மடவார்க டெரிவினிலு மிழ்ந்திடு
　　மணிக்குவையை வாரியசிறார்
உன்னதமி குந்துசிறு சோறெனவு கந்துவிளை
　　யாடிடுங் கூறை நகரி
லூக்கமிக வேதியாக ராஜதே சிகனிந்த
　　வுலகினுக் குதவ வேண்டிச்

சொன்னயமி குந்திடத் தரணியரு வந்திடத்
துகளில்பெற் றூன்சாம்பனுர்
தூயவடியாக்கினிய தாயகீர்த் தனமிசைத்
தோங்குபுகழ் பெற்றனனரோ.

இ ஃ து.

மாயூரம் முனிஸிபல் ஹைஸ்கூல்
தலைமைத்தமிழ் பண்டிதர் ம-ள-ள-ஸ்ரீ,
எஸ். மேலாயுத முதலியார்,
அவர்கள் இயற்றியது.

திருவிளங்கும் பொன்னிநதி வளங்கொழிக்குஞ் சோணுட்டின்
திலக மாகித்
தருவிளங்குங் களிமயில்க ணடம்புரியு மாயூரத்
தலத்தி லின்று
ருருவிளங்குஞ் சைவகுல மணியென்ன வளர்கந்த
சாமி யோங்கற்
கருவினங்குந் தியாகரா சப்பெயர்கொள் திருமைந்தன்
கனிந்து போற்றும்.

தில்லைவள மெல்லையிணி லொல்லையடை பெருங்குரவச்
செம்மன் முன்னம்
புல்லுமொரு பெற்றுன்சாம் பானுக்கெழின் முத்திநிலை
பொருந்தி மோன
வல்லநெறி மருவுமொரு சரிதமதை நவரசமாய்
வகுத்துப் பல்லோர்
நல்லிதயம் வளர்தரச்செய் தணிந்தானன் முத்தணிபோ
ணுளு மிங்ஙன்.

கண்டவர்க ளுளங்களிக்கக் கேட்டவர்கட் செவிகளிக்கக்
கருத்து மோங்கி
விண்டலரி யெழிலென்ன விளக்கமுற வெவ்வணுமே
விரித்து வேத்தத்

தொண்டரினல் லவணியற்று நந்தன்கதை தனினுமிதன்
ரேற்ற நன்கு
வுண்டெனவே யவனிநனி குதூகலிக்க வமைந்ததுவிங்
குவகை தந்தே.

---

இஃது.

யாழ்ப்பாணம் நல்லூர் ம-௱-௱ ஸ்ரீ,
ஆறுமுகநாவலர் அவர்கள்
மாணாக்கர்களி லொருவராகிய,
சிதம்பரம்,
இராமலிங்க உபாத்தியாயர்
அவர்கள் இயற்றிய.

ஆசிரியப்பா.

திருவளர்கைலைச் சிவபிரானருளிய
வருஞ்சிவஞான போதமாமருணூற்
றெரிந்தருணந்தி தேவன்பாலுணர்ந்த
வருந்தவசனற்கு மாரர்பாற் பற்ற
சத்தியஞான தரிசனிபாலுணர்
சுத்தனும்பரஞ் சோதிபாலுணர்ந்த
மெய்கண்டசந்ததி மேவுநால்வருட்
டெய்வப்புலியூர்ச் சிவனருள்பெற்ற
கொற்றவுன்குடி குலவுமுமாபதி
நற்றவன்பால்விடு நற்றமிழாகு
மடியார்க்கெளிய னெனும்பாசுரத்தாற்
படிமிசையுள்ளோர் பண்பொடுகாண
பெற்றான்சாம்பா னெனும்பேர்வாய்ந்த
நற்றவன்மோக்கம் நன்கொடுபெற்ற
கற்பனைமேவுங் கதாமுதத்தை
விற்பனர்செவிக்கு விருந்தினதாக
கடிகமழ்சோலைக் காவிரிவளஞ்சூழ்
படிபுகழ்மயூரப் பதியினிலமர்ந்தோன்
வேளாண்மரபின் விளங்கியவாசான்
தாளாண்மையொடு சைவாகமத்தின்
வழிதருதீக்கை வகுத்திடுநான்கும்
வழிமுறையுணர்த்தும் வரம்பினையுடையோன்

ஆடுவார்முதன்மை யாரெனும்பேர்பெறு
பீடுறுகோத்திரப் பெருமைவாய்ந்தோன்
பந்தமதகற்றும் பரசிவனருளாற்
கந்தசாமிவேட் கருத்துறுபுதல்வன்
ஏழிசைப்புலமை யினிதாயுணர்ந்து
தாழாதுஞற்றுஞ் சபாப்பிரசங்கன்
மாயிருஞால மதித்திடுந்
தியாகராஜாஞ் சிதகவியோனே.

---

மாயூரம் முத்தமிழ்க் கவியரசு சிவர்நந்தியோகி
டாக்டர் சண்முகம் பிள்ளை,
யவர்களா லியற்றியது

திருவளரொளிசிற் றம்பலத்தரசின் றியாணமேலிட்டகிலத்தின் உருவளர்நெறியிறுவப்பிலாதரத்தி'னுறுசிந்தையுடையாய்ஞான மருவளர்கொற்றங்குடிமடாலயத்தில் வைகறைப்பொழுதினிலாங்கு, அருவளர்தவமோருருவதாய் வந்தபெற்றுனெனுஞ் சாம்பனுஞ் சீலன்.

வாய்மைதேறரத்தின் தாம்பிற ழாமல் வந்துடன் விறகதைக், கொணர்ந்து தூய்மைசேர் நைமித் திகத்திற்காஞ்செயற் குத்குத்துணையென யிட்டுச்செல்பவரின், தோய்வுளநெறியிற் சரிதத்தை யிராகதாள நேர்சுரநய ரசத்தால், ஆய்வுடளியற்றும் பெற்றுன் சரிதத்தையம்மவோ யியற்றியிங்களித்தான்.

அன்னவன் யாரெனி னறைகுஞ் சைவநெறி பிறழ்ந்த வபிஷேகத்தர், துன்னுமரபினில்வந்து கல்விதவங்கொடையாதி துலங்குஞ் சீலன், சொன்னயஞ்சால் தமிழ்மொழியிற்றலைமைகொளும் புலமையினற்றுலங்குஞ் செல்வன், தன்னகரில் கவிவலான் தேசிகக் கந்தசாமி தவங்கள் சேர்ந்தே,

அலைகிடந்த முத்தனைத்து மருங்கொர் துக்கும் பொன்னிநதி கூறைநாட்டில், கலைகிடந்த பேரறிவால் நிறைபுலவர்களிதூங்குங் கவின்மீதார, மலைகிடந்த தீபமெனவொளிர் சீர்த்திவாய்ந்திலகுவனமீக்கூறும், விலைசிறந்த தியாகராசக் கவிஞன்தோன்றி யிந்நூல் விளம்பினனெல்.

கரும்புறுநற்சுவைகைப்பெனவுங் கின்னரமிதுனங்கபிலையாதி
அரும்புசுவை கின்னரர் கிம்புருடர் நாரதர்முதலோ ரந்தரத்தில்
விரும்புசுவை கேட்டங்கானந்தநீள்வாரிதியில் மிதந்தாரென்னில்
பெரும்புவிலிதன் வளப்பம் பேசவெவராலாகும் பெற்றியம்மா

இ ஃ து.

மாயூரத்தைச்சார்ந்த மூவலூர் தமிழ்வித்வான்
ம-ா-ா-ஸ்ரீ, ப. சிங்கார வேற்புலவர்
அவர்கள் இயற்றிய.

நேரிசை யாசிரியப்பா.

பூமகடனக்கு நாமகடனுக்கும்
வாமம்மிக்க வேழநற்பதியென
எந்நாட்டதனிற் செந்நாப்புலவரும்
பன்னவுரைக்கும் பொன்னிநதிசூழ்
சென்னிநாடதனிற் சென்னியேவன்ன
வேதமுடியினிற் போதங்கொண்டுந்
தெளியாதுயங்கும் விளியாவம்பலத்
தில்லையின்கீழ்பா லெல்லையின்விளங்குங்
கொற்றவன்குடிநகர் நற்றவனுவோன்
உணர்வுடையாரு முணர்வரும்பொருட்டன்
சொல்லெனயாருஞ் சொல்லக்கண்டோன்
மெய்கண்டாரவர் பொய்யில்வழியின்
சதுரனுமெனப்பொய்க் கெதிர்மறையானேன்
மதுரம்மொழியாற் சதுர்மறையாகமத்
தொளிதரும்பொருளை வெளிதருநூல்பல
சித்தாந்தத்தின் வித்தாக்கண்ட
உமாபதிக்குரவனெம் முமாபதிவாக்கான்
முள்ளியானரசுஞ் முள்ளியேயுணரக்
கணப்பொழுதினிதே தணப்பருமுத்தி
யின்பந்தன்னை யன்புடனீயப்
பெற்றேனுயப் பெற்றான்சாம்பன்
சரிதமிசையாற் றெரிதரக்கேட்போர்
செவியகனிமிக்குஞ் சுவைதரும்வண்ணம்
அதுபோலாஅ திதுவெனயார்க்கும்
அன்பினைப்பெருக்கி யின்பினையளிக்கு
மென்னவுரைத்தன னன்னனியாரெனின்
ஏனோநாடுந்தன் மானங்காப்பக்
கூறைநாடுதலிற் கூறைநாடெனப்படு
மந்நகர்மருங்கி னன்னர்வாழ்வோன்

இம்மெய்கண்டார் தம்மரபாகிய
ஆடுவார்முதன்மை நாடுகோத்திரமுதல்
வத்துவையுணரத் தத்துவமுணர்ந்து
குரவனியல்பு பரவியகுரிசில்
சிவனடிக்கன்பிலை தவரடிக்கன்பன்
சுத்தமாசைவ "சித்தாந்தரத்நா
கர"மெனப்பெற்ற வரமிகுமண்ணல்
செந்தமிழ்வல்ல "கந்தஸாமி"யெனும்
பேர்கொடேசிகன் பார்கொளவருளிய
பொருளெனவந்தோன் தெருளுறுஞ்சிந்தை
யருளிரங்ககம்பொறை மருவியமாண்பன்
பலதலையாருமோர் நலதலைவிரும்பப்
பங்கமிலிசைப்பிர சங்கஞ்செய்ய
வல்லுநனென்றும் நல்லனியார்க்கும்
செஞ்சொலைச்சேர்க்கும் "ரஞ்சிதமோகன
கவி"யெனும்பேரார்ந் தவன்சுதனன்பன்
தயாமிகுகுணத்தா னயமிகுக்
"தியாகராஜப்பெரும் பெயருள்ளோனே.

---

அவையடக்கம்

முக்கனி.

கற்றாரின் பாதக் கமலத்தை யான்போற்றிப்
பெற்றான் சரித்திரத்தைப் பேருலகிற் சொற்றேனால்
குற்றத்தை நீக்கிக் குணமாகக் கொள்வரென
நற்றமிழை யோராத நான்:

சுதர்கரத்தி லீந்து சுருளமுதைத் தன்வா
யதிலளிக்கக் கொண்டுகளி யாவா ரதுபோலு
நான்புகன்ற விச்சரிதங் கேட்டு நளிமகிழ்வை
யேன்கற்றார் கொள்ளா ரிசைந்து

எழுத்தை யறியா வியல்பினர்க்கு வீது
வழுத்தும் பயனறியமாளா செழிந்தமக
வீன்றவரே காண்பார்க ளீன்றெடுக்கார் யாருக்குந்
தோன்றா குதலைச் சுகம்

---

சிவகுருதுணை.

இந்நூலியற்றினற் கருத்து.

# முகவுரை.



ஐயன்மீர்? அநேகவந்தனம்.

யான் இந்நூலை இவ்வாறியற்றி வெளியிடுவதற்குக் காரணம் சிதம்பரம் பாகவதசிகாமணியாகிய எனதாசிரியர் எம்பார் பிரும் ஹஸ்ரீ ஸ்ரீரங்காசாரியார் அவர்கள் மாட்டு சிறிது காலம் தங்கி யிருக்குங்கால் ஸ்ரீமந் நடராஜப் பெருமானை அடிக்கடி தரிசித்த தால் எனக்கு நிகழ்ந்த பத்தியேயாம் மேலும் சிதம்பர ஸம்பந்த மாக ஏதேனு மொருநூலியற்ற வேண்டு மென்னுமவாக்கொண்டு நிற்குங்கால் இச்சரித்திரத்தை நாடகத் தமிழாக என்சிற்றறிவிற் கேற்ற வண்ண மெழுதினேன் இதில் நந்தன் சரித்திரத்தில்பிரும் ஹஸ்ரீ கோபாலகிருஷ்ண பாரதியார் அமைத்திருக்கும் வர்ண மெட்டுகளையே பெரும்பானு மவாவி முன்னோர்கள் செய்தசில கீர்த்தனங்களைப் போலும் சிற்சிலதுள் காணப்படும்.

நிற்க இச்சரித்திரத்தில் ஓர் வெள்ளாழருக்குப் பெற்றான் அடிமையென்றும் அவ்வெள்ளாழருக்குத் தொண்ணூற்றாறுவேலி நிலமுண்டென்றும் கற்பித்திருப்பதை ஞானசாத்திரங் களிற்கா ணுந் தத்துவத்தின் வரிசைப் பாட்டிலமைத்து நோக்குமிடத்து முரணாகாமேலும் ஆழ்ந்த அறிவாளிகள் இதனைக்கண்டுணர்வார் கள் யேனையோர் காண்பது மிகக்கடினமேயாம் நிற்க சைவாபிமா னிகளிற்சிலர் சாம்பனரை வாடா? போடா? என்னும் இழிவான சொற்களையுபயோகித்து வழங்கி யிருப்பதைக் கண்ணுற்று பரி தாபித்து ஆயாஸப் பட்டலாம் அஃதெமக்கு மொப்பமேயாம் ஆயி னும இந்நூல்நாடகத்தமிழானபடியாலும் பண்டிதர்கட்கன்றிபா மரர்கட்கும் எளிதிற்றெரியவேண்டிய திருப்பது அவசிய மாகை யினால் இவ்வாறியற்றிய தன்றிவேறல்ல இக்குற்றத்தைப் பொறுக் குமாறுயாவரையு மன்றாடிக்கேட்டுக் கொள்ளுகிறேன்.

இந்நூலையச்சிட வேண்டி சிலர்என்னைமிகுந்த சீக்கிரப் படுத் தித்தூண்டினமையால் விரைவின் முடித்ததில் சிற்சில வழுக்களி ருப்பினும் குறைதீர்த்துக் கொண்டு திருத்திக் கொள்வது பெரி யோர்க்கழகு.

சிதம்பரத்தில் நந்தன் பெற்ருன் தில்லை வெட்டியான் என மூன்றுநீசபத்தர்கள் மோக்ஷமடைந்ததாகபலபுராணங்களாலும் ஆன்ஞோர்வாயிலாகவுந் தெரியவருகிறது இதில் குருவின்மூலமாக மோக்ஷமடைந்தவர் இப்பெற்ருன்சாம்பனுரேயாம்

இந்நூலையானெழுதுங்கா லெனக்குநேர்ந்த வையப் பாடுகளகலும்வண்ணம்என தாசிரியரானபிரும்ஹ ஸ்ரீ பாகவதர் ஸ்ரீரங்காசாரியார்அவர்கள் இதைச்சார்ந்த சிலஅரிய விஷயங்களை யுஞ் சொல்லிசில அச்சுப்புத்தகங்களுங் கொடுத்து தவியநன்மைக்கு யான்எந்நாளும் அன்னவர்க்கு என்சித்த சுத்தியா நன்றிபாராட்டக்கடமைப்பட்டுள்ளேன் சுபம்.

## மூக்கிய கவனிப்பு

எமதன்பர்களிந்நூலைவிரைவினிலச்சியற்றி வெளிப்படுத்துமாறு என்னைமிகத்தூண்டினமையாலும்சிதம்பரய்புக்ஷாப் சி. ஜி. இராமாநுஜம் செட்டியார்அவர்கள் இதனை விரைவி லச்சிட விருப்பியதாலும் இதற்காணுங் குற்றமுதலியவைகளைநீக்கிக் குணத்தைக் கைக்கொள்ளுவதோடு இதில்இராகதாளமின்றி தண்டகம் துக்கடா த்விபதை என்பன முதலியவைகளுக்கு சமயோசித மாக இராகதாளங்களை யமைத்துக் கொள்ளவும்.

## குறள்

"எப்பொருள் யார்யார்வாய் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

இங்ஙனம் சிவகுரு தாசன்
M K. தியாகராஜ தேசிகன். பாகவதன். கூறைநாடு
மாயவரம்.



உ

திருச்சிற்றம்பலம்.

# பெற்ருன் சாம்பனூர் சரித்திரக் கீர்த்தனம்.



கற்பகவிநாயகன் றுதி.

## வெண்பா.

திகழ்ந்திடுபெற் ருன்சரிதஞ் சீர்புவியிற் செப்பிப்
புகழ்ந்திடவென் சிந்தையினிற் போந்து—நிகழ்ந்திடுமே
சிற்பொருளாய் ஞானத் தெளிவளிக்கத் தில்லைவாழ்
கற்பகத்தின் கஞ்சக் கழல்.

பெரிய விநாயகன் றுதி.

## வெண்பா.

அரியயனும் போற்றதிருத் தில்லையிலேவாழும்
பெரிய விநாயகனைப் பேணி—விரியுமனத்
தேனினைத்திப் பெற்ருன் றிகழ்சரிதஞ் செப்பநிகழ்ந்
தேனருளைச் செய்யு மகிழ்ந்தே.

கீர்த்தனம்-இராகம்-கேதாரம்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

திருவருள் புரிந்திடுங் கஜ முகனே
தில்லைவாழ்கற் பகனே (திரு)

அநுபல்லவி.

அருமறை களுக் காதியான
வைங்கர னேசுரர் நேசனே
சங்கரி யீன்றக ணேசனே (திரு)

சரணங்கள்.

(1) வனிதை வல்லபை யாள்ஸ மேதனே மறைமூலப்ரணவ
மந்திர ரூப ஞன நாதனே
புனித மாதவர் போற்றிப்பணியும்
புங்கவ ஞனவி லோலனே
எங்குறி றைந்திடு கோலனே (திரு)

(2) சரவண பவகுகஸ ஹோதரா ஸநகாதியாரும்
சகலருந் தாழ்ந் திடும்லம் போதரா
அரவணை துயில் வானு மயனு
மஞ்சலி செய்திடு தாளனே
ஸஞ்சித நாசத யாளனே (திரு)

(3) பெற்ருன் சரித மிதனைப் பூர்த்தியே செய்திடவெனக்குப்
பேரருள் தருவாய்நீ மூர்த்தியே
கற்றவர்யாருங் களித்து நோக்கி
கந்தலி லாது துதிக்கவே
செந்தமிழ் நாவி லுதிக்கவே (திரு)

ஸ்ரீ முருகன் துதி.

வெண்பா.

உலகினிலே பெற்ருன்ற னெண்சரித மோத
விலேவேலுஞ் சண்முகமு மீரா—றலர்கரமுஞ்
செந்தா மரையடியுஞ் சிந்தித்தேன் வந்தருள்வாய்
கந்தா மயில்வா கனு.

சிந்து.

சித்திரவிசித்திரம யூரா பிர
சித்தமுறுயுத்தரங்க தீரா பத்தர்
சித்தமேவசித்திடுமொய் யாரா சுகு
மாரா கன வீரா எண்ணுஞ்
சித்தத்திற்களித்திடுமு தாரா.

சிங்கனுயிர்மங்கவென்ற வேலா இரு
திங்கண்முக மங்கையரின் லோலா ஜக
தீசனருள் மாசிலாத பாலா வேத
மூலா குண சீலா யாருஞ்
செப்பருங்க டப்பமலர்க் கோலா.

எத்திசையுமொத்துபணி தாளா திக்
கெட்டையும்புரட்டுமணித் தோளா போற்று
மிட்டர்களுக்கிட்டிடுந்த யாளா சுகு
ணுளா வில் லாளா பர
வேகனேவிசாகமெனு நாளா.

ஏந்திழையர்மாந்திடும்லா வண்யா பூத
மெங்கினும்விளங்கிடுஞ்ச ரண்யா பர
மேசற்குபதேசஞ்செய்த கண்யா ஷாட்

குண்யா தவ புண்யா புக
மேலநின்ற பாலசுப்ர மண்யா

நித்தமுனிவனைத்துகண்ண ரும்பி எந்த
நேர்மமுன் பேரினைபு லம்பி தீயை
நேருமெழுகாயுளம்வெ தும்பி நான்ற
னும்பி இடர்நி ரம்பி போற்றி
னேனேமுரு கோனேவுனை நம்பி

நெஞ்சமதில்வஞ்சமில்ல யையா நொந்தேன்
நின்னையண்டி பன்னிரண்டு கையா சுத்த
நிர்மலசு தர்மகுணத் துய்யா ஞான
மெய்யா முரு கையா நா
னேழைபடும் பாடதுவும் பொய்யா

முத்திசேர்பதத்தினைநீ காட்டி யெந்தன்
மூடவாணவப் பிசாசை யோட்டி யுந்தன்
மூலமந்திரத்தையென்னு ணூட்டி ஞான
மூட்டி பர வீட்டி லென்னை
முத்தனென வைத்திடுவாய் பூட்டி

முக்கனிதேன் சர்க்கரை க லந்து கண்டை
முற்றுநெரித்திட்டதைப்பி சைந்து மன்னு
முண்டியெனத்யாகன்பாடுஞ் சிந்து தனை
வந்து செவி தந்து கேட்டு
முருகநீவி ரைந்தருண்ம கிழ்ந்து

## ஸ்ரீ நடராஜப்பெருமான் றுதி.

விருத்தம்.

புலியதளை யுடுத்துவிடப் பாம்புகளை யங்கமதிற்
புனைந்து வோரம்
புலியதனை முடிவகித்துப் புரிமெரித்திட் டோன்றன்னைப்
போற்றி நின்ற
புலியதற்கும் பாம்பினுக்கும் போதவரு ளீந்தபிரான்
பொற் பாதங்கட்
புலியதனை மனமிருத்திப் புவிதனிற்பெற் றுன்சரிதம்
புகல்வேன் மாதோ.

இராகம்-சங்கராபரணம்-தாளம் ரூபகம்.

பல்லவி.

தில்லை நடராஜனே
சிவ காமி நேசனே!

சரணங்கள்.

இல்லையேதுமொரு எல்லையென்றுமறை
சொல்லநின்ற மூலா அன்பர்வினை
யல்லல்தீர்க்குஞ் சீலா
வி லோலா (தில்)

உம்பரேத்திடுசி சிதம்பரத்தில்நட
னம்புரிந்த பாதா பாம்புபுலி
யும்பணிந்த நாதா
வி நோதா (தில்)

ஆதியந்தமில் லாததானபரஞ்
சோதிஸ்வப்ர காசா த்யாகன்மற
வாதகால நாசா
ஸ பேசா (தில்)

## ஸ்ரீ சிவகாமி துதி.

வெண்பா.

ஞானந் தனைக்குழைத்த ஞானப்பா லாமமுதை
ஞானந் தனையடைய நற்காழி—ஞானசம்
பந்தருக்குத் தந்த பரையே சிவகாமி
வந்தெனக்கு நீயருளு வாய்.

இராகம்-கல்யாணி-தாளம்-ஜம்பை.

பல்லவி.

சிவகாமிதாயே திருவருள்புரிவாயே (சிவ)

அநுபல்லவி.

பவநேமிமோசநியே பங்கஜவிலோசநியே (சிவ)

சரணம்.

மதுரபாஷணிகௌரி மாதங்கிசுகபாணி
மஹிஷாஸுரமர்த்தநி மரகதாங்கிராணி
சதுர்வேதநாயகிவே தாந்தசாஸ்த்ரபுராணி
சச்சிதானந்தரூபி சாம்பவிகல்யாணி(சிவ)

## தெக்ஷிணாமூர்த்தி துதி.

வெண்பா.

கல்லாலின் கீழமர்ந்து காணற் கரும்பொருளைச்
சொல்லாமற் சொல்லித் துகளறுக்க—வல்லானைத்
தென்முகத்துத் தெய்வத்தைத் தேடரிய தேசிகனை
யென்மனத்தி லேயிருத்தி னேன்.

## ஸ்ரீ சாரதா துதி

இராகம்-பியாகடை-தாளம்-ஆதி

பல்லவி.

சதாவுனதிரு பதாரவிந்தமினை
வதாய் மன்னினேனே (சதா)

அநுபல்லவி.

சுதாகரமுகவ ஙிதாமணியே தினம்
பிதாமகனணைசா ரதாயெனது மனம் (சதா)

சரணம்.

மதுரவாக்கருளும் வாணியே தாயே
வந்தென் மனத்திருந்து மகிழ்ந்தருணீயே
சதுர்வேதாகம சாஸ்த்ர காரணி
தாசன்தியாகரா சனுக்கருள்பூரணி (சதா)

## நால்வர்கள் துதி

வெண்பா.

திருஞான சம்பந்தர் தென்னாவ லூரர்
திருவாத வூரர் சிறந்த—திருநா
வரசரிவர் பாதமலரெனது சித்தச்
சரசதனிற் பூக்குந் தழைத்து.

## ஸ்ரீஉமாபதி சிவாசாரியார் துதி.

வெண்பா.

மாபதியுந் தாழ்ந்திடுமு பாபதிதாட் சேர்ந்திடுவு
மாபதியார் மாபதமே மன்னிடினு—மாபதியு
மாபதியின் பேரின்ப மாபதமே சேர்த்திடுமு
மாபதிய நோக்கி மகிழ்ந்து.

## தில்லை மூவாயிரர்கள் துதி.

தேவாதி தேவன் றிருத்தில்லை நாயகனைப்
பூவார் மலர்கொண்டு பூசித்து —மேவாமூ
வாயிரரின் சேவடியை மாமலர்கொண் டர்ச்சித்து
வாயார வேவாழ்த்து வாம்.

## தில்லைக்கோவிந்தராஜன் துதி.

பெற்ருன் சரித்திரத்தை பேருலகி லோதிடவே
கற்ருர்கள் மெச்சுங் கவிசெய்து—முற்ருக
நாதாவென் னெண்ணத்தில் நண்ணியிருந் தேஞானந்
தாதாதில் லைக்கோவிந் தா.

இராகம்-நாட்டைக்குறிஞ்சி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

தில்லைக் கோவிந்த ராஜனே வந்து
திருவருள் புரிவாய் (தில்)

அநுபல்லவி.

வல்லிபுண்டரீகச் செல்வியாளின்மண
வாளனே சுகு ணாளனே மணித்
தோளனே மலர்த் தாளனே திருத் (தில்)

சரணம்.

தேவருமூவரும் யாவருந்தினமுந்
தேடிப்பணியும்பொற் பாதா அன்பர்
சித்தங்களிக்கவே பத்தவதாரந்
தெரிந்தெடுத்திட்டவி நோதா வீர
ராவணனாதிபல ராக்ஷஸரைக்கொன்று
ரக்ஷித்திட்டஜக நாதா த்யாக
ராஜனுக்கருளுந் தாதா
சதுர் வேதா (திருத்தில்)

## தோடயம்.

விருத்தம்.

ஆனைமுக னுக்குமறு முகத்தானுக்கு
மாண்டவனுந் தாண்டவராயனுக்குமிந்து
மானமுக சிவகாமி வல்லியார்க்கு
மலர்வதன கோவிந்த மன்னனுக்குங்

கானமுணர் நால்வருக்குங் கதியிற்சேர்ந்த
கணத்தரவர் யாருக்குங் கவலையற்ற
ஞானியர்க்குமி யோகியர்க்கு நாவலர்க்கு
நயஞ்சொல்வேன் பணிந்துதோ டயஞ்சொல்வேனே.

இராகம்-கேதாரம் தாளம்-ஜம்பை.

கண்ணிகள்.

(1) புகழோங்குந் தில்லைதனிற் பொருந்திவாழ்பெற்றானின்
றகைமைதருங் கதையதனைச் சரிதமாய்ப்பாட
சகலமுனிவரர் பணியுந் தந்திமுகநாதன்பத
யுகமதனையே நம்பி யுன்னிதுதித்தேனே

(2) மரபறிந்துதொண்டியற்றி மன்றுணடமாடிவளர்
அரனடியையடைந்தவென தன்பர்கதைபாட
வரமயிலிலேறிவரும் வள்ளிமணவாளன்பதஞ்
சிரமதனிலணிந்துயான் சிந்தைசிந்தித்தேனே.

(3) பத்தியினிற்கரைகண்ட பத்தரெனப்பாரதனில்
முத்தரெனவேநின்ற முத்தர்கதைபாட
சத்திசிவகாமியொடு தானமர்ந்துநடமாடு
மத்தனதுபாதமல ரஞ்சலிசெய்தேனே

(4) பவநேமிதனைக்கடக்கப் பரகுருவுமாபதியை
யுவந்தடைந்துதொண்டுசெய்த வுத்தமரைப்பாட
சிவகாமிசெங்கமலச் சீர்பாதந்தனையென்றுந்
தவறுமற்சிந்தித்துத் தாழ்ந்துபணிந்தேனே.

(5) சீருடையகுருவினருள் திருநோக்கினலெரிந்து
பாரகன்றுபரமடைந்த பக்தர்கதைபாட
நாரணன்நால்வர்களும் ஞானியர்கள்நாவலர்கள்
நானிலத்திற்பெரியோரை நாடித்தொழுதேனே.

---

## ஸ்ரீ ஸத்குருவணக்கம்

பஞ்சரத்நம்.

(1) விகசிக்கு மேயென் மனத்தடத்தின் மேவி
மிகவெற்கு ஞானம் விளங்கப் —புகல்வேதச்
சந்தமோர் "ஸ்ரீரங்கா சாரியார்" தாளிணையாங்
கந்தமா ரும்பங் கஜம்

(2) பூமாலை யிட்டவரைப் போற்றுவார் யானவர்க்குப்
பாமாலை யிட்டே பணிந்திடுவேன்—பூமாலை
வாடுமே பாமாலை வாடுமோ வன்னவரை
நாடோறு மென்வாக்கி னால்.

(3) காதுக் கவர்புகழே கண்ணுக் கவருருவே
யோதும் பணிபுரித லொண்கைக்கே—காதலாய்ச்
சாய்க்கு முடிக்கு வவர்பதமே சந்ததமென்
வாய்க்கு "ஸ்ரீ ரங்கநா" மம்.

(4) என்னைப் பலவிதமா யேதந்தீர்த் தேதிகழத்
தன்னைப்போ லாக்கிச் சவைநடுவே—பொன்னைப்போற்
போற்றும் பதமளித்த போதமார் புங்கவனைப்
போற்றுமற் போமோ பொழுது.

(5) பணிந்தேனே "ஸ்ரீரங்கா சாரியார்" பாத
மணிந்தேனே யென்முடியி லன்பாய்—துணிந்தேன்
கியாதிமிகு பெற்றான் கிளர்சரித மோதத்
தியாகரா சத்தே சிகன்.

வேறு விருத்தம்.

சீர்த்திதருஞ் சங்கீதத் தெளிவுணர்விற் சிறந்திடுவோன்
திசுழ வெங்குங்
கீர்த்திமிகப் பெற்றதுவே கிளைத்தேவிட்த் தினும்பரவக்
கேத மில்லா
னர்த்ததமி ழாந்திரத்திற் கீர்த்தனங்க ளமைக்கவல்ல
னை சாம்ப
மூர்த்திகுரு நாதனிரு முளரிமல ரடியைமன
முன்னு வேனே.

## கோபால கிருஷ்ணபாரதியார் வணக்கம்.

வெண்பா.

நந்தன் சரித்திரத்தை நானிலத்தி லேவிரித்தா
நந்தம் பெறச்செய்த நாவலனா மெந்தன்கோ
பால கிருட்டினப் பாரதியார் பாதமலர்
பாலன்பு கொண்டேன் பணிந்து.

## மங்களம்.

இராகம்—சுருட்டி—தாளம்—சாபு

பல்லவி.

மங்களம் மங்களம் மங்களம்—ஜய ஜய
மங்களம் மங்களம் மங்களம் (ம)

அநுபல்லவி

மங்களம் மங்களம்பூத மெங்கினுநிறைந்தோனுக்கும்
மாலயன்பணியம்பல வாணநடேசனுக்கும்(ம)

சரணங்கள்

வல்லபைக்கணேசனுக்கும் வள்ளிமணாளனுக்கும்
தில்லைச்சிவகாமிக்கும் தில்லைக்கோவிந்தனுக்கும்(ம)

ஞானவாணிக்கும்புகழ் நால்வரெனுஞ்சீலர்க்கும்
மோனயோகியர்கட்கும் முத்தராகியயார்க்கும்(ம)

தசரதசுதராமச் சந்திரமூர்த்திக்கும்
பசுவெனவேநடித்த பங்கயக்கண்ணனுக்கும்(ம)

நாவலர்பாவலர்க்கும் நற்றமிழ்வாணருக்கும்
மேவுசங்கீதஞான விற்பனர்யாவருக்கும்(ம)

ஸ்ரீரங்கனுக்கும்கவித் தியாகராசன்றமிழ்க்கும்
பாரெங்குங்காக்குமன்னன் பரிக்குஞ்செங்கோலுக்கும்(ம)

சிறப்புப்பாயிரமுற்றிற்று.

---

உ

வேலுமயிலுந்துணை.

வழிபடுகடவுள்வணக்கம்.

வெண்பா.

செந்தமிழி லெக்கவியான் செய்தாலுந் தேன்போலே
வந்திடுநல் வாக்கெனக்கு வந்தருள்வாய்—சிந்தையினில்
நந்தா விளக்கெனவே நானுன்னைச் சிந்தித்தேன்
கந்தாகு காஷண்மு கா



உ

திருச்சிற்றம்பலம்.

நூ ல்.

# பத்தி விலாஸம்

சரித்திரவரலாறு

## சந்தானுசாரியார் புராணம்.

விருத்தம்.

சம்புவிற் றெளிந்த நந்தி யருள்பெறு சனற்கு மார
னம்புநல் வியாதற் கோத நவையறு மவைகூ தற்குப்
பம்பிட நவில்பு ராணம் பதினெட்டுட் பவிடியத்தி
லெம்பெரு மக்கள் காதை யிணையன திகழு மன்றே.

வசனம்.

ஸ்ரீமதகண்டாகார சச்சிதாநந்த சுத்த ஷாட்குண்ய பரிபூர ணராகிய உமாபதியான பரமேசுவரனால் வேதாகம சாத்திர புரா ணங்களை யுபதேசிக்கப் பெற்ற நந்தியெம் பெருமான் சனற்கு மார முனிவர்க் குபதேசிக்க வன்னவர் வியாஸபகவானுக் கோத அவ்வியாஸர் சூதபுராணீகருக்கு வோதியருளிய வைகளுள், பதி னெண் புராணங்களி லொன்ருகிய பவுஷ்யோத்தர புராணத்தி லுள்ள விச்சரித்திரத்தை அச்சூத புராணீகர் நைமிசாரண்ய வாஸிகளாகிய மஹரிஷி கணங்களுக்குச் சொல்லுகிருர்.

### கீர்த்தனம்.

இராகம்-சங்கராபரணம்-தாளம்-ஆதி.

பல்லவி.

பெற்ருன்சாம்பானது ச ரித்ரம் பத்திமிகுந்த
வற்ருப்பேரானந்த ச முத்ரம் அ! ஆ! (பெ)

அநுபல்லவி.

பெற்ருன்சாம்பான் ச ரித்ரம்
பேராநந்த ச முத்ரம்
கற்ருர்துதி வி சித்ரம்
கர்ணபாக்ய ப வித்ரம் (பெற்)

### சரணங்கள்

1. தில்லைநடேசனுக்குத் தொண்டு செய்வதேகதி
சேர்க்குமென் றுமனங் கொண்டு ஆலயத்திற்கு
நல்லமரங்கூடனைக் கண்டு வெட்டிப்பிளந்து
நல்கிசனனவாழ்வை விண்டு பதமடைந்தப் (பெற்)

2. ஈசனருளுமோலை வாங்கி யுமாபதியை
யேத்தியளித்துமகி ழோங்கி தன்னைப்பீடிக்கும்
பாசந்தொலையமன மேங்கி நின்றிடக்கண்ணுற்
பார்த்தேயெரிக்கபுவி நீங்கி பரத்தையுற்றப் (பெற்)

3. பேரும்பேரன்பனெனப்பெற்றான் குருவினருட்
பேறுந்தரிசனமும் பெற்றான் தொண்டெனும்பெருஞ்
சீருஞ்சிவச்செல்வமும் பெற்றான் தேவாதியாருஞ்
சேராக்குஞ்சிதச்சரண் பெற்றான் பெற்றிட்டவிந்த(பெற்)

### வசனம்

சூதபுராணீகர் தீண்டப்படாதவர் குலத்திலுற்பவித்த மெய் யன்புடையாரான பெற்றான் சாம்பனார் சரித்திரத்தை இவ்வாறு சுருக்கிச் சொல்லியதை நைமிசாரண்ய ரிஷிகள் கேட்டு இதை விரித்துரைக்க வேண்டுமென விண்ணப்பித்துக் கொள்ளவே சூத புராணீகர் சொல்லத் தொடங்கி முதலிற் சேரியின் வளப்பங் கூறுகிறார்.

### லாவணி-தாளம்-ஆதி.

சேரியின்சிங் காரம் விரித்துரைக்கச்
சேடனுக்கும பாரம் மாதந்தொறும்
மாரிபெய்துநிறைந்த வயல்கள்சூழுமுகிற்
சேருந்தென்னஞ்சோலைகள் சிறந்துமருவுமதிற்
பறையர்களொன்றாய்க் கூடி தங்கள்சொந்த
வுறவினருட னடி தங்கியிருக்கத்
திறமதாயொதியன் சிறந்தகால்களைநட்டுக்
குறைவிலாதவிழற் கொண்டுவேய்ந்திட்டக்
குடிசைகூரைக டோறும் சுரைபரங்கிக்
கொடிகள்படர்ந்து வேறும் தெருவதனிற்
கடிமாமிசங்களைக் கயிற்றிற்கோத்துவெயிற்
படக்காய்ந்திடநாய் பாதுகாத்திருக்குங்

கோழிக்குஞ்சுகண் மேயும் பசியடைந்து
பாழும்பூனைகள் பாயும் பாய்ந்தவுடனே
யேழைக்குஞ்சொன்றைவாயலீர்த்துக் கௌவியேவோட
சூழுநாய்களதனைத் துரத்திப்பிந்திவிரட்ட
கண்டகோழிகள் யாவும் மனதிற்றிகிற்
கொண்டுயிரங்கிக் கூவும் பறையரிதைக்
கண்டுபூனையைக்கொல்ல கனத்தகோபமாய்பல
தண்டுதடிகள்கரங் கொண்டுதேடியலைவர்
செடிகள்தழைகள் சேர்ப்பார் பலபுலையர்
குடிகள்கூடியே பார்ப்பார் குளத்துநீரை
வடியவிட்டுவனேக வலைகள்பறிகளாலே
விடியமட்டுமிரவின் மீன்கள்பிடித்தபின்பு
நண்டுநத்தைகள் பிடிப்பார் அதனைச்சுட்டு
வுண்டுகள்ளினைக் குடிப்பார் அதின்மயக்கங்
கொண்டுபலபறையர் கூச்சலிட்டுக்கிளம்பி
ரெண்டுவிழிகளுந்தி ரண்டுசிவந்தரும்பிப்
பாட்டுத்தென்பாங்கு பாடுவார் கையினாற்றாளம்
போட்டுக்கூத்துக ளாடுவார் இன்னுஞ்சிலர்கள்
மாட்டுத்தோலையும்பல வாத்தியங்களுக்கேற்ற
வாட்டுத்தோலையும்விசி வாகவிரித்திழுத்து
முளையிட்டுக்காய வைப்பார் கிழிந்தால்ந்த
தொளையைநரம்பாற் றைப்பார் சிலரிரவில்
விளைந்தபயிர்கசக்கி விரைந்துகள்ளுக்கடையி
லுளந்துணிந்துவளந்து வொன்றுக்குப்பாதியாகவே
கொடுத்துக்கள்ளினை வாங்கி மயங்கிவிழக்
குடித்துப்பிரமை யோங்கி வீடுவந்து
தடித்தனமாகப்பெண் சாதிதனையிழுத்துப்
பிடித்துக்கண்டபடியே வடித்துவிடுத்துபின்பு
ஆண்டையினிடங் கூறுவார் கேட்டதுமவர்
தாண்டிச்சிங்கம்போற் சீறுவார் எனக்குக்கூலி
வேண்டுமென்றுபணிந்து வேலைபலவாச்செய்து
ஆண்டையளித்தநெல்லை யடைந்துசேரிவருவார்
இத்தகையான சேரி தனிலேசிவ
பத்தியைமனங் கோரி பெற்றானென்று

சுத்தமானநல்ல சித்தமுடையசிவ
தத்துவத்தையேநி னைத்துவாழுமவர்
பெருமையதனைச் சொல்ல விப்பூமியி
லொருவருந்தர மல்ல

வசனம்.

சிதம்பர க்ஷேத்திரத்திற்குக் கீழ்பாலுள்ள இத்தகையான புலைச்சேரியில் சிதம்பரவெல்லைக்கு, அரசன்ஆளுகைக்குள் காவலாயிருந்துவந்தசாம்பான் வம்சத்தில்பிறந்து வசித்திருந்த வோர் சாம்பனுருக்கு இப்பெற்ருன் சாம்பனுர் புத்திரனுக வவதரித்து வளர்ந்து நற்குண நற்செய்கை ஈசுவரபத்தி வாய்ந்தவராய் குமாரப் பருவமுற்று தாய்தந்தையோடு வாழுநாளில் மணஞ்செயும் பருவம் நேர்ந்ததால், தன்முன்னோர் முறைப்படி தங்கள் குடியை அடிமையாய்க் கொண்டவரும் * தொண்ணூற்ருறு வேலி நன்செய் புன்செய்களோடு தனகனகவஸ்து வாகனுதிகளையுமுடையவரும் சிதம்பரத்திலே வசிப்பவரான ஓர் வேளாளருக்கு இப்பெற்ருன் சாம்பனுர் முறியோலை வரைந்தளித்து அடிமையாகி அவராற் றரப்பெற்ற பொருள் முதலியவைகளும் மானிய மனைக் கொல்லைகளையு மடைந்து தன் மரபிலேயே வோர் கன்னியை மணந்து, தன்னையடிமை கொண்ட ஆண்டைக்கே நல்லொழுக்கத்தோடு தன்மனைவி சகிதமாய் அடிமையாய் பண்ணைவேலை புரிந்துவந்தார்.

த்விபதை.

1. தில்லையி லொருவே ளாளருக் கடிமையாய்ச்
சிறந்து சேரியில் வாழ்ந்தார்
எல்லையி லாப்புலைய ரெவர்க்குமே லாயில்லற
வின்பக் கடலி லாழ்ந்தார்

2. செய்யும் பயிர்த்தொழில்கள் செழித்திடநோக்கியாண்டை
சிந்தை மகிழ்ந்து வாண்டார்
பொய்யுரைக்காதநல்ல மெய்யராகயாவரும்
புகழுந்தன்மை பூண்டார்

வசனம்.

இப்பெற்ருன் சாம்பனுர் தன்மனைவியோடு இல்லறம் புரிந்தும் தன்னை யடிமைகொண்ட ஆண்டையின் பண்ணைவேலைசெய்

* தொண்ணூற்ருறுவேலீ யென்பதைத் தத்துவமாய்க்கொள்க.

வதிற் சிறந்தாராய் சேரியில் ஈசனருளைப் பெறத்தக்கவரான வின்னவர் வேப்பங்காட்டில் வில்வம் முளைத்து வளர்ந்து செழித்தது போலும் வாழ்ந்துவருநாளில்.

விருத்தம்.

இன்னிலையிற் சாம்பனு ரெழின்மனைவி யொடுதேன்பா
 லென விசைந்து
மன்னிடவே சிதம்பரத்து மன்றுணட மாடிவளர்
 மாதே வற்கு
வுன்னதநல் விழவுநடந் திடத்தேரி லப்பெருமா
 னுற்று வீதி
தன்னில்வருந் தினமறிந்து சாம்பனுர் மனையவட்குச்
 சாற்று வாரே.

தண்டகம்.

1 தில்லைச் சிதம்பரத்தில் பெண்ணே
தேருந் திருநாளுமாம்
செல்லியரே வந்திடுவாயங்கு
சென்றேகண்டு கும்பிடுவோம்

சாம்பனுர்மனைவி.

2. சேரிப்புலையருக்கே பெருந்
தேருந்திரு நாளுமுண்டோ
யாரும்பரி கசிப்பாரிந்த
வாசையேனோ மன்னவரே

சாம்பனுர்.

3 சாமிதனைக் கும்பிடவே யாருஞ்
சாற்ருர் பரிகாசமே
பூமியிற் புலையரென்று லென்ன
புண்ணியஞ் செயவொண்ணுதோ

சாம்பனுர்மனைவி.

4. காதோலை கருவைமணி யில்லை
கழுத்திலு மொன்றுமில்லை
ஏதேனுமிருந்தா லல்லோ நா
மேகியே வந்திடலாம்

சாம்பனார்.

5. கூறைச்சேலையொன்றேபோதுங்கட்டிக்
கொண்டேயென் பின்வந்திடுவாய்
வேறேவொன்றுங் கேளாதடிநா
மேலான சாதியோடி

வசனம்.

இவ்வாறு இருவரும் சம்வாதம் பண்ணி வொருவாறு மன மிசைந்து சாம்பனார் தன் பத்தினியோடு சிதம்பர க்ஷேத்திரம் வரவே ஸ்ரீசிவகாம சுந்தரியோடு ஸ்ரீமந்நடராஜப் பெருமான் றிரு த்தேருக்கு பலவித வாத்திய கோஷங்களோடும் அநேக வேதியர் கள் பத்தர்கள் சூழ்ந்துவரவும் திருக்கோயிலைவிட்டு எழுந்தருளி வரும்போது சாம்பனார் கண்ணாரக்கண்டு முன்பண்ணிய சிவபுண் ணிய பரிபாகத்தாற் றன்னைமறந்து பரவசப்பட்டவராய் அன்பு பெருகி கண்ணீர்மல்கி மனமுருகி தேகம் புளகாங்கிதங்கொண்டு கரங்களைச் சிரஸாஞ்சலியாய்க் குவித்து வாயார வாழ்த்தி ஆன ந்த மேலீட்டினு லாடிப் பாடுகிறார்.

கட்கா.

பல்லவி

நாதனைக் கண்டாரே தன்
வேதனை விண்டாரே தில்லை (நா)

சரணம்.

கண்டார் மகிழ் கொண்டார் மனம்
விண்டார் களி யுண்டார் பின்
ஆடினார் பல பாடினார் அன்பு
கூடினார் கண் ணுடினார் மனம்
பதித்தார் நின்று குதித்தார் பல
துதித்தார் உளந் திதித்தார் இப்படி (நாத)

வசனம்.

சாம்பனார் இவ்விதம் ஆனந்தங்கொண்டவராய் நிற்கசுவாமி தேரிலமர்ந்து வீதிவலம் வருவதுடன் வேதியர்களையு மடியார் குழாங்களையும் தரிசித்து மறுநாள் நடக்கும் மஹாதரிசனத்தை கோயிலினுட்சென்று கண்ணாரக் கண்டு தரிசிக்கத் தகாத இழி

குலத்திற் பிறந்திருக்கின்றேமே யென்று மனம் வருந்தினவராய் தனது பத்தினியோடு சேரிக்கு வரும்போது சாம்பனார் ஸ்ரீமந் நடராஜப் பெருமானது திருக்கோலக் காக்ஷியை இத்தனை நாளாக வந்து தரிசிக்காமல் வாணாளை வீணாக்கினேமே யென்று மனம் வருந்துகிறார்.

இராகம்-பைரவி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

காணமல்யானிருந் தேனே எந்தன்
வாணாளைச்சேரியில்வீணாக்கி னேனே (காண)

அநுபல்லவி.

மாணருமன்பது தோணுமம்பல
வாசனை பரை நேசனைஜக
தீசனை நட ராசனைக் கண் (காண)

சரணம்.

தாழும்புலையரைச் சதமென்று வெண்ணி
சாருங்கொலைபவஞ் சந்ததம் பண்ணி
சூழும்வயல்களைச் சொந்தமாய் நண்ணி
சுற்றியேயென்வ யிற்றினைவளர்த்
துற்றனனெதும் பெற்றிலேனீனன் (காண)

வசனம்.

சாம்பனார் இவ்விதம் மனம் வருந்தி நடந்து தனதுபத்தினியோடு சேரியடைந்து தான் தரிசித்த ஈசன் திருவருள் பதிந்து யாதொன்றினும் பற்றற்றவராய் ஆண்டைவீட்டு வேலை பயிர்த்தொழில்கள் யாவையு மறந்து ஈமெந்தவிதத்தி லீசனுக்கு ஆட்படலாமென்று யோசனை பண்ணுகிறார்.

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ஆதி.

பல்லவி.

எந்தவிதத்திலாட்படு வேனே யான்
ஈனப்புலையனாய்ப்பிறந் தேனே இனி (எந்)

அநுபல்லவி.

அந்தராதியோர் வந்தடிபணியும்
அம்பலமாடிய வெம்பெருமானுக்கு (எந்)

சரணங்கள்.

1. கொடுங்கொலை செய்திடுங் குலந்தனிற் பிறந்து
குவலயந்தனிற்பாவியா னேனே
தடங்களில்லாமற் ரூழ்ந்து பணிந்து
தஞ்சமென்றே யடைந்து நானே (எங்

2. ஆலயத்துள்ளே யடைந்து தரிசனம்
யான்கொளவே யருக ணுவேனோ
காலன்வந்தெனைப் பாசத் தாலேயென் னுயிரைக்
கட்டியிழுக்கயான் போவேனோ (எங்)

3. ஈண்டிந்தவாழ்வு மீனரின்சேரியு
மென்றுவொழித்துயான் வாழ்வேனோ
ஆண்டையினடிமை யாகவிருந்துயான்
ஆட்பட்டு வினிமேற் ரூழ்வேனோ (எங்)

வசனம்.

சாம்பனு ரிவ்விதம் வருந்திய அன்றிரவில் ஸ்ரீமந் நடராஜப் பெருமான் இவரை யடிமைகொள்ள திருவுளங் கூர்ந்து சாம்பனார்க்குவோர் கனவு நிகழுமாறு செய்தருள்கிறார்.

விருத்தம்.

முன்செய்த புண்ணியத்தின் முதிர்ச்சிவந்து மூண்டிடவே
வுணர்வு முற்றி
யென்செய்து வீசனுக்காட் படுதலெனு மவர்தனக்கன்
றிரவி லீசன்
றன்செயலாற் கன்வினிற்கோ யிலுக்குவிற கினைவெட்டிச்
சார்தல் கண்டு
வின்செயலீ தெம்பெருமாற் கிசைந்ததென வத்தொண்டி
லிசைந்திட்டாரே.

வசனம்.

சாம்பனர் அன்றிரவில் ஈசனருளால் தான் காடுகளிற்சென்று பட்ட மரங்களைப் பார்த்து வெட்டிப்பிளந்து கட்டுகட்டித் தலையிற்றாக்கித் தில்லைக் கோயிலுக்குச் சென்றுஸ்ரீமந் நடராஜப் பெருமானுக்குத் திருவமுதமைக்கும் வண்ணம் விறகளிப்பதாகக்

கனவுகண்டு விழித்திடவே பொழுதும் விடிந்ததுசாம்பனார்தான் ஆட்படுதற்கு இவ்வழிதானீசன் கனவின்வழியாக அருளினரோ வென்று எண்ணி சந்தோஷங்கொண்டு மெய்சிலிர்த்து தன்னைம றந்து விறகளிக்குந் தொண்டு நம்முடைய சாதிக்கேற்றது வென்று நெற்றியிற் றிருநீறணிந்து கரத்தி லரிவாள் கோடரி யெடுத்துக் காட்டிற்குச் சென்று மரம்பார்த்து வெட்டிப் பிளந்துகட்டு கட்டித் தலையிற்றூக்கி கோயிலுக்கு கொண்டுபோகிற திருத்தொண்டி லீடுபட்டு தில்லைக்கோயிலுக்குச் சென்று கீழக்கோபுரவாயில் நின்று கோயிலாரைக் கூப்பிட்டுச் சொல்லுவது.

இராகம்-தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி.

ஆண்டே? ஆண்டே? ஆண்டே? பெற்றான்
அடியேன் வந்தேனே

அநுபல்லவி.

ஈண்டுநானேழை யேதோகொணர்ந்தேன்
இந்தவிறகுதனை யெடுத்தேகுவீரே (ஆண்)

சரணம்.

விலையொன்றுந் தரவேண்டா மிதற்காக
வேண்டேனுண்மை யாண்டே அன்பு
நிலையுடையேனுதலி னுல்விறகு
நிதமளிப்பே னாண்டே
உலையுறுமடைப்பள்ளிக் குதவும்படியிதனை
யுதவினேன்றிருவமு தாகுற்றதற்காகும் (ஆ)

வசனம்.

சாம்பனார் கோயிலிலிருந்து வந்த அதிகாரி யொருவரிடத்தில்தன் எண்ணத்திலுள்ளதைத் தெரிவித்துதான் இனிநாடோறும் விறகளிக்குந் திருத்தொண்டைச் செய்துவருவதாய் விண்ணப்பித்துப் பணிந்து விறகை, யெடுத்து கோயிலின் மடைப்பள்ளிக்குச் சேர்க்குமாறு செய்தபின்னர் சாம்பனார் உச்சிக்காலப் போது வரையினுந் தங்கி சுவாமிதரிசனம் பண்ணிவரும் சிவபத்தர்களைக்கண்டு, தரிசனம்பண்ணிவணங்கிதான் ஆலயத்துள்ளே சென்று தரிசிக்கத் தகுந்த சாதியல்ல வென்பதை மனதிலெண்ணி வருந்தினவராய் தில்லை வீதியை வலம்வருவார்.

ஸ வா ய்

ஆனந்தமேலீட்டி னால்வீதியைவல
மாகவந்தீசனைப் பாடுவார்
தானுந்தவீசனைக் காண்பதென்றோவெனத்
தன்மயமாய்நின்று வாடுவார்

வசனம்:

இவ்வாறு வீதிவலம்வந்து சன்னிதானத்திற் கெதிரே நின்று சாம்பனர் கூறுவது.

இராகம்-ஸ்ரீராகம்-தாளம்-சாபு.

பல்லவி.

பிறவாத வரந்தாரும் பிறந்தாலுமை
மறவாத வரந்தாரும் (பி)

அநுபல்லவி

அறவாவுன் னாலயத்தி லடைந்துனைத் தரிசிக்க
வருகனல்லாதீச னாகவே புவியினிற் (பி)

சரணங்கள்.

பாவஜன்மத்திற் பிறந்தேன் யாவருமீனப்
பறையனெனவே சிறந்தேன்
பூவுலகதனிலே புலையனாய்ப் புண்ணியங்கள்
புரியாதன்பின்வழி தெரியாதபடியினிப் (பி)

பேதையான் முன்சன் மத்திலே செய்தபாவத்தாற்
பிறந்தே னீசகு லத்திலே
ஏதுமறியாவேழை யென்னைமனதிலெண்ணி
யின்னருள்செய்தடியே னினிமேலிவ்விதமண்ணி (பி)

தொண்டுசெய்கிறே னுனக்கே ஈசனேயென்முன்
றோன்றிச்செய்யரு ளெனக்கே
நண்டுநத்தைகடனை நான்பிடித்துத்தினம்
நாறும்புலாலுண்டு நரகத்திற்காளாகப் (பி)

வசனம்.

இவ்வாறு சாம்பனார் ஈசனை வேண்டிக்கொண்டு நாமபஜனம் பண்ணினவராய்ச் சேரிக்கு வருவார் இவ்வண்ணஞ் செய்துவரும் மூன்றும் நாளிலே.

ஸ வா ய்.

பட்டமரங்களைப் பார்த்துப்பரிவுடன்
வெட்டிக் கட்டித்தலை யெடுத்தார்
நட்டமாடுந்தில்லை நாதனிாலயம்
நண்ணிப்பணிந்துமே கொடுத்தார்

வசனம்.

சாம்பனார் விறகளித்து, ஈசனைத்தரிசனம் செய்துவரும் பத்தர்களைத்தரிசனம் பண்ணிவிட்டு வீதிவலம் வரும்போது ஸ்ரீமந்நடராஜப் பெருமான், சாம்பனார் அன்பிற் கிசைந்து, சாம்பனார், ஜீவனார்த்தத்தை நடத்தவேண்டியது நங்கடமை யென்று திருவருள் சுரந்து. தெற்குவீதியிற் றன் சன்னிதானத்திற் கெதிரே சாம்பனார் கண்ணுக்குத் தோன்றும்படி இரண்டுபணம் கிடக்கச் செய்யவே, சாம்பனார் கண்டு, யாரோ கைதவறிப்போட்டுச் சென்றிருக்கிறார்க ளென்று ஐயப்பாடுற்று நிற்குங்கால் ஈசன் அசரீரியாக நின்று சாம்பனார் செவிகேட்க, அப்பா சாம்பா! உனக்கென்றே நாமளித்தோம் நீ இதனையெடுத்து உன் ஜீவனார்த்தத்தை நடத்திக்கொண்டு, எனது தொண்டையும் செய்வாயென்று கூறவே, காதிற்கேட்ட சாம்பனார் மனமகிழ்ந்து, பாழும்புலையனாகிய வெனக்கும் ஈசன் அருள்செய்தாரோ வென்று ஆனந்த முற்று, அவ்விரண்டு பணத்தையும் எடுத்து, தனக்கு வேண்டியதைக் கடையில்வாங்கி தன் குடும்பத்தை நடத்திக் கொண்டு தொண்டையும் நடத்தவே, அநுதினம் சாம்பனாருக்கு இரண்டுபண மளித்து ஈசன் சாம்பனார் ஜீவனார்த்தத்தையும் நடத்தியருளினார். பின்னர் மெய்யன்பின் மேலீட்டினால் சாம்பனார் தன்னையடிமை கொண்ட ஆண்டையின் பண்ணைத்தொழிலை முற்றுமே ஒழித்தாராய் விறகுவெட்டிப் பிளந்து கோயிலுக் களிப்பதிற் சிறந்து அத்தொண்டினி லூக்கமுற்று இயற்றிவரவே சிலநாட்குள் சாம்பனாருடைய மனைவியான சாம்பச்சி இதனை யோர்ந்து ஓர்நாள் காலையில் சாம்பனாரைக் கண்டு பணிந்து நயமாகக் கேழ்க்கிறாள்.

விருத்தம்.

அன்றசிதப் பரமடைந்தம் பலவாணன் றிருத்தேரி
லாரும் போது
நின்றுகண்டு, தரிசித்த நாண்முதலாய் நிலைதவறி
நீர் பிரிந்து

துன்றுநம தாண்டைவயற் பயிர்த்தொழிலைவிடுத்துநிதஞ்
சோலை புக்கிப்
பொன்றுபட்ட மரவிறகுகோயிலுக்குக் கொடுப்பதென்னே
புகலு வீரே.

துக்கடா.

1. என்னருமை மன்னவரே யித்தனை நாளா
யில்லாதவேலை செய்வதென்னவென்மணவாளா
மன்னுதிருத் தில்லையதிற் றேரினைக் கண்டு
வந்தநாண்முத லாய்மன மாற்றமே கொண்டு

2. அடிமைகொண்டு வாளுநமதாண்டை வேலையே
யாதும்புரி யாதுநீர் வீணன வேலையே
விடியுமுன்னே பட்டமரந்தன்னை வெட்டியே
விறகுபிளந் தேயிறக்கி விரைந்து கட்டியே

3. தில்லைநகர்க் கோயிலுக்குச் சென்ற ளித்துமே
தினமும் வருகின்றீரே சிந்தைக ளித்துமே
நல்லதோயிவ் வேலையினசாதி நமக்கே
நானெடுத்துச் சொல்லுவதோ ஞாய முமக்கே

4. ஆண்டையறிந்தாலுமை சும்மாய்விடு வாரோ
ஆகாதவேலைக்கு சம்மதப்படு வாரோ
தாண்டிப்புலிபோலச் சிறிதும்மைத் தண்டிப்பார்
தக்கவேலைசாதிக்கிதோவென்று கண்டிப்பார்

5. இந்தவழக் கந்தனைமறந்தினி மேலே
ஏற்றதொழிற் செய்திடுவீரெப்போதும் போலே
சிந்தனைசெய் தேயெடுத்து ரைத்தேனன் பாலே
தீதுவருஞ் சொன்னேன்றவறாதுமுக் காலே

வசனம்

இவ்வாறு சாம்பச்சி கூறுவதைக் கேட்ட சாம்பனார் சாம்பச்சியைப் பார்த்துக் கூறுகிறார்.

விருத்தம்.

வேலைநிகர் விழியுடையாய் மெல்லியாளே
மிகத்தெளிந்து மதியெனக்கு விளங்கச் சொற்றாய்

வேலைவிட முண்டதிருத் தில்லைமேவும்
விமலனிடத் தன்பதனின் மிகுந்துசெய்யும்
வேலையெனுந் தொண்டதற்கு மேலோ வாண்டை
வேலையதனுற் பயனென் விளம்புவர்யான்
வேலைவளைந்திடு புவியின் வேட்கையுற்று
வீழ்ந்திடேன் பொய்வாழ்வி லாழ்ந்திடேனே.

கண்ணிகள்.

பத்திபண்ணும விருப்பேனே யான்
பரமன்றிருத் தொண்டைவிடுவேனே

பத்திபண்ணும விருப்பேனே பெரும்
பாதகனுயெங்குந் திரிவேனே

பத்திபண்ணும விருப்பேனே மாயா
பாசத்திலகப்பட்டு தவிப்பேனே

பத்திபண்ணும விருப்பேனே சிவ
பஜனம்பண்ணுமற் காலங்கழிப்பேனே

பத்திபண்ணும வீருப்பேனே சேரிப்
பறையரைப்போல் வீணுய்ப்போவேனே

பத்திபண்ணும விருப்பேனே தேரிற்
பார்த்தபரமனையான் மறப்பேனே

பத்திபண்ணும விருப்பேனே கால
பாசத்திலகப்பட்டு சாவேனே

பத்திபண்ணும விருப்பேனே சிவ
பதத்தினிலிரண்டறச் சேரேனே.

விருத்தம்.

இந்தவிதஞ் சாம்பனு ரெடுத்துக்கூற
வேந்திழையாள் மனங்கலங்கி யிவர்க்கிம்மாற்றம்
வந்தவிதந் தனையறியென் மாயமோயிவ்
வையகத்தி லில்லாத வழக்கமென்று
சிந்தைமிக வருந்திபறச் சேரிவாழுஞ்
சிலரிடத்தி லிதையெடுத்துச் செப்பவன்னர்.
விந்தையிது வெனநகைத்து மெய்ச்சாம்பற்கு
விதிசொல்வார் மேவிபுத்தி மதிசொல்வாரே.

## தண்டகம்

1. புத்திமிகுந்து போச்சோ பெற்று
புண்ணியம்பெற லாச்சோ
பத்திமிகுந்து போச்சோ பெற்று
பாவங்கள்விட்டுப் போச்சோ

2. சாம்பலைப்பூ சினையே பெற்று
சாதியைமறந் தனையே
பாம்பனைப்பே சினையே பெற்று
பறயரைவெறுத் தனையே

3. சேரியை மறந்தாயே நமது
தெய்வத்தைத் துறந்தாயே
யாருடைபோ தனையோ நீ
யாருக்குஞ்சிறந் தனையோ

4. தலையதில்விற கெடுத்தாய் தில்லைச்
சாமிக்குநிதங் கொடுத்தாய்
புலையரின்றொரு லிதுவோ வுந்தன்
பொய்யானவழி யிதுவோ

5. ஏண்டாயிவ் வழியே பெற்று
இதனால்வரும் பழியே
ஆண்டைவிடுவா ரோடா உன்னை
அடக்கிடுவார் போடா

### வசனம்.

சேரிப்புலையர்களிற் சிலரிவ்வாறு பரிகாசஞ் செயவதைக் கண்டு இரங்கி அப்புலையரைப் பார்த்து அந்தோ அடே! ஈனப் பறையர்களே? இழிந்தகுலத்திற் பிறந்து இழிவான பாவத்தைப் புரிந்து ஈசனைமறந்து இன்னலிலாழ்ந்து இச்சையூட்டும் வாழ்விற் சூழ்ந்து இயற்றுங் கொலையிற் சிறந்து வீணாகக்கெட்டு அந்தத்தில் நரகானுபவங்கொண்டு பின்னும்பிறந்து பின்னும்இறந்து கஷ்டப்படுவதா லென்ன பலனுண்டு? ஒன்றுமில்லை ஆதலால்நான் சொல்லுவதைக் கேளுங்களென்று அன்போடு கூறுகிறார்.

### விருத்தம்.

கண்டதைக் கண்டு வீணாய்க் கழனியில் வேலைசெய்து
வுண்டதை யுண்டு நாளு முறங்கியே கொலைபுரிந்து

மண்டியவிட ருருதீர் மகிழ்ந்துவெம் பெம்மா னுக்குத்
தொண்டினைச் செய்வீராகிற் சுகமதைப் பெற்றுய் வீரே.

இராகம்-மத்யமாவதி-தாளம்-ரூபகம்.

பல்லவி

நடராஜனைப் பணிந்து தொண்டு
நாமியற்றுவோம் வாரீர் தில்லை (நட)

அநுபல்லவி

படமாராதி சேடனும் புலியும்
பரவிப் போற்றிடும் பாதனுகிய (நட)

சரணங்க

1. கண்ணுங்கருத்துட னுற்ருேம்
கையுங்கால்களும் பெற்ருேம்
திண்ணமான பத்தியைச்செய்து
தேவாதி தேவனைத் தேடிப் பாடி (நட)

2. ஈனசாதிதன்னிற் பிறந்தோம் சுக
தீசனைமன மறந்தோம்
ஞானமடையும் நல்வழி கொண்டு
ஞாலமாயையைக்கண்டு விண்டு (நட)

3. இந்தவாழ்வு இன்பமே போல
இருந்துபின்னர் துன்பமே
தந்திடுமென்ப தனுக்குச்சாக்ஷி
ஜனனமரணமே கண்சாக்ஷி (நட)

வசனம்.

இந்தவிதம் சாம்பனூர் பறையர்களைப் பார்த்து தொண்டு செய்யும்படி நற்புத்திகூறவே, கேட்ட புலையர்கள் சாம்பனுரைப் பார்த்து கூறுகிருர்கள்.

விருத்தம்.

ஏருத மடையதனி லிருநீ ரேற்ற
விரண்டுதலை யிட்டாலு மேறிப்போமோ
கூருதபுத்திதனை மகிழ்ந்து கோரிக்
கூறவந்தாய் நமதுகுல மதற்குமிக்க

மாறுக விருப்பதனுற் செய்யமாட்டோ
மனமுமதிற் சாராது மயங்கிடாது।
தூறுகுமானிலத்தி லாண்டை சண்டை
தொடுப்பதன்றி வுன்குடியைக் கெடுப்பார்பாரே.

வசனம்.

புலையர்கள் சாம்பனுரைப் பார்த்துக் கூறுவது.

லாவணி.

1. பெற்றுவுந்தனது பேச்சு மிகப்
பெருத்தக்கதைபோ லாச்சு பலரும்பழி
பேசுதற்கிட மாச்சு
இதுமிகவு மேச்சு அட(பெ)

2. ஆண்டைகண்டாற்சண்டைதொடுப்பார் உன்னை
அடித்துபுத்தி கொடுப்பார் தொண்டினை
யனுதினம்வந்து தடுப்பார்
உன்குடியைக் கெடுப்பார் அட(பெ)

3. ஆடுமாடுகளை யடிப்பாய் வய
லாமைநண்டுகள் பிடிப்பாய் தினங்கள்ளை
அல்லும்பகலுங் குடிப்பாய்
பள்ளுதனைப் படிப்பாய் அட(பெ)

4. பத்திபண்ணத்தெரிந் திடுமா அந்தப்
பரனருள்புரிந் திடுமா நாம்செய்த
பாவங்களொழிந் திடுமா
சிவபதம்வந் திடுமா அட(பெ)

5. தொண்டுசெய்வதனை நீக்கு அதைத்
தொலைத்திடவழி நோக்கு பண்ணைப்பயிர்த்
தொழிலிற்பொழுதைப் போக்கு
இதுவேகுரு வாக்கு அட(பெ)

6. பண்ணைதொண்ணூற்று வேலி தனைப்
பயிர்செய்தாலாண்டை கூலி மிகக்கொடுப்பார்
பறையரில்புத்தி சாலி
தொண்டுசெய்தால் கேலி அட(பெ)

7 நீசச்சாதிவிட்டுப் போமா தொண்டு
நெறியையடைய லாமா உனதுமனம்
நிலைப்படுதலும் ஆமா
பத்தியும்வச மாமா அட (பெ)

வசனம்.

புலையர்கள் இவ்வாறு கூறுவதைக் கேட்டசாம்பனுர் அப் புலையர்களைப் பார்த்துக் கூறுகிருர்.

இராகம்-எதுகுலகாம்போதி-தாளம்-ஆதி.

பல்லவி.

நாதனைப் பணிந்திடுஞ் சாதியென்றேயிந்த
நானிலந் தனிலுண்டோ

அநுபல்லவி.

சாதனையாகநீங்கள் சாற்றினுற்பயனில்லை
தாண்டமாடுமென் ருண்டவனுன தில்லை (நா)

சரணங்கள்.

1. ஆகமசாத்திரம் வேதங்கள் நாலும்
அரியவுபநிடத மும்பல நூலும்
ஏகமாகத் தெரிந்தேவுணர்ந் தாலும்
ஏதும் பல னிலை
ஓது நல மிலை. (நா)

2. காக்ஷியான் கன தருமந்த டாகம்
கடிமலர்வனமட மியற்றுதல் யாசம்
தீக்ஷைஷிதனுற் றேவேந்திர போகம்
சிறந்தனுபவித்து பின்
பிறந்திடவேண்டு மென் (நா)

3. நாமபஜனத்தினுல் நண்ணலாம் பத்தி
நாதன்பத்தியினுலே ஞானமும் சித்தி
நேமஞானத்தினுலே நேருமே முத்தி
நேமிசூழு மிந்த
பூமியிலா னந்த (நா)

வசனம்.

என்று சாம்பனூர் ஜாதியினாலே யாதொன்றுமில்லை ஞானமடைந்தவனே மோக்ஷத்திற்குப் பாத்திரனாவான் ஆனதினாற் றொண்டு செய்வீராகிற் சுகமடையலாமென்று கூற, புலையர்கள் சாம்பனூருக்கு ஏதோ பிசாசு பிடித்திருக்கிறதுவென்று நினைத்து அவரையகன்று தங்கள் பண்ணைத் தொழிலைப் பார்க்கச் சென்றனர். பின்னர் சாம்பனூர் பறையர்களுக்கு என்ன நல்வழியுரைத்தாலும் பத்தியென்பது தெரியவில்லையேயெனவருந்திதான் என்றும் போலவே காட்டிற்குச் சென்று விறகுவெட்டிப் பிளந்து தலையிற்றாக்கி ஆலயத்தை நோக்கிச் செல்லும்போது ஸ்ரீமந்நடராஜ மூர்த்தியின் குஞ்சித சரணத்தை தியானித்தவராய்ப் போகிறார்.

ஸ்ரீகுஞ்சித சரணஷ்டகம்.

இராகம்-யமுனகல்யாணி-தாளம்-ஆதி.

1. அதிசுந்தரகுஞ்சித பாதம்
ஆநந்தாகரசுக பாதம்
விதிகேசவனுந்தொழு பாதம்
வேதாகமமுணராப் பாதம்

2. கநகசபையிலாடும் பாதம்
கண்டோர்மனமிழுக்கும் பாதம்
ஸநகாதிகள்பணியும் பாதம்
சச்சிதாநந்தமய பாதம்

3. காலனைச்சாடியமென் பாதம்
கசிந்துருகப்பண்ணும் பாதம்
சீலமூவாயிரர்பணி பாதம்
சிவகாமிவருடும் பாதம்

4. வெண்டையங்கிண்கிணியணி பாதம்
வீரசங்கிலிபுனை பாதம்
தண்டைநவமணிதளர் பாதம்
தானவருயிர்வாங்கும் பாதம்

5. மாதவன்கண்மலரார் பாதம்
வானவரனுதினந்தொழு பாதம்

ஆதிசேடன்முடியார் பாதம்
அரும்புலியஞ்சலிசெய் பாதம்

6. மணிவாசகர்மருவின பாதம்
மாதவர்கள்வாழ்த்தும் பாதம்
தணியாத்துயரைத்தவிர் பாதம்
தாழ்ந்தோர்க்கின்னருள்செயும் பாதம்

7. தூதுசென்றசுந்தர பாதம்
சோகதாபந்தீர்க்கும் பாதம்
சாதுஜனங்கள்பணி பாதம்
தாண்டவமாடியபொற் பாதம்

8. சஞ்சிதமதைத்தீர்க்கும் பாதம்
சர்வபூதங்களிலமர் பாதம்
செஞ்சொற்கவிதனக்கருள் பாதம்
த்யாகராஜன்றினந்தொழு பாதம்

வசனம்.

இவ்விதம் பத்திவாய்ந்த சித்தமுடையவராய் தொண்டியற்றிவருநாளில், சாம்பனுர் மனைவி தன்கணவனது நிலைமைதனையறிந்து மனம்வருந்தி அடிக்கடி சேரியிலுள்ள பறையர்களிடத்திற் குறைகூறிவரவே சேரிப்புலையர்கள் ஓர்நாள்கூடி யோசித்து, பெற்ருனை, வழிப்படுத்த வேண்டியதவசியமென்று நிச்சயித்து, சாம்பனுரைக்கண்டு கேழ்க்கிருர்கள்.

விருத்தம்

காட்டிலுள்ள மரங்களைக் கண்டுவெட்டிக்
கட்டுகட்டிச் சும்மாடு கட்டித்தூக்கி
யோட்டமதா யோடிதின முண்மையாக
வுற்றபெருங் கவலையொடு கோயிலுக்கு
நாட்டுமன வெழுச்சியினல் நல்லன்பாலே
நண்ணியளித் திடுவதனு லென்னலாப
மீட்டுகின்ற வழியிதுவோ வென்றேகூடி
யெடுத்துரைக்கும் புலையர்களுக் கெதிர்சொல்வாரே.

## தென் பாங்கு.

புலையர்கள்.—பூவரசுவிறகுகொண்டுப்
போட்டுவந்தா லெங்களுக்குக்
* காவலனார்பதமடைந்து! காக்ஷிதருவாயோ 1

சாம்பனர்:—பூவரசுவிறகு கொண்டுப்
போட்டுவந்தாற் போதமுற்றுப்
* பூவரசனுகவிந்த! புவியில்வாழலாமே. 2

புலையர்கள்:—பாலைவிறகு வெட்டிப்
பரமனுக்கே கொடுத்துவந்தால்
* மாலைநேரக்கள்குடிக்க! வகையேதுமுண்டோ 3

சாம்பனர்: பாலைவிறகு வெட்டிப்
பரமனுக்கிட்டால் ஞானப்
* பாலைக்குடித்திடலாம்! பாழுங்கள்ளுமேனோ 4

புலையர்கள்:—அத்திமர விறகுதனை
அளித்துவந்தாலுந் தனுக்குச்
* சித்திதருமோவுனது! சித்தநினைவெல்லாம் 5

சாம்பனர்:—அத்திமர விறகுதனை
யளித்துவந்தாற்றிண்ணமுடன்
* அத்திமுகனைப்பெற்றோ னடியடையுலாமே 6

புலையர்கள்:—வாகைவிறகுதைப்பிளந்து
வண்மையுடனளித்து வந்தால்
* ஆகுவையோபணக்கார னுகபுவிதனிலே 7

சாம்பனர்:— வாகைவிற களித்துவந்தால்
மாயைதனை வென்றுசய
* வாகைமாலையணிந்தெவர்க்கு மன்னனுகலாமே 8

புலையர்கள்:—பட்டதொரு கருவைமரம்
பார்த்துவெட்டிப்பிளந்ததனைக்
* கட்டுகட்டிகொடுத்துவந்தாற் காசுபணமுண்டோ 9

சாம்பனர் —கருவை மரமதனைக்
கண்டுவெட்டிப் பிளந்தளித்தாற்
* கருவையொழித்திடலாம்! காசுபணமேனோ 10

---

* இக்குறி யிட்டவைகளை தாளபத்தமாய்ப் பாடவும்.

வசனம்

புலையர்களுக் கிவ்வாறு விறகுவெட்டி யளிக்கும் திருத்தொண்டின் பெருமையை சாம்பனர் ஞானவழியாக போதிக்கவே, இதனையுணராது புலையர்கள் நாம் கேட்பதற்கெல்லாம் மாற்று மொழி சொல்வதிற் சிறந்துவிட்டானென்று வெறுத்து, அன்று ஒருவாறுவிடுத்து தங்களுடைய பயிர்வேலை முதலியவைகளைச் செய்யப் போய்விட்டார்கள் பின்னர், தன்னை நிந்தித்து அகன்ற புலையர்களை யெண்ணி சாம்பனர் வருந்துகிருர்.

விருத்தம்

மிக்கநீர் தன்னைத்தேக்கி விழலுக்கு விறைப்பான் போலுங்
குக்கலின் வாலிலுள்ள கோணலை நிமிர்ப்பான் போலு
மிக்குபோ லாகவேம்புக் கினியதேன் சொரிவான் யோலும்
பொக்கமார் புலையருக்கும் போதமேன் புகன்றே னந்தோ.

வசனம்.

இவ்வண்ணம் வருந்தின சாம்பனர் பின் தமது திருத்தொண்டினி லீடுபட்டுச் செய்துவர மற்ரோர்நாள் சாம்பனரை வழிக்குக் கொண்டுவருவதில் முயற்சியுடைய புலையர்கள் சேர்ந்துசாம்பனர் முன்னரேவந்து கூடவே, சாம்பனர் அப்புலையர்களைப்பார்த்துக் கூறுகிருர்

விருத்தம்

தொண்டுசெயும் படிபலவாய்ச் சொன்னே னீங்கள்
சொன்ன வெந்தன் மொழியதனைத் துறந்தீரந்தோ
நண்டுநத்தைப் பிடித்ததனை நலியக்கொன்று
நனிமகிழ்வா யுண்டுபெரு நரகந் தன்னைக்
கொண்டுவதிற் கிடந்துழலுங் கொள்கையுற்றீர்
கொஞ்சமு நான்கூறுமதி கொண்டீ ரல்லீர்
துண்டமதிச் சடையானின் றூயநாமஞ்
சொல்லுவீ ருங்கள்வினை வெல்லுவீரே.

இராகம்-மோகனம்-தாளம்-ஜம்பை.

பல்லவி.

சிவநாமபஜனமது செய்வதுசி லாக்யம்
பவமகன்றுவனுபவிக்கலாம் பரம போக்யம்(சிவ)

சரணங்கள்.

1. அவிவேக முதலான வாணவத்தைப் போக்கும்
அஞ்சவருங் காலனைய கற்றிபய நீக்கும்
பவசாகர மொழித்து பரமசுக மாக்கும்
பகலிரவு நீங்கிபர மானந்தந் தேக்கும் (சிவ)

2. மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை மாளும்
மக்கள்பசு மாடுவெனு மையலது மீளும்
எண்ணமதி லீசன்வந்தி ருந்துகுடி யாளும்
இன்றியமை யாததிது வெவர்க்குமெந் நாளும்

3. நிகழுங்கலி யதனில்வேத நெறியதனைப் பேர்லே
நீண்டதவம் யோகமதி லிணங்கிசெய்வ தாலே
திகழும்பத மதனையடைந் திடுதலிலை யாலே
த்யாகன்சொலும் படிமனதிற் சிந்தித்துவாக் காலே(சிவ)

வசனம்

சிவநாமபஜனத்தின் பெருமையைச் சொல்லி, சாம்பனார், சேரிப் புலையர்களை, சிவநாமபஜனம் செய்யும்படி வற்புறுத்திச் சொல்லவே, சாம்பனார் சொல்லுவதற்கு நேர்மாறாகச் சொல்லுகிறார்கள்.

அகவல்.

சாம்பனார். சிவாசிவாவெனச் செப்புவீர் நீரே
புலையர்கள். லவாலவாவென நவிலுவோம் நாமே
சாம்பனார். குஞ்சிதபாதத்தைக் கூறுவீர் நீரே
புலையர்கள். கஞ்சிதனைப்பார்க்கிலுங் கள்ளுமிக மேலே
சாம்பனார். அம்பலமென்றே யறைகுவீர் நீரே
புலையர்கள். சம்பளங்கொஞ்சந் தந்திடு வீரே
சாம்பனார். புலியதளானைப் போற்றுவீர் நீரே
புலையர்கள். எலியதைப்பூனை யிரையெனக் கொளுமே
சாம்பனார். தொண்டுதனைச்செய்தாற் சுகமுறு வீரே
புலையர்கள். நண்டுதனைச்சுட்டால் நாமுண்ண லாமே
சாம்பனார். சிதம்பரநாதனைச் சிந்திப்பீர் நீரே
புலையர்கள். பதம்பெறவயலைப் பறம்படிப் போமே
சாம்பனார். அணவருஞான மிருதமுண் பீரே
புலையர்கள். பனைமரக்கள்ளைப் பருகிடு வோமே

சாம்பனார். நாமத்தைச்சொல்லி நலமடை வீரே
புலையர்கள் ஊமத்தங்காயை யுண்டவர் நீரே
சாம்பனார். நீற்றினையெடுத்து நெற்றியி லிடுவீர்
புலையர்கள். சேற்றினைப்பூசித் திகழ்ந்திடு வோமே
சாம்பனார். மயலதிற்சார்ந்து மயங்காதீர் நீரே
புலையர்கள். வயலதின்வேலையை மறக்காதீர் நீரே
சாம்பனார். சாம்பனைமனதிற் சந்தத நினைப்பீர்
புலையர்கள். பாம்பனைநினைத்தாற் தீம்பது வருமே
சாம்பனார். முத்தனைமனதில் நித்தமு நினைப்பீர்
புலையர்கள். பித்தனைநினைத்தாற் பித்தனு வோமே
சாம்பனார். பள்ளைப்படித்துப் பாழா கின்றீரே
புலையர்கள். கள்ளைக்குடித்தாற் காணலாங் கதியே.

வசனம்

இவ்வாறு புலையர்கள் சாம்பனாரோடு எதிர்த்து வீண்மொழியாடி அவரைப் பார்த்து பரிகசித்துவிட்டுத் தங்களுடைய காரியங்களைப் பார்க்கச் சென்றார்கள் பின்னர் சாம்பனார், இப்புலையர்களுக்கு நல்வழியுரைத்து வீணுவதைவிட சேரிப்புலைக் குழந்தைகளைச் சேர்த்துவைத்து ஏதேனுந் திண்பண்டங்க ளளித்து, தன்வசப்படுத்தலா மென்று எண்ணி யோசிக்கிறார்.

விருத்தம்

குழந்தைகளுங் குறையளிக்குந் தெய்வமெல்லாங்
கொண்டாடு மிடத்தினிலே குடியாய்வாழு
மெழுந்துவரு மிச்சிறுவர் களுக்கேதேனு
மினியவுண்டி யிருந்துண்ண வளித்தாலிங்கே
யழுந்துமன முடையவர்க ளாகவாக்கி
யரனுமஞ் சொலச்செயலா மென்றுவன்றே
பழந்தேங்காய் முதலியன பரிவாய்வாங்கிப்
பாலர்களுக் களித்துவரும் பண்புற்றாரே.

வசனம்

சாம்பனார் அன்றுமுதல் ஈசனுக்கு விறகளித்துவிட்டு ஈசனருளாற் றனக்குக் கிடைக்கும் இரண்டு பணத்தில் குடும்பத்திற்குப் போக மிஞ்சினதைக் கொண்டு சிறுவர்கள் உண்ணும் தின்பண்டங்களைக் கடையில் வாங்குகிறார்.

க ட் க ா.

வெல்லம் தேங்கா அவல் கடலை
வெந்த சுண்டல் பணியாரம்
நல்ல மாங்காய் பூவன் பழம்
நாவல் இலந்தைக் கருப்புட்டி
மெல்லும் பிண்ணாக்கு அரிசி
விரும்பு முறுக்கு வடை தோசை
கெல்லுங் கிழங்கு சர்க்கரை கருரும்பு
கேட்டுக் கடையில் வாங்கிடுவார்.

வசனம்.

இந்த பதார்த்தங்களை வாங்கிவந்து சேரிக்குச் சமீபத்திலுள்ள ஓர் தென்னஞ் சோலைக்குப் புலையர்களின் குழந்தைகளை யொருங்கே சேர்த்து அழைத்துச் சென்று உட்காரவைத்து, தின்பண்டங்களைக் கையில் கொடுத்து, நெற்றியில் நீற்றைப்பூசி சிவநாமபஜனம் செய்யும்படி செய்யவே, குழந்தைகள் தின்பண்டத்தின் விருப்பத்தினால் தின்றுகொண்டு நாமபஜனஞ் செய்கிறார்கள்.

க ட் க ா.

சிவசிவசிவசிவ சிதம்பரநாதா
தில்லையில்வாழ்ந்திடு தேசிகமணியே
பவவிமோசன பாலலோசன
சந்த்ரதரணசர்ப் பாபரணஹர
சாந்தஆதிமத் யாந்தரஹிதாவே
தாந்தஸாரசித் தாந்தமூலவுமா
காந்தநாதநா தாந்தவாசசிவ
கங்காதரயெம பங்காமன்மத
பங்காவ்ருஷபது ரங்காபுரஹர
நாதாகுஞ்சித பாத ஞானவி
நோதாசித்சதுர் வேதா தத்துவ
நீதாதானவர் காதாநிர்மலத்
தேனேதேவரின் கோனேயெம்பெரு
மானேசிவபெரு மானேஹரஹர (சிவ)

வசனம்.

புலைச்சிறுவர்கள் இவ்வாறு தின்பண்டங்களைத் தின்றுகொண்டு சிவநாமபஜனஞ் செய்வதை நோக்கிடில் வெள்ளியங்கிரி வாசனான மஹாதேவனை தேவலோகத்து தேவர்கள் கற்பகச்சோலையிலே பஜனஞ் செய்வதெனத் தோன்றும்.

விருத்தம்.

கலைமறை யாகமங்கள் கசடறக் கற்றுமன்பு
விலரெனு மவரொருங்கே விருந்திடு மிடத்தை நோக்கி
னலைகட லென்னபாவ மனுதினஞ் செய்துமன்பு
நிலையுறும் புலையர்சேரி நிரம்பவு மேலதாமே.

வசனம்.

சாம்பனார் இவ்விதமாகவே சேரியின் சிறுகுழந்தைகளை தென்னஞ்சோலையிற் சேர்த்துவைத்துக் கொண்டு, தின்பண்டங்கள் கொடுத்து நாம ஜனம் பண்ணச்செய்வதும் நாடவரூது விறகுத் தொண்டை சிதம்ப ராலயத்திற்கு அன்போடு செய்வதுங் கருத்தினராய் வாழ்ந்துவருநாளில் பின்னரொருதினம் சேரியிலுள்ளவர்களில் ஐந்துபுலையர்கள் தங்களுடைய ஆண்டைவீட்டு வேலைகளை முறையாய்ச் செய்துவிட்டு மதுபானம் பண்ணி தள்ளாடின மயக்கத்தாடு சாம்பனார் வசிக்கும் தென்னந் தோப்புக்கு வந்து நோக்கி அங்குநாமபஜனம் பண்ணிக்கொண்டிருந்த சிறுவர்களை பார்த்து பரிகாசம் பண்ணுகிறார்கள்.

விருத்தம்.

பயல்களே யுங்கட் கென்னபத்தியு மிகுந்து சாம்பான்
செயலெனச் சிறந்தீர் போலுந் தீங்கிது வாகுங் கேளீர்
வயல்வேலை மாடுமேய்த்தல் மண்வெட்டல் முதலாம் வேலை
நியமமாய் செய்யாராயிந் நெறியுற்ற தேதோ சொல்வீர்.

வசனம்.

ஐந்து புலையர்களுங் கூடிச் சொல்லுவதைக் கொஞ்சமுங் கவனியாது குழந்தைகள் நாமபஜனம் பண்ணுவதிலேயே கருத்தினராய் அன்புமேலீட்டினால் ஆனந்த முற்றிருந்தார்கள். அப்போது சாம்பனார் அவ்வைந்து புலையரையும் நோக்கித் தன்னோடு விறகுக்கட்டு எடுத்துக்கொண்டு தில்லைக்கு வரும்படி அழைக்கிறார்.

விருத்தம்.

வெட்டின மரம்பி ளந்தேன் விறகது மிகவேகண்டேன்
கட்டினே னறுகட்டாய்க் கவலையுற் றிட்டேன் றாக்கத்
தட்டிடா தெனக்கு நீங்கள் தலையினிற் றாக்கிவந்துச்
சட்டமாய்க் கோயிலுக்குத் தந்திடிற் றருமந்தானே.

சாம்பனுருக்கும் ஐந்துபுலையர்களுக்கும் சம்வாதம்.

அகவல்

சாம்-என்னோடுவிறகுக்கட்டை யெடுத்துவந்தாலுங்கட்டுப்
பொன்னோடுபூமிசேரும் புண்ணியம்பெறுவீர்நீரே

புலை-நன்றுநன்றென்ன்சொன்னீர் நாமுனக்காளோபோவீர்
இன்றுமக்கெடுத்துவந்தா லென்றரவல்லீர்நீரே.

சாம்-வேண்டுமோறளிக்குமீசன் மெல்லடியன்புள்ளேன்யான்
ஈண்டுமக்கெதைக்கொடுப்பே னிருப்பதைக்கேழ்க்கிலீவேன்

புலை-உள்ளமோடெடுத்துவந்து வுமக்களிக்கின்றோநாங்கள்
கொள்ளவேகள்ளுவாங்கிக் கொடுத்திடில்வருவேமின்னே

சாம்-நல்லதுபுலையர்நீரே நண்ணுவீர்விறகெடுத்தே
தில்லையிற்கள்ளையுண்ணத் திண்ணமாய்ப்பெற்றீவேனே.

வசனம்.

இதைக் கேட்டு அவ்வைந்து புலையர்களும் சம்மதித்து சாம்பனார் வெட்டிப் பிளந்து கட்டிவைத்த விறகுக்கட்டுகள் ஆறினில் தலைக்கொன்றாகத் தூக்கிக்கொள்ள சாம்பனார் மிஞ்சின வோர்கட்டைத் தலையிற் றாக்கிக்கொண்டு, அவர்களோடு சிதம்பரம்வந்து கோயிலுக்கு அளித்து வீதிவலம்வந்து சேரிக்குத் திரும்பவே, புலையர்கள் சாம் னாரை வழிமறித்துக் கொண்டு கள்ளுவாங்கித் தரும்படி சண்டை தொடுக்கிறார்கள்

தண்டகம்.

போகாதே போகாதே நில்லு நாங்கள்
போகும்வழியதைச் சொல்லு
கள்ளுவாங்கித்தாரே னென்று நீர்
கைவிட்டாற் போவோமோ யின்று

காசையவிழ்த்திங்கே வீசு புளித்தக்
கள்ளை வாங்கித்தந்து பேசு
எடுத்த விறகுக்குக் கூலி கள்ளு
என்றுலெவருஞ் செய்வார் கேலி ..

வசனம்.

புலையர்களைந்துபேரும் இவ்வாறு கள்ளுவாங்கித் தரும்படி போர் தொடுக்கவே, சாம்பனார். அவர்களை சமாதானம் பண்ணி அழைத்துக் கொண்டுவந்து சேரிக்கு வரும்வழியில் ஓர் குளக்கரையில் அவ்வைந்துபேரையும் உட்காரவைத்து அக்குளத்து நீரை ஒரு மட்கலயத்தில் முகந்து திருநீற்றையதில் தெளித்து ஒவ்வொருவருக்கும் நெற்றியில் திருநீற்றைப்பூசி அம்மட்கலயத்திலுள்ள நீரைக் கள்ளென்று சொல்லி யவர்களுக்குக் கொடுக்க கள்ளின் விருப்பத்தினு லதைவாங்கிப் பருகினபோது கள்ளைவிட மயக்க முண்டாகி புலையர்களுக்கு நல்லுணர்வு தோன்றி அப்பெற்றான் சாம்பனாரை வலம் வந்து நமஸ்கரித்து அவ்வைந்து புலையர்களும் கூறுகிறார்கள்.

விருத்தம்.

தென்னங்கள்ளு தனைக்குடித்துத் தினமுங்கெட்டோஞ்
செய்யாத பவங்கள்பல செய்துநொந்தோ
மன்னுபல கொலைபுரியு மார்க்கமுற்றோ
மானிலத்தின் வாழ்வுசத மாகியெண்ணி
யுன்னருமை தனையறிந்தோ மல்லோமீது
வுண்மையினி யுன்மொழியைச் சிரமேற்கொண்டு
சொன்னவிதஞ் செய்கின்றோ மென்றுசூழ்ந்து
துணிந்திட்டார் புலையர்களும் பணிந்திட்டாரே.

வசனம்.

இவ்வாறு புலையர்கள் மனதுமாறி ஞானவழியிற் சார்ந்து தங்களுடைய துற்செய்கைகளை யெல்லா மெடுத்துரைத்து எங்களுக்கு நல்வழி காட்டுவாயென்று சாம்பனாரைப் பணிந்து நிற்கவே, சாம்பனார் இது ஈசனருளென வெண்ணி அவர்களோடு தான் வசிக்குந் தென்னஞ் சோலைக்கு வந்து சிறு குழந்தைகளோடு இவ்வைந்து புலையர்களையுஞ் சேர்த்துவைத்துக் கொண்டு பத்திமயமாய் நாமபஜனம் பண்ணி ஆனந்த பரவசராய் வாழ்வ

தோடு தான் சிதம்ப ராலயத்திற்கு விறகளிக்குந் திருத் தொண்டைவிடாது நடாத்தி வந்தார், இப்படி வருங்காலத்தில் தில்லைச் சேரியிலுள்ள மற்றப்புலையர்கள் கூடியோசிக்கிறார்கள்.

விருத்தம்.

இப்புலைச் சேரிதன்னி லிதற்குமுன் னெவருஞ்செய்யாத்
தப்பிதச் செயல்புரிந்துத் தவிக்கிறான் பெற்றானந்தோ
வொப்புமோ விந்தஞால முயர்ந்தவ ரடையுமார்க்கந்
துப்பிலாப் புலையன்சாரத் துன்னிடிற் றுன்பமன்றோ.

வசனம்.

என்றிவ்விதம் புலையர்கள் கூடிப் பேசிக்கொண் டிருக்குங் கால் அச்சேரியிலிருக்கும் நாட்டாமைக் காரனாகிய தலையாரி அங்கு தற்செயலாய் வந்து சேரவே தலையாரியி னிடத்திற் பெற்றானது செய்கைகளை யெடுத்துப் புலையர்கள் கூறுகிறார்கள்.

சிந்து.

அண்ணேநாட்டாமைக்காரா ஒரு
அந்தரங்கங்கேளு சிந்தையுடன்
இந்தச்சேரிதனிலில்லா மிக
வீனவழக்கத்தைத் தானடைந்து
நமதுபெற்றான்சாம்பான் இந்த
நாலைந்துமாதமாய் வேலைவிட்டான்
தினமும் விறகு வெட்டிப் பிளந்
திட்டதைக் கட்டியே சட்டமாகக்
குதித்தாடித் தூக்கிக்கொண்டு தில்லைக்
கோயிலுக்கு நல்லநேயமுடன்
கொடுத்தே கும்பிட்டிடுவேன் அவன்
கொண்ட வெண்ணத்தினைக் கண்டறியோம்
பறைச்சேரி மக்கள்தனை தின்னும்
பண்டந்தந்தே களி கொண்டிடவே
தனதுவசப்படுத்தி மகிழ்ந்
தாடிக் கூடிக்கீதம் பாடிடவே
கெடுத்தான் புலையரைவர் அவன்
கெட்டதைப் போற்பின்னுங் கெட்டொழிந்தார்
சிவநாமஞ் சொல்லச்சொல்லி யொன்றாய்ச்

சேர்த்து வைத்தேதோ யேமாற்றி விட்டான்
குலத்திலில்லா வழக்கம் இவன்
கொண்டாற்சேரிதிகழ் கொண்டிடுமோ
இது வென்னமோ மாயம் இதை
யெண்ணத்தில் யோசனைப் பண்ணிப் பாராய்
இதமாக நல்ல புத்தி வர
வே யவனுக்கு நீ ஞாயமுடன்
உரைத்தே திரும் பிடுவாய் இனி
யுன்னையன்றி சேரிதன்னில் யாரே.

வசனம்.

இதைக்கேட்ட நாட்டாமைக் காரத் தலையாரி நான் இப்போதேசென்று சாம்பானை வழிக்குக்கொண்டு வருகிறேனென்று புறப்படுகிருன்.

விருத்தம்.

தலையாரி படபடத்துத் தானெழுந்து
தடியொன்றைக் கரம்வகித்துப் புயத்தைத்தட்டிக்
கலையாமன் முண்டாசை யிறுக்கிக்கட்டிக்
கையிரண்டால் மீசையதை முறுக்கிக் காட்டி
யலையாதே யென்றவரை யதட்டிப்பேசி
யன்புடனே பிளவணிந்து வகலாபத்தி
நிலையாரும் பெற்ருனி னேரேவந்து
நின்றிட்டான் தன்மனமுங் குன்றிட்டானே.

வசனம்.

நாட்டாமைக் காரத் தலையாரி சேரிப்புலையர்களிடத்தி லிவ்வாறு ஆடம்பரங்கள் செய்துகொண்டு பெற்ருனை வழிப்படுத்துகிறேனென்று சொல்லி சாம்பான் வசிக்கு மிடத்திற்கு வந்துபார்க்கவே பெற்ருன் சாம்பான் பரமசாம்பவராய் திருநீற்றை தேகமுழுது மணிந்து கண்டிகை பூண்டு வாயால் நாமபஜனம் பண்ணிக்கொண்டு பத்திமயமாய் விளங்குவதைக் கண்டு தன் மனதில் அச்சங்கொண்டு மிகுந்த வணக்கமாய் நீதி கூறுகிருன்.

இராகம் பியாகு-தாளம்-ஆதி.

பல்லவி.

நீதியாகுமோ கூறும் ஓர்
நீசன் பரமசிவ நேசஞ் செய்வது (நீதி)

சரணங்கள்.

1. சாதியை மறந்துநீர் பத்தி செய்தல்
தருமோ வுமக்குவிந்த புத்தி நீர்வீ
பூதிபூசின லாமோ சித்தி யீனப்
புலையனுக்கோ பர முத்தி இது (நீதி)

2. காட்டுமரங்களை நீர் வெட்டி அதைக்
கயிறால் கட்டாகவே கட்டி தூக்கி
மேட்டியாய்ச் சிதம்பரங் கிட்டி நீர்
வீணாகப்போகுவதேன் நட்டி இது (நீதி)

3. சின்னஞ்சிறுவர் தமைக் கெடுத்து பல
தீனிகள் வாங்கியே கொடுத்து சிவா
என்னும் நாமங்கடனை யெடுத்து சொல்ல
வியற்றிவைக்கிறாய் நாமந் தொடுத்து இது (நீதி)

4. புலையனுக்கோ சிவ நேசம் யாரும்
புகன்றிடுவார் பரி காசம் இது
நிலைநிற்குமோ அப்பி யாசம் மற்ற
நீசருக்கெல்லா மிது நாசம் இது (நீதி)

5. பருந்து கருடனா காது எனப்
பறையன் பத்திமே வாது நீர்
வருந்தவேண்டா மிது தீது யென்பின்
வந்திடுவாய் பே சாது இது (நீதி)

வசனம்.

நாட்டாமைக் காரத் தலையாரி இவ்விதமாய் ஞாயங்களெடுடுத்துக்கூறி பின்னும் அண்ணே, பெற்றா, நமது வெள்ளாழ ஆண்டை கண்டால் உன்னைக் கோபித்துக் கண்டித்திடுவா ரென்று கூறுகிறான்.

தென் பாங்கு.

1. வெள்ளாழ ஆண்டை கண்டாலு
வேலைசெய்யவே யடிப்பார்
துள்ளாதே விறகுவெட்டி வீணாய்த்
தொண்டுசெய்தா லென்னவரும்



2. பண்ணைவேலை செய்துவந்தால் மிக
பணக்கார ளுகிடலாம்
பண்ணாத காரியங்க ளினி
பண்ணாதே பாரிகழும்

3. வீணான வேலைசெய்து தினம்
வெட்டாதே பட்டமரம்
வாணாளைப் போக்கிடாதே பத்தி
வந்திடுமோ நீசருக்கே.

வசனம்.

இந்தவிதம் நாட்டாமைக்காரத் தலையாரி சாம்பனாருக்குப் புத்திமதிகூறிப் பின்னும் கூறுகிறான்.

விருத்தம்.

மாடுகட்டி யேரிணையே ராகப்பூட்டி
வயலதனை யுழுதுபறம் படித்துநன்றாய்ப்
பாடுபட்டு விந்தவிதைத்துத் தண்ணீர்பாய்ச்சிப்
பயிராக்கி யிளநாற்றின் பதத்தைப்பார்த்து
வாடுமுத லெதுவுமதை யருந்திடாது
வனுதினமுங் காத்துவொரு நாளிற்றேர்ந்து
நாடுபறையரைக் கூட்டி வந்துநாற்றை
நன்செய்நில நடப்பிடுங்க நாடுவாயே..

விருத்தம்.

நட்டதுநாற்றாவோங்கி நல்வளக்கதிர்களீயு
மட்டியில்லாமற்பார்த்து வறுப்பறுத்தீர்ண்டைவீட்டிற்
கொட்டலாமாண்டைகண்டு கூலியைக்கொடுப்பார்வாங்கிச்
சட்டமாய்வாழலாகுஞ் சாதியின்முறையீதோராய்.

வசனம்:

இவ்விதம் நாட்டாமைக்கார சாம்பனாருக்குச் சொல்லவே இதுகளையெல்லாம் செவிக்கு வாங்கி அந்தோ! பூவுலகிற் பிறந்ததற்கு நல்வழி தேடாமல் தேடும், நம்மைக்கெடுத்து நரகத்திற்கு ஆளாக்குகிறார்களே யன்றி, நல்லவழிக்கு வேண்டிய புத்திமதிகளைச் சொல்லவல்லார் யாருமில்லையே, இந்த ஈனனுக்கோ நாட்டாமைக் காரனென்று பெயர், என்றுநினைத்த நாட்டாமைக்காரனைப்பார்த்து அதிக சினத்தோடு கூறுகிறார்.

### விருத்தம்.

நாட்டாமைக் காரனெனு நாமந்தன்னை
நாட்டிவைத்த தாருனக்கின் னுட்டிலேநீ
நாட்டாமை யெனக்கலவிந் நாட்டில்வாழு
நீசப்புலையர் தனக்காவாய் நல்லுறுப்பை
நாட்டாமை யடக்கலென நாதன்மேலே
நற்புலனைந் தினையடக்கி நன்மனத்தை
நாட்டாமை யாற்பொருளாய் நாட்டியுன்னை
நயந்திடே னுனக்காகப் பயந்திடேனே.

### வசனம்.

சாம்பனார் இவ்விதம் நாட்டாமைக் காரனைப் பார்த்து ஏளனம் பண்ணிடவே இதனைக்கேட்ட நாட்டாமைக்காரத் தலையாரி ஊமைபோ லொன்றுஞ் சொல்லாது நிற்கவே, சாம்பனாரோடு கூடவேயிருந்த ஐந்து புலையர்களும் சிறுவர்களும் ஒருங்கே சேர்ந்து கொண்டு நாட்டாமைக்காரனைப் பார்த்துக் கூறுகிறார்கள்.

இராகம்-அடாணா-தாளம்-ஆதி.

பல்லவி.

நாட்டாமைக்காரா எங்கேவந்தாய்
ஞாயமெடுத்துச் சொல்லவா நல்லது நல்லது. (நா)

அநுபல்லவி.

ஆட்டாதேயுன் வாலினையிங்கே
அடிபடும்
படிவரும்
குடிகெடும்

சரணங்கள்.

(1) வீம்புகள் பேசாதே குடிமயக்க
மிருந்துகை வீசாதே
சாம்பனாரதுப தாம்புயந்தன்னைத்
தாழ்ந்திடு
வீழ்ந்திடு
சூழ்ந்திடு (நா)

(2 ஈனப்பறைய ரென்று இவர்தனை
எண்ணுதே யின்று
ஞானவழியில்மே லானவரவரை
நயந்திடு
பயந்திடு
உயர்ந்திடு (நா)

(4 கோபமாய்த் துள்ளாதே இவருடைய
கோபத்தைக் கொள்ளாதே
பாபங்கள் செய்து பாழாகாதே
பத்தியே
சித்தியே
முத்தியே (நா)

வசனம்.

ஐந்து புலையர்களும் சிறு குழந்தைகளு மிவ்வாறு நாட்டாமைக்காரத் தலையாரியை பரிகாசம் பண்ணி பின்னரும் அவன் வழக்குத் தீர்த்துவிடும் வல்லமையைப் பரிகசிக்கிருர்கள்.

விருத்தம்.

வழக்குகொண்டு வருவோர்க்கு வரிசையாக
வழக்கெடுத்து வகுத்திடவே வல்லனீயோ
வழக்குதனி லொருசாராய் லஞ்சம்வாங்கி
வழக்குரைக்கும் வகையுணர்வா யன்றிஞாய
வழக்கெடுத்து நலமுணர்ந்துன் வாயினுலே
வழக்குசொலு மதியுனக்கு வாய்த்ததுண்டோ
வழக்குரைத்த லுன்குலத்தில் வழக்கமுண்டோ
வழக்கமிலை யுனக்கிதுவீண் வழக்கந்தானே.

வசனம்.

இவ்வாறு பரிகாசம்பண்ணவே நாட்டாமைக்காரன் வெட்கமுற்று தலைநாணி நிற்கவே சாம்பஞர் மனதிரங்கி நாட்டாமைக்காரனைக் கரம்பிடித்து அழைத்து நல்லபுத்தி மதிகளைச்சொல்லவே, நாட்டாமைக்காரன் உள்ளங்கனிந்து கோபந்தணிந்து சாம்பனுரையும், ஐந்து புலையர்களையுஞ் சிறு குழந்தைகளையும் வலம் வந்து தண்டனிட்டுப் பணிந்து கைகுவித்து நிற்க! சாம்பஞர்தன்

கரத்தாற் றிருநீற்றையள்ளி அவன் நெற்றியிற் பூசி அவனுடைய காதிலே சிவநாமத்தை யுபதேசித்து நல்வழி யடையும்படி செய்யவே நாட்டாமைக்காரத் தலையாரிக்கு நல்லஞானமுண்டாகிதன்னை மறந்து சகத்தைத் துறந்து பத்தியிற் சிறந்து பரவசமடைந்து நல்வழி தொடர்ந்து, ஈசனை யெண்ணி, தன்மனந் துண்ணி, அன்பதில் நண்ணி, நாமபஜனம் பண்ணி, காமாதிகளைச் சாடி, சத்கதிநாடி, இன்பமே கூடி, சேரியைத்தேடி, தடியை யூன்றித் தள்ளாடி வருகின்றான்.

பல்லவி.

ஆனந்த பரந் தானறிந்து வந்தான் நாட்
டாமைக்காரன். சச்சிதானந்த (பரந்)

அநுபல்லவி.

தானந்த பர மானந்த சுகந்
தன்னி லாடியே குளித்து
மன்னி கூடியே களித்து (ஆனந்)

சரணங்கள்.

சாம்பனார் மேற் கோபந் தணிய
தந்தை நீற்றைத் தேக மணிய
ஆம்பவந் தொல்லை யென்று துணிய
அரஅர வென அதி விரைவொடு
வரவர வெழு கெனு மனதொடு
இருகர மது குவி தர படு
திரிபுர மெரியர னருள் கொடு (ஆ)

வசனம்

ஆநந்த பரவச மடைந்த நாட்டாமைக்காரன் சேரியை நாடி வருவதைக் கண்டபுலையர்கள் மனங்குளிர்ந்து எல்லோரும் கூடி நாட்டாமைக் காரனது வாய்மொழியைக் கேழ்ப்பதில் அவாவினராயிருக்க தலையாரி கிட்டிவந்து சேரிப்புலையர்களைப் பார்த்துக் கூறுகிறான்.

விருத்தம்

புலையர்களே வுங்களிட்டம் போலேசென்றேன்
பொருந்திடவே தெரிந்ததெலாம் புத்திசொன்னேன்

னலைகடலை நிகர்த்தபெரு மறிவைவாய்த்த
வவர்தனக்கு யான்புத்தி யறைவதாமோ
நிலைகலங்காப் பத்தியெனு நெறியிற்றோய்ந்து
நீக்கமின்றி பரமசிவ நேசம்வாய்ந்துத்
தொலையகன்ற பெற்றானைத் தூறவேண்டாஞ்
சொல்லுமெந்தன் வழியதனைப் புல்லுவீரே.

இராகம்-கமாசு- தாளம்-ரூபகம்.

பல்லவி.

கொஞ்சந் தயவு செய்யுங்கள்
கூறும் வார்த்தை கேளுங்கள் (கொ)

அநுபல்லவி.

தஞ்சமுங்கள் தாளிணைக்கு
மிஞ்சுங்கோபம் வேண்டாம் வேண்டாம் (கொ)

சரணங்கள்

1. பெற்றான்றனது பெருமையே பேசுவதென்றாலருமையே
பற்றிலாதபரமபத்தன் பாரிலவனேசீவன்முத்தன் (கொ)
2. நாமபஜனஞ் செய்கிறான் ஞானமாரிபெய்கிறான்
தீமையான செயலைவிடுத்தான் தில்லைநாதனைப்பணிந்தடுத்தான்
3. வாயாலவனை வையாதீர் வைதுத்துன்பஞ் செய்யாதீர்
மாயையகன்ற மனமுடையான் நீங்களுங்கள்வழியடையான்

வசனம்

நாட்டாமைக் காரத்தலையாரி சேரிப்புலையர்களுக்குப் பெற்றானுடைய பெருமையை யிவ்வாறு எடுத்துக்கூறி பின்னும் நீங்கள் அவரைத் தூறினால் மிகுந்த கேடுவருமென்றுங் கூறுகிறார்

இராகம்-தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி

பெற்றான்றனை யிகழ்வாகப்பேசிடிற்
பெருநரகடைவீரே (பெற்)

அநுபல்லவி

கற்றார்போற்றுந்தில்லைக் கனகசபேசனைக்
கண்டுவவர்க்குகந்த தொண்டுசெய்தேவரும்(பெற்)

சரணங்கள்.

1. உங்களைப்போலீனப் பறையரென்றவரை யெண்ணுதீர்
எண்ணியவரை
மங்கிடத்தினந்தொறு மவரொடுவாது பண்ணுதீர்
பாவங்கள் நேரும்
துங்கமுறுமவர்க்குத் துன்பங்கள்செய்தீராலுற்
சங்கடங்கள்வந்து சம்பவிக்குஞ்சத்தியம் (பெ)

2. பத்தியிற்சித்தமதைப் பதியச்செய்தசிவ! பத்தன்
பாரினில் முத்தன்
எத்திசையும்புகழ் சுத்தசிவத்தைச்சாருஞ் சித்தன்
பரம சுத்தன்
உத்தமமானதொண்டை யுறுதியாய்க்கொண்டான்
மித்தையென்றேநம்மை விரைவினிற்கண்டான் (பெ)

3. என்னசொன்னாலுமினி யீனர்நம்மிடமவன் சாரான்
நமதுசேரி
தன்னையடைந்துசாதி முறைப்படிவேலையெதும் பாரான்
ஆண்டையிடத்திற்
சொன்னாலும்பயங்கொள்ளான் சொற்படிகேளான்
மன்னும்பத்தியைவிட்டு மறந்தென்றுமீளான்(பெ)

வசனம்.

நாட்டாமைக்காரத்தலையாரி யிவ்விதங் கூறவே கேட்ட புலையர்கள் மனம் வருந்துகிறார்கள்.

விருத்தம்.

சேரியில்வாழ் சிறுவர்களுந் திகைத்துச்சாம்பான்
சிந்தைவழிப்பட்டதன்றிச் சிலநாட்கெல்லாங்
கோரியவோ ரைந்துபேர் புலையர்கூடிக்
கொண்டார்கள் போகுதென்று குடியாய்வாழ்ந்தோஞ்
சீரியநம் நாட்டாமைக் காரர்தம்மைச்
செலவிட்டோஞ் சாம்பானைத் திருத்திச்சேர்க்கப்
பாரிகழ வவனும்போய்ப் பதிந்துவிட்டான்
பழிக்காளோஞ் சேரியினிச் செழிக்காதந்தோ.

வசனம்.

இவ்வாறு விசனப்பட்டிருக்குங் காலத்தில் அந்தச்சேரியிலுள்ள வள்ளுவன்வந்து சேருகிறான்.

விருத்தம்.

நெற்றியிலே நீறணிந்து நெறியுணர்ந்த
நீதிமா னெனப்பேசி நிகழ்முக்கால
முற்றிலுமே வுணர்ந்தபெரு முதியோனுகி
மூட்டையொன்று கரம்வகித்து முணுமுணுத்து
கற்றையெனச் சுவடிபல கையிலேந்திக்
கண்மணியும் வெண்டுகிலு மணிந்துகள்ளை
விற்றவிடந் தொறுங்குடித்து மிகத்தள்ளாடி
மேவினர் புலையர்கண்டு கூவினரே.

வசனம்.

புலையர்கள் வள்ளுவன் வருகிறதை யறிந்து கூவியழைத்து உட்காரவைத்து அவருக்கு வேண்டிய தாம்பூலாதிக ளளித்து அவரை யுயர்த்திப்பேசி ஐயே, எங்கள், குலகுருவே, இந்தச்சேரியிலே, ஒரு கலகம், நடந்து வருகிறது, அதின் விபரத்தை நன்ருய்ப்பார்த்துச்சொல்ல வேண்டுமென்று கேட்கவே, வள்ளுவன் சிலசோழிகளைக் கீழே பரப்பி, சிலசுவடிகளைப் புரட்டிப்பார்த்து தன் மூக்கின்மேற் கையைவைத்து, யோசித்து, புலையர்களைப் பார்த்து ஆருடசோசியஞ் சொல்லுகிருன்.

விருத்தம்.

புலையரேகேளுஞ்சொல்வேன் புகழுமிச்சேரிதன்னில்
நிலையுறுமொருவன்கெட்டு நிகழுநன்னெறியைநீத்து
கலைபலகற்றவன்போற் கலங்கிமேலோர்கள்செய்யு
மலைவிலாச்செய்கைசெய்து வருகின்ருனிதனைத்தேரீர்.

வச்னம்.

வள்ளுவன் இவ்விதம் சொல்வதைக் கேட்ட புலையர்கள் சந்தோஷித்து, அவ்வள்ளுவனுரைப் பார்த்து, ஐயா, தாங்கள்சொன்னது சரியாகவே யிருக்கிறது, இந்தச்சேரியில் பெற்ருன் சாம்பானென்பவன் கெட்டுப்போன தீமையைச்சொல்வதென்ருல் மூன்றுமாதமாகுது இருந்தாலுஞ் சொல்லுகிருேமென்று, வள்ளுவனுக்குப் பெற்ருனைப்பற்றிக் கூறுகிருர்கள்.

தென்பாங்கு.

1. பெற்றான் பெற்றான் பித்து பிடித்திட்டான் தான்
பேரெடுத்த ஞானியைப் போல் நடித்திட்டான்
பற்றான் பற்றானெங்களைப் பழித்திட்டான் எங்களைப்
பறையரென்றும் பாவியென்று மொழித்திட்டான் இது
பாழும் பறச்சேரி யென்று
வாழுங் குலமுறை யகன்று
பத்திசெய்ய பணிந்தே யழைப்பான் நல்ல
புத்தியில்லாது வீணு யுழைப்பான்
நித்தமுந்தானுகப் பாடிக்குவான் தோப்பில்
நின்று பித்தனைப்போ லாடிக்குவான்
நீயவனைக் கண் பாரு அவன்
நெஞ்சந் தன்னை யொரு இனி
ஞாயஞ்சொல்வ தாரு சேரி
நண்ணி வாழ்ந்திடச் சேரு அந்தப்(பெற்)

2. விட்டான் விட்டான் றொழிலை விடுத்திட்டான் தினம்
விறகுவெட்டிக் கோயிலுக்குக் கொடுத்திட்டான்
கெட்டான் கெட்டான் குலத்தைக் கெடுத்திட்டான் ஒரு
கேழ்விமுறையின்றி சண்டை தொடுத்திட்டான்
கேடுகெட்ட சாதி யென்று
காடுவெட்டதினமுஞ் சென்று
பட்டமரங்களை வெட்டிக்குவான் அதைக்
கட்டுகட்டாகவே கட்டிக்குவான்
சட்டமாய்ச்சாம்பலைப் பூசிக்குவான் எல்லாம்
விட்டவனைப்போலே பேசிக்குவான்
மிக்கச்சிறுவரைக் கூட்டி அவர்
வேண்டியவுணவை யூட்டி நல்ல
சர்க்கரைவெல்லமுங் காட்டி தொண்டு
தனைச்செய்விக்கிறான் வாட்டி அந்தப்

வசனம்.

இவ்வண்ணம் புலையர்கள் கூடி வள்ளுவருக்குப் பெற்றான் நிலையைக் கூறவே இதனைக்கேட்ட வள்ளுவன் யோசித்துப் பார்த்துக் கூறுகிறான்.

விருத்தம்.

மாசிலாச் சேரிதன்னில் வாழ்ந்திடு வோரேகேளு
நேசமாய் நீங்கள்கூடி நெறியுடன் தெய்வம் போற்றிப்
பூசைகள் போட்டீராளுற் புலையனும் பெற்ருன் சாம்பா
னுசைனே யுங்கள்சேரி முறையனு சரிப்பானன்றே

வசனம்

வள்ளுவனர் சொல்லிய விந்தமொழியைக் கேட்டு தெய்வத்தின் குற்றத்தாலிப்படி நேர்ந்திருக்குமென்று புலையர்கள் தனது சேரியிலிருக்கும் பூசாரியை யழைத்துப்பெற்ருன் நிலைமையைக்கூறவே பூசாரிபூசைபோடும் நாள் பார்த்து வமைக்கின்ருன்.

தென்பாங்கு.

| | | | |
|---|---|---|---|
| 1. | நாளான நாளையிலே | ஓஓ | ஆஆ |
| | நல்லவெள்ளிக்கிழமையிலே | ,, | ,, |
| 2. | அந்திமுந்திநேரத்திலே | ,, | ,, |
| | அஞ்சுநாழிபொழுதிருக்க | ,, | ,, |
| 3. | பந்தலிட்டுவாழைகட்டி | ,, | ,, |
| | பள்ளயங்கள் போட்டிடுவீர் | ,, | ,, |
| 4. | தெய்வகுறையாலேவரும் | ,, | ,, |
| | தீங்ககன்று சேரிவாழும் | ,, | ,, |
| 5. | இந்தமுறைசெய்யாவிடில் | ,, | ,, |
| | எண்ணங்கைகூடிடாது | ,, | ,, |

வசனம்

புலையர்கள் இதனைக்கேட்டுப் பின்னர் ஓர் வெள்ளிக்கிழமையன்று எல்லோருமொருங்கே கூடி, வனபூசைக்கு வேண்டியனவெல்லாம் சேகரித்து, சாம்பான், மனைவியாரையுஞ் சேர்த்துக்கொண்டு ஒரு சோலைத்திடரில் பந்தலிட்டு வாழைதோரண மலங்கரித்து பூசாரியை யழைப்பித்து பூசைபோட வாரம்பித்தார்கள். பூசாரி யோர் குட்டையில் மூழ்கி மஞ்சள் வஸ்திரமுடுத்தி நீறணிந்து வந்து பந்தலுக்குள் அனேக செங்கற்களை நாட்டி தெய்வங்க ளமைக்கிருன்.

விருத்தம்.

இருளனொடு காட்டேரி குழியிரிசி மோகினியோ
டேகாலியுங் கறுப்பன்
எஞ்சாத நொண்டிவீ ரன்லாட சன்யாசி
யெழிலான காளிகூளி

மருளான பாவாடை ராயநல் லண்ணனு
மாடனுந் தூண்டிவீரன்
மாறுமுனி யன்வெறியன் மன்னரு வேரியன்
மலையனும் வழிமறிப்பான்

உருளையன் பெத்தாச்சி கொள்ளிவாய்ப் பூவாண்டி
யூமையன் சத்தகன்னி
உக்ரமா டாகினி சாகினி பக்கிரி
யொதியன்மின் னடியன்சாத்தான்

அருளிலா பனைமரத்தான்மாரி சாமுண்டி
ஐயன்பி டாரி காத்தான்
அஞ்சாச்சடாமுனிச்சங்கிலியு மகமாயி
அரியபலதேவமைத்தான்.

வசனம்.

இத்தெய்வங்களை யச்செங்கற்களிலமைத்து அபிஷேகாதிகள்செய்து புலையர்களும், பெற்றான் மனைவியான சாம்பச்சியுஞ் சேர்ந்து பள்ளயம் போட்டு பச்சைபரப்பிப் பிண்ணாக்குக் கீரை வைத்து பொங்கலிட்டுக் கள்ளுக்குடம் வைத்து இளநீர் கண்டிறந்துபரப்பி லாகிரிவஸ்துக்களமைத்து மாமிசாதிகள் படைத்து ஆடுகோழி பன்றி முதலியவைகள் வெட்டி தெய்வங்களுக்குச் சிவந்த புஷ்பஞ்சாத்தி குங்கும மருச்சித்து தூபதீபங் காட்டி நிவேதித்து சூடனைக் கொளுத்திக்காட்டி தப்பு தப்பட்டைகொம்பு சின்னங்கள் முழங்கி பூசாரி உடுக்கு பம்பை, மணி முதலியவைக ளடித்துக் கூச்சலிட்டு புலையர்கள் தெய்வந் தொழவே பூசாரி உடுக்கடித்துப் பாட்டுப்பாடி தெய்வம் வரவழைக்கிறான்.

பூசாரிப்பாட்டு.

1. ஆயிரங்கண்ணுடையாள் எங்கள் மகமாயி
அகிலமளித்தவளே „

தாயே பெரியவளே ,,
தனையனைக் காத்திடுவாய் ,,

2. பிள்ளைகள் நாங்களன்றோ எங்கள் மகமாயி
பிழையெதுவும் பொறுத்திடுவாய் ,,
சள்ளையதைத் தீர்த்திடுவாய் ,,
சமயமிது வந்திடுவாய் ,,

3. வேப்பமரத் தோப்பில்வளர் எங்கள் மகமாயி
வெந்துயரைத் தீர்த்திடுவாய் ,,
காப்பதற்கு வுன்னையன்றி ,,
கண்கண்ட தெய்வமுண்டோ ,,

வேறு.

1. கர்த்தா கறுப்பண்ணா வாராய் வந்து
காலமிதுவேநல்லகருணையருள் தாராய்
சாத்தாஜடாமுனியே மாடா உன்னைத்
தாழ்ந்தேபணிந்தோம் நீயெங்கள்முன் வாடா

2. காட்டேரி காளிசா முண்டி உனைக்
கருதிவைத்தே படைத்தோம்பல வுண்டி
நாடடமையையனா ரப்பா வந்து
நன்மைதருவா யிங்குநொண்டிவீரப்பா

3. கொள்ளிவாய்பேச்சிபூ வாண்டி நாங்கள்
குறைகூறினோமுன்னைநம்பியே வேண்டி
பள்ளயம் பொங்கலொடு கள்ளு சுள்ளு
பணியாரமொடு படைத்தோம்வந்து கொள்ளு

4. சங்கிலிகறுப்பனே வீரா எங்கள்
சங்கடந்தீர்த்தருள் வாழ்முனி தீரா
மங்கைமோகினி யென்னு மாதே உன்னை
வாழ்த்தினோம்வந்தருள்செய்வா யிப்போதே

5. இச்சமயமேவந்து நில்லு நாங்கள்
எண்ணுவதை யின்னதென்றேகுறி சொல்லு
நிச்சயமினிவிடவே மாட்டோம் உன்னை
நெஞ்சுதனி லெண்ணியே பாரமும் போட்டோம்.

### வசனம்.

பூசாரிக ளிவ்வாறு வேண்டி தொழுது கொண்டிருக்கும் போது பெற்ருன் சாம்பனுர் புலேயர்கள் பண்ணுகிற ஆடம்பரத் தைக் காதிற்கேட்டு அவர்கள்பூசை யிடுமிடத்திற்கு வந்து வோர் புறமாய்நிற்கவே புலேயர்கள் சாம்பனுரைப் பார்த்துவிட்டுஐயோ இப்பெற்ருனுக்கு நல்லபுத்திவரும்படி செய்யக்கூடாதாவென்று தெய்வத்தை வேண்ட ஆரம்பித்தார்கள்.

### அகவல்

புலேயர்கள்—இராகம்—பைரவி.

ஆதிநொண்டிவீரனே . அப்பனேயாங்கள்படும்
வேதனையைத் தீர்த்துவரம் வேண்டுவதைத்தந்திடுவாய்

சாம்பனுர்—இராகம்—மோகனம்.

வேதனையைத்தீர்த்துவர மீர்ந்திடவம்பலமாடும்
ஆதிநொண்டியன்றிவீர ஞலென்னவாகிடுமே (1)

புலேயர்கள்—இராகம்—நீலாம்பரி.

தோகையரைப்போல்வந்து துன்பங்கள்செய்திடுமென்
மோகினியேமுன்வந்து மூண்டவினை தீர்த்திடுவாய்

சாம்பனுர்—இராகம்—ஆனந்தபைரவி.

மோகினியாயுருக்கொண்ட முகுந்தனுமும்முறைபணியு
மேகனன்றிவினையெதிர்வு மேகாதுசெல்லுமினே (2)

புலேயர்கள்—இராகம்—எதுகுலகாம்போதி.

வேளையிதுவம்மாவோ வேண்டியதெல்லாம்படைத்தோங்
காளிநீவந்தெங்கள் கவலைகளையொழித்திடுவாய்

சாம்பனுர்—இராகம்—கல்யாணி.

காளியவள்தலைநாண கனகசபைதனில்நடித்தத்
தாளனன்றிநுங்கவலை தனைப்போக்கலாகாதே (3)

புலேயர்கள்—இராகம்—தோடி.

நல்லகள்ளு பள்ளயங்கள் நாங்கள்படைத்திட்டோம்
கொல்லைவாழ்சடாமுனியே குறையதனையகற்றிடுவாய்

சாம்பனுர்-இராகம்-வராளி.

கொல்லைவாழ்சடாமுனியாற் குறையொன்றுந்தீராது
தில்லைவாழ்சடாமகுடத் தெய்வத்தாற்றீர்ந்திடுமே (4)

புலையர்கள்-இராகம்-அடாணு.

பேய்சூழ்ந்துபிடித்திருக்கும் பெற்ருனைப்பேய்நீக்கி
தாயேமகமாயியிந்த சங்கடத்தையொழித்திடுவாய்

சாம்பனுர்-இராகம்-அஸாவேரி.

தாயிமகமாயிதன்னுற் ருண்டவத்தோனன்பென்னும்
பேயென்னைப்பிடித்திருக்கப் பேயோட்டலாகாதே (5)

வசனம்.

இவ்வாறு புலையர்களும் சாம்பனுரும் பூசைபோடுமிடத்தில் வாதாடவே புலையர்களுக்கு பெருத்தசினமும் பொருமையுமுண்டாகி யெல்லோருஞ் சேர்ந்து சாம்பனுரைப் பிடித்துக்கட்டிச்சேரிக்குக் கொண்டு போவதாக வுத்தேசிக்கவே இதனை யோர்ந்த சாம்பனுர் அதிககோபங்கொண்டவராய் சிவானுக்ரஹத்தாற்றேகஞ் சிலிர்த்துத் தன்னைமறந்து துள்ளிக்குதித்துப் பெருத்தவாற்றலோடுப் பூசையிட்ட விடத்தையும் புலையர்களையுஞ்சின்னுபின்னமாக்குகின்ருர்.

தண்டகம்.

பாய்ந்துச்சிங்கம்போலே பறையரைப் பிடிப்பார்
பதுங்கியிருவிழிகள் பிதுங்க அடிப்பார்.
காய்ந்துச்செங்கற்களைக்காலா லுதைப்பார்
கட்டவந்தோரைப் புரட்டி வதைப்பார்
கள்ளுக்குடத்தினைத் தள்ளி விடுப்பார்
கண்டவர்கன்னத்தி லோங்கிக் கொடுப்பார்
சிண்டோடுசிண்டுபிணைத்திட்டுத் தேய்ப்பார்
சிறிப்பொறிபறக்க கும்பலைச் சாய்ப்பார்
வீசைப்பறையர்களை வெடுக்கென் றிழுப்பார்
வீசையோவென்று பொசுக்கிப் பழிப்பார்
பூசாரிதன்னைப் புடைத்துக் கண்டிப்பார்
புலையர்நிலைகுலையப் பிறித் தண்டிப்பார்

வசனம்

சாம்பனூர் வனபூசைக் களத்தை யிவ்வாறு நாசஞ்செய்தும் புலையர்களைப் பிடித்து அடித்தும் பலவித துன்பங்கள் செய்து விட்டுத் தன்னுடைய திருத்தொண்டைச் செய்யும் விஷயத்திற் கெடுதிபண்ணுகிற விவர்களை யென்னசெய்தாலும் பாவமேயில்லை யென்பதா யெண்ணி அவ்விடம் விட்டகன்றார். பின்னர் புலையர் களும், சாம்பனூர், மனைவியும் தங்கள் சேரியை யடைந்து அன் றிரவு மிகுந்த ஆலோசனைசெய்து சாம்பனூர் மனைவியைக் கொண்டு பெற்றானுக்கு புத்திமதி சொல்லச்செய்வதே முறையென்று தீர்மானித்து மறுநாள் காலையில் சாம்பனூர் மனைவியை அனுப்பு கிறார்கள்.

விருத்தம்.

இனையயோ சனைகள்செய்து வெண்ணியே சாம்பனூரின்
மனையவ டனைவிடுத்து மதியெடுத் துரைக்கச்செய்தா
லனையவ னொருவாறுள்ள மதுதிரிந்திட லாமென்று
வினையமாய்ச் சாம்பனூரின் மெல்லியைப் போகச்சொன்னார்.

விருத்தம்

புலையர்மொழிக் கிசைந்தவளாய்ப் பொருந்திசாம்பான்
பூவையாள் மனங்கொதித்துப் பொங்கிவாடி
நிலைமையறி யாதுகுல நெறியகன்று
நித்தமுமத் தொண்டுசெயி லென்னநேரு
மலையுமன மொழிந்துபயி ரதனையிட்டா
லனைவருக்கு மேலாக வாழலாமே
தலைவிதியோ விதுவென்று தாளாத்துன்பஞ்
சாருவாள் புருடனிடஞ் சேருவாளே

இராகம்-சங்கராபரணம்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

மனைவிமனம் வருந்தி வந்தாள்
மாசிலாப் பெற்றான் சாம்பனூர் (மனை)

அநுபல்லவி.

மனைவி மக்களை மாயை வாழ்வினை
கனவாய் மனதிற் கருதுஞ்சாம்பனூர் (மனை)

சரணங்கள்.

1. புலையர் கூடியே புகன்றதை யெண்ணி
புந்தியிற் றுன்பம் பொருந்திக் குண்ணி
நிலையகன்றதன் னேசரை நண்ணி
நீதியோதிட யோசனை பண்ணி(மனை)

2. என்று மீசனை யேத்தித் தொண்டு
வியற்றினுற் பேரின்ப முண்டு
என்று மனதி லெண்ணங் கொண்டு
இருக்கும் பத்தரி னிடத்தைக் கண்டு (மனை)

3. அக்கினிப் பந்தலில் வெண்ணெய் பொம்மை வந்து
ஆடிடவெண்ணி யடைந்து தான்வி ளைந்து
புக்கின தென்ன புலையருக்கி சைந்து
போதமுடையார்க்குப் போதிக்கத்து ணிந்து (மனை)

வசனம்.

சாம்பனுரின் மனைவியான சாம்பச்சி மெய்யன்பரான சாம்பனுரைக்கண்டு புத்திமதி சொல்லி வருவோமென்று போயவரைப் பார்க்கவே, அன்றுகாலையில் பூதியணிந்து நாமபஜனம் பண்ணிக்கொண்டு பரம நிஷ்டராய் சிவானந்த யோகச்செல்வராய் இருப்பதைக்கண்டு மனந்தியங்கிகிட்டி நெருங்கிப்பேசஅஞ்சினவளாய் தன் மனதி லெண்ணுள்கிறு.

இராகம்-நாட்டைக்குறிஞ்சி-தாளம்-ஆதி

பல்லவி.

இவருக்குப் புத்திமதி யெடுத்துரைசெய்திடவே
யெனக்குத் திறமை யுண்டோ

அநுபல்லவி.

தவருக்குஞ் சிவயோகத் தவருக்குஞ்சிவஞானத்
தவருக்குந் தரணியி லெவருக்கு மேலான (இவ)

சரணங்கள்.

பண்டுவிட முண்டநீல கண்டரன்புகொண்டு தினந்
தொண்டுசெயு மிவர்பெருந் தொண்டரல்லவோ நான்

கண்டதனைக் கண்டுதின முண்டதனை யுண்டு மீன்கள்
நண்டுரத்தை யுண்டவாயாற் புத்தி சொல்லவோ எனைக்
கொண்டயிவ ரெனக்குக்கண் கண்டதெய்வமாகுமிந்த
மண்டலத்தி லிவர்க்கிடு எண்டிசையிலேயுமில்லை (இவ)

வசனம்.

சாம்பனூர் மனைவி யிந்தவண்ண மெண்ணி பின்னர் ஏதோ சொல்லிப் பார்க்கலா மெனத்துணிந்து அவரைக்கிட்டிப் பணிந்து அஞ்சி யோர்புறமா யொதுங்கி நின்று கூறுகிறாள்:

விருத்தம்.

என்னருமை மணவாளா விதுவோஞாய
மீனகுலந் தனிற்பிறந்தோ மென்றுமெண்ணாந்.
தன்னைமறந் தனுதினமுந் தொண்டிற்சார்ந்து
சந்ததமும் பத்திநிலை தகைந்து வாண்டை
மன்னிநமக் காகவயன் மானியங்கள்
மகிழ்ந்தளித்து மவரடியை வணங்காராகி
யுன்னிமணம் புரிந்தவெனை மனத்தெண்ணாது
வுழைப்பதினாற் பயனுண்டோ பிழைப்பதாமோ.

வேறு:

இத்தகை நிலைமைவாய்ந்தீ ரென்றுமே புலையரெண்ணி
மெத்தவே மனம்வருந்திமே விடுமுமைத் திருத்தப்
பத்தியாய்ப் பூசைபோட்டு பண்புடன் றெய்வம்போற்றிச்
சுத்தமாய்த் தொழுதல்கண்டு தோன்றியேவிடருஞ் செய்தீர்
நீருமிவ்வணஞ் செய்தால்யா னேரிழை செய்வதென்னே
பாரினோ ரிதையறிந்தாற் பரிகசிப்பார் களந்தோ
சேரியைக்கெடுக்கவந்தீர் செய்தொழில்யாவுந்தீதே
கோரினன்மெல்லிவந்து கூறிடுமொழியைக்கேளீர்

லாவணி-தாளம்-ஆதி.

1. ஆசைக்கேற்றமணவாளாயான்புகல்வேன் கேளும் அடி
யானைவைத்துநீராளவேண்டுமென்றே நாளும் நம்
நீசச்சாதிமுறைநீங்கிநீருந்தினந் தொண்டு தனில்
நிக்ழ்ந்துசெய்துவருகின்றீர்நீதியிதெங் குண்டு

நேரிழையென்னைமணங் கொண்டு
நேசமாய் வாழ்வதனை விண்டு தொண்டி
னிலேக்காதீர் வீணுய் மலேக்காதீருமது
நிலையைப்பழிப்பார் யாருங் கண்டு.

2. ஆண்டைவீட்டுவேலேதன்னையன்புடனே பாரும் தின
யடைவாய்வேலேசெய்துநெல்லைவாங்கியே வாரும் நீர்
வேண்டும்போதுகஞ்சிவார்க்கிறேன்வயிருர குடியும் பண்ணை
வேலேசெய்தாலன்ருேநமதுகுடும்பவின்னல் விடியும்
விளம்புதல்குற்றமென்ரு லடியும்
மிகுந்ததேநமக்குமிக மிடியும் பத்தி
விளங்காது முத்தி துளங்காதுவீண்
ேவேலேசெய்தாலென்ன முடியும்

3. காசைப்போட்டொருபழுக்காச்சேலேகண் டாங்கி யேனுங்
கருதிநீருமெனக்காகத்தந்ததுண்டோ வாங்கி நா
னுசைப்பட்டநகையேதுஞ் செய்தளித்திட் டீரோ நீ
ரகமகிழ்வாயென்றேனும்நெருங்கிப்பேசி னீரோ
அடியாளைமனமறந் தீரோ
அகன்றிடிற்புலையர்விடு வாரோ நம
தாண்டை வேலேயை வேண்டாமென் றுநீ
ரவனியி லெப்படிவாழ் வீரோ.

வசனம்.

என்று இவ்வாறு சாம்பனூர் மனைவி கூறிவந்ததைக் கேட்டு சாம்பனூர் தன் மனைவியைப் பார்த்து கூறுகிறூர்.

விருத்தம்.

மறமொருங்கே திரண்டுருண்டு வந்ததெென வந்தகொடி
மாதே கேளாய்
பறையர்மொழி யதற்கிசைந்து பகரவந்தாய் நீயுமந்தப்
பக்கந் தானே
வறவழியோ மறவழியோ கணவனடைந் திடும்வழியை
யடைந்து மாதர்
குறையகன்று வாழ்வதுவே முறையிதனை யுன்னுளத்திற்
கொள்ளு வாயே.

வேறு.

கணவனே தெய்வமாகுங் கணவனே குருவாங் கொண்ட
கணவனின் சேர்க்கைசங்கங் கணவனி னுசையன்பாங்
கணவனி னின்பம்யோகங் கணவனேகதியிற் சேர்ப்பான்
கணவனை யன்றிமாதர்க் கரும்பொருட் கண்டதுண்டோ.

வசனம்

இவ்விதஞ் சாம்பனுர் மொழிந்ததைக் கேட்டு, சாம்பச்சி யுளந்திருந்தி யுறுதியாய்க் கொண்டு, இனி யிவர்க்கு இடர்செய் வதும் புத்திசொல்லுவதுங் கூடாதெனக்கருதி இவர் வழித்தாய் நாம்நிற்பதே முறையெனத் தீர்மானித்தவளாய் சாம்பனுரை வலம்வந்து பணிந்து விடைபெற்றுச் சேரியை நோக்கிவரவே, புலையர்கள் கூடிப்போன விஷய மென்னவென்று கேட்க சாம்ப ச்சி கூறுகிறுள்.

விருத்தம்.

தவமுறைபயிலுமந்தச் சாம்பனுர்தனக்குவிந்த
வவனியிற்புத்திசொல்வார் யாருமேயில்லைவீணுய்க்
கவலைநாம்கொள்வதொன்றுங் காரியம்பலித்திடாது
சிவனருள்வாய்ந்தவனுர் திரும்புவதில்லைபோவீர்.

நானுரைசெய்ததெல்லாம் நனிமகிழ்வோடுகேட்டு
ஏனுரைசெய்தாயீது னிழிகுலக்குணமோவென்று
மீனர்கள்மொழிக்கிசைந்து விங்குவந்தனையோவென்றும்
ஞானமிலாதமாதே நடந்திடுவாய்நீயென்றுர்.

இன்னதைக்கேட்டுவாடி யெனதுளம்வருந்திமிக்க
வின்னலையடைந்தேனுெ லினியுங்கள்மதியினுலே
அன்னவர்தனைத்திருத்தி யடக்கிடிலுங்களுக்கு
யென்னயான்செய்வேனென்று மிந்நன்றிமறந்திடேனே.

வசனம்.

சாம்பச்சி இவ்வாறு சொன்னதைப் புலையர்கள் கேட்டு ஆச் சரியமுற்று, எப்படியாவது, பெற்றுனை வழிப்படுத்த வேண்டு மென்று எல்லோருங் கூடி சபதம் பண்ணிக்கொண்டு பின்னர், இதுகளையெல்லாம் ஆண்டையிடத்திற் சொல்லிவருவோமென்று தீர்மானித்தார்கள்.

விருத்தம்.

சாம்பானைத் திருத்திடநாஞ் செய்திட்ட தந்திரங்க
ணமக்கே சார்ந்துத்
தீம்பாகி விட்டதந்தோ சேரியில்வாழ் புலைக்குலத்தைச்
சிதை கோடாலிக்
சாம்பாகி வந்துவிட்டான் கருதியிதை யாண்டையவர்
காதிற் சொல்வோம்
போம்பாதை யெதுவேனும் புகன்றிடுவா ரப்பாதை
போவோம் வாரீர்.

வசனம்.

இவ்விதம் எண்ணின புலையர்கள் மன்வியாகூல முடையவர்களாய் ஆண்டையை யடைந்து கண்டு யெல்லோரு மடிபணிந்து கூறுகிருர்கள்.

விருத்தம்.

புலையரெனு மான்கூட்டம் பொலியுஞ்சேரிப்
புகுந்துபெற்ருன் சாம்பனெனும் புலியும்வந்து
கொலைபுரியும் விதமதனை யெடுத்துக்கூறிற்
கொடுங்கதையாஞ் செவிகொடுப்பீ ராண்டேயெங்க
ணிலைகுலைந்தோ மேதுவினி நெறியாய்வாழோ
நீங்கண்மனம் வைத்திடிலோ நெருங்கிச்சூழ்வோ
மலையெனவே வோங்குமவன் செய்கையாய்ந்து
மடக்குவீ ரவனைவந்து வொடுக்குவீரே.

இராகம்-சங்கராபரணம்-தாளம்-ஆதி.

பல்லவி.

ஞாயங் கேளு மாண்டே பெற்ருனனி
யாயங் கேளு மாண்டே (ஞா)

அநுபல்லவி.

ஞாயங்கேட்டொருவி தாயமாகவேவு
பாயங்கூறுவீர் நேயமாகவெங்கள் (ஞா)

சரணங்கள்

நிதம்பெருமரங்களை வெட்டுவான் பிளந்து
நெருக்கியேகொடியினுற் கட்டுவான் றீர்க்கிச்
சிதம்பரவாலயங் கிட்டுவான் ஈசன்
திருவமுதாக்கக்கொண்டு கொட்டுவான் இந்த (ஞா)

| | | |
|---|---|---|
| சிறுகுழந்தைகடனைக் | கூட்டி | பல |
| தின்னும்பண்டங்கடனை | யூட்டி | தினந் |
| தொறுஞ்சிவநாமத்தைப் | போட்டி | போட்டுச் |
| சொல்லச்செய்கிறானே | வாட்டி | இந்த(ஞா) |
| சந்ததஞ்சிவநாமப் | பாட்டம் | அதற்குத் |
| தகுந்தபடியேநின்று | ஆட்டம் | இதை |
| வந்துபார்க்கப்பல | கூட்டம் | இல்லை |
| மனதிற்கொஞ்சமேனும் | வாட்டம் | இந்த(ஞா) |
| எங்களையழைத்துப் | பேசுவான் | சாம்பலை |
| யெடுத்துவெங்கணெற்றியிற் | பூசுவான் | பின்பு |
| சங்கையாய்ப்பலபல | பேசுவான் | நாங்கள் |
| தடுத்தால்விறகெடுத்து | வீசுவான் | இந்த(ஞா) |
| பண்ணையில்வேலைசெய்வ | தில்லை | தினம் |
| படிக்கிறான்சிவமெனுஞ் | சொல்லை | நீங்கள் |
| திண்ணைவிடுத்துவெங்க | ளெல்லை | வந்தாற் |
| றெறியுமவன்செய்திடுந் | தொல்லை | இந்த(ஞா) |

வசனம்.

ஆண்டை இவைகளை யெல்லாங் கேட்டு ஆச்சரியமுற்று அப்புலையரைப் பாாத்துக் கூறுகிறார்.

விருத்தம்.

என்னமிக விந்தையிதா யெடுத்துச்சொன்னீ
 ரேளனமிவ் வுலகிலிதை விடவேறுண்டோ
ம்ன்னுமெனை மானிலத்தின் மதிப்பார்கொல்லோ
 வழக்கமிதை வளரவிட்டான் மானம்போகுந்
துன்னுமவன் றனைவரவே சொன்னதாகச்
 சொல்லினே னென்று சொல்லுவீர்போ
யன்னவன்வந் தாலவனை யடக்கித்தாழ
 வாக்கின்றே னுங்களோடு சேர்க்கின்றேனே

வசனம்.

இவ்விதம் ஆண்டையின் உத்தரவைப்பெற்ற புலையர்கள்மன மகிழ்ந்து தங்களுடைய சேரிக்குவந்து ஆண்டைவரச்சொன்னதாகப்பெற்றானிடத்தில் நம்மவரில் யார்போய்ச் சொல்லுகிறது வெ

ன்றுகூடிப் பேசுகிறகாலத்தில் வனபூசைக் களத்தில் பெற்ருன் செய்த கோலாகலத்தை யெண்ணி இன்னும் என்னதீம்பு செய்வானே வென்று ஆலோசிக்க அப்புலையர்களி லொருவன் துணிந்துசாம்பனூ ரிருக்குமிடத்தை யடைந்து சொல்லுகிறுன்.

விருத்தம்.

அண்ணே யென்சாம்பனூரே அதிசயமொன்று கேளாய்
பண்ணையி னுமையோ ராளாய்ப் பாலிக்குமுமது வாண்டை
திண்ணமாய் வரச்சொன்னூர்நீ சீக்கிரஞ் செல்லவேண்டு
முண்மையீ துண்மை சொன்னே னுறுதியாய்ப் போவீர்நீரே.

வசனம்.

நாமபஜன பரரா யிருந்த சாம்பனூர் ஆண்டைவரச் சொன்னதையறிந்து தன்மனதில் யோசித்து ஆண்டையினிடம் வருகிருர்.

விருத்தம்.

சொன்னமொழி யாண்டைவரச் சொன்னூரோதான்
சூதுபுரிகின்ருரோ புலையர் சூழ்ந்து
என்னவித மிதனைநம்பிச் செல்வதங்கே
வித்தனைநா ளிச்செய்தி கேட்டதில்லை
யன்னவரே சொல்லியிருந் தாலாகாதோ
வானூலு நாம்போத லவசியந்தான்
மன்னுமிந்த யோசனைகள் மனத்திலெண்ணி
வந்திட்டா ராண்டையுமகிழ்ந்திட்டாரே.

ஸவாய்.

ஆண்டையின் முன்வந்தடி பணிந்தேநின்ற
ழைத்ததேனே வென்னை யென்ருர்
மூண்டிடு கோபத்தினு லாண்டை யன்பரை
முன்வந்து நில்லென நின்ருர்.

விருத்தம்

நீசனுய்ப் பிறந்தவுந்தன் நெறியதை நினைத்திடாது
ஈசனூர் தனக்குத்தொண்டு வியற்றிடுந் தன்மைபூண்டு
மாசிலாச் சேரிவாழும் வன்புலையர் களைவீணுய்
யேசிநீ பேசலேனே விதுவுனக் கழகோசொல்லாய்.

தண்டகம்.

1. புலையரெல்லாந் தொண்டு புரியக் கூட்டிவைத்துப்
புத்தியாம் போதித்தையாம்
கொலைகள் செய்துயிரைக் கொன்றிடாதமதி
கொடுத்தையாம் தின்றால் தடுத்தையாம்

2. அரனிருமந் தன்னைப் பாடிநின்றுகொண்டு
ஆட்டமாம் உனக்குக் கூட்டமாம்
வரையிலாமலுள்ள பறையர் தம்மைவாயால்
வைவையாம் துன்பம் செய்வையாம்

3. ஆக்ஷியென் றுருத்தி ராக்ஷந்தன்னைமேலே
அணிந்தையாம் மிகத் துணிந்தையாம்
காக்ஷியாக சிவ மோக்ஷம் வந்துனக்குக்
காணுதாம் இன்பம் பூணுதாம்

4. பட்டமரங்களை வெட்டித்தூக்கப்பல
பயல்களாம் உந்தன் செயல்களாம்
வெட்டிக் கட்டித்தூக்கிக் கோயிலுக்குப்போட்டு
விடுவதாம் பணிந் திடுவதாம்

1. மாமிசங்கள் தினம் மண்டித்தின்பவரை
மறுத்தையாம் எல்லாம் வெறுத்தையாம்
நேமமுடன் நான்கரஞ் சாமந்தன்னில் யோக
நிட்டையாம் எல்லாம் விட்டையாம்

6 பள்ளைப்பாடித்தினம் கள்ளைக் குடிப்பதைநீ
பழித்தையாம் அதை யொழித்தையாம்
உள்ளபடியே நான் வெள்ளாழ ருயிடில்
ஒடுக்கிறேன் உன்னை யடக்கிறேன்

வசனம்

ஆண்டையானவ ரிவ்வாறு கோபித்துக் கூறவே சாம்பனர் ஆண்டையை வணங்கிக் கூறுகிருர்

விருத்தம்.

வையாதீ ரென்னை யாண்டே வஞ்சக மொன்றுங் காணேன்
பொய்யாரும் புலையர் வந்து புகன்றதை நம்பவேண்டா
மையனே குற்ற முண்டே லடிக்கலா மானல் யானுஞ்
செய்யாத தென்ன செய்தேன் தெளிவுடன் செப்புவீரே

வசனம்.

என்று சாம்பனர் கூறவே இதனைக்கேட்ட ஆண்டை பின்னர் அதிகமாகக் கோபித்து சாம்பனருக்குப் புத்திமதி கூறிக் கண்டிக்கிருர்

பெரியகட்கா-தாளம்-ஆதி.

பல்லவி.

பெற்ருநீ புரிவ்து மிகவிடர்
பெருகுது சினமது வருகுது யெனக்குப் (பெற்)

அநுபல்லவி.

முற்றிலு நான்சொலு முறையதைக்கேட்டுச்
சற்றே வுன்னுளம் பற்றுவாயினியே (பெற்)

சரணங்கள்.

அடுக்காதமுறை யடுக்காதேகுடி
கெடுக்காதேவிற கெடுக்காதேதினங்
கொடுக்காதேயிடர் தொடுக்காதேதொழில்
விடுக்காதேயெதும் நடக்காதுமிகத்
துடுக்காகதொண் டெடுக்காதேயிது
நீசச்சாதிமுறை லேசங்கூடயிலே
பேசுவார்கள்பரி காசமாகுமிது
நாசகாலமா வேஷமாகியபி
சாசுவுன்னையுல் லாசமாய்ப்பிடித்
தாட்டுதோகதி காட்டுதோமகி
மூட்டுதோவிணில் வாட்டுதோபண்ணை
வேலைதன்னைதினங் காலைமாலையன்
பாலேசெய்துதருங் கூலிகொண்டுமனம்
போலேபறையருக்கு மேலேவாழுபர
முத்தியேதுசிவ பத்தியேதுநல்ல
புத்தியின்றிநீ யுத்திசெய்குவது
சித்தியாகுமோ மெத்தபாடுயேன்
பித்துகொண்டுபிர் மித்திடாதேமனம்
நாட்டுகாளைகளை யோட்டுகலப்பையதிற்
பூட்டுவயலதிலே வாட்டுகுளத்துநீரைக்
காட்டுதீனியதைப் போட்டுவந்துநம்

| | |
|---|---|
| வீட்டுவேலையதைக் | கேட்டுக்கொல்லையதைக் |
| கூட்டுயெந்தனிடங் | கேட்டுவாங்கியொரு |
| சீட்டுகள்ளுக்கடை | நீட்டுதண்ணிதனைப் |
| பேோட்டுவந்துபல | பாட்டுபாடுவீ |
| ணுய்க்கெடாதேகாலம் | போக்கிடாதேவிறகு |
| தூக்கிடாதேயினி | நோக்கிடாதேயிடர் |
| தேக்கிடாதேகுலம் | நீக்கிடாதேயினி |
| அடிப்பேன்வயிற்றி | லடிப்பேன்கூலியைப் |
| பிடிப்பேன்சண்டை | தொடுப்பேன்குடி |
| கெடுப்பேன்பொய் | நடிப்பேன்சிவப் |
| படிப்பேன்மனத் | தடிப்பேன்எண்ணம் |
| பலிக்காதுபத்தி | கெலிக்காதுமனஞ் |
| சொலிக்காதுயிதில் | நிலைக்காதுநீ |
| கெடாதேவீண்பே | ரெடாதேவன்பு |
| படாதேசேரியை | விடாதேபழிசுமந் |
| திடாதேபாடுகள் | படாதேவிறகைக் |
| கொடாதேபணிந் | திடாதேநீற்றைத் |
| தொடாதேநெற்றியி | லிடாதேயிட்டால் |
| தீங்குநேரும்பா | சாங்குசெய்யிற்சின |
| மோங்குமென்னைவிட்டு | நீங்குமாறுவரும் |
| படுநாற்றைப்பிடுங் | கிடுவுடனேயடித் |
| திடுவடித்ததுங்கட் | டிடுவயலதிலே |
| நடுநீரைப்பாய்ச் | சிடுகாவலாய்ப் |
| படுதமுக்குதனை | யெடுயிரவினிலே |
| திடுதிடெனவடித் | திடுபத்திதனை |
| விடுதொண்டுதனை | விடுவழிமுறைப் |
| படுவயலைப்பயி | ரிடுமடைதிறந்து |
| விடுஅண்டைவெட் | டிடுசேரிக்கு |
| நடநடநட | ராசனைப்போலே (பெற்) |

வசனம்

ஆண்டை யிவ்வாறு சாம்பனரைக் கண்டித்துப் புத்தி கூறவே சாம்பனர் ஆண்டைக்குத் தண்டனிட்டுக் கூறுகிறார்.

விருத்தம்.

குடியிருப்போ வுங்களிடங் கூரையதி லுங்கண்மரங்
குடியாய் வாழும்
படியெனக்கு மானியமுங் கொல்லைகளும் பரிந்தளித்துப்
பதமாய் வைத்துக்
கொடியிடையாள் புலைச்சியொரு வளைமணக்க வைத்தீர்யான்
கூடி வாழ்ந்தேன்
அடிமைமுறி வரைந்தளித்தே னண்டையுங்கண்
மொழிதவறி யகலேனையே.

ஷ்டி

எத்தனையான் குற்றங்க ளிழைக்கினு மெள்ளத்தனையு
மிதயத் தெண்ணு
துத்துமரே யெனைவகித்துத் தொண்டுசெயும் படியாண்டீ
ருய்ந்தே னெந்தன்
சித்தமதி லீசனதுச் செங்கமலப் பொற்பாதஞ்
சிந்தை செய்யும்
பித்தனெனைத் தூறுரைக்கும் புலையரது மொழிக்கிணங்கிப்
பேச லாமோ.

வசனம்.

சாம்பனூர் இவ்வாறு ஆண்டைக்கு நயங்கூறி ஆண்டையின் உத்தரவு பெற்றுத் தனதிருப்பிடம் வந்து. என்றும் போலவே தொண்டுசெய்வதிற் சிறந்து ஈசனுலவளிக்கு இரண்டு பணத்தையும் பெற்று தன்னில்லறத்தை நடத்துவாராய் வாழ்ந்துவர பின்னர், ஓர் நாள் ஆண்டை தன் வயல் முதலியவற்றைப் பார்க்கும்பொருட்டும் சாம்பானது நிலையை யறியும்பொருட்டும் மனதிலெண்ணிச் சேரியை யடைந்து புலையர்களைக்கூவி யழைத்து விசாரிக்கிருர்.

இராகம்-சுருட்டி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

வயல்களைச் சுற்றிவந்திடவாண்டையுந் தேர்ந்தார் தன்
மாளிகைவிட்டு புறப்பட்டுத் தன்பண்ணை சேர்ந்தார்

அநுபல்லவி.

பயல்களே தண்ணீர் பாய்ச்சாமலேனிந்தப்
பங்குவ றண்டிட சென்றது
வெங்கதை யிங்குநீ யோதென (வயல்)

சரணங்கள்

நாற்றைப்பிடுங்கி நடாமலிருந்ததென் னீரே இந்த
நன்செய் நிலந்தன்னை நட்டுயென்னிடஞ்சொல் லீரே
ஏற்றமிட்டுத் தண்ணீர்பாய்ச்சாமற் காலத்தைப் போக்கி நீர்
என்னசெய்கின்றீ ரிச்சேரியில் நாளைவீ ணாக்கி
சோற்றுக்கு நெல்லையளந்துதொலைத் தேனே
சொன்னதைச் செய்வீரென்றே யான் மலைத்தேனே
தூற்றி நெல்லைக்கட்டித் தூக்கிவராதின்னும்
தூங்கிசு ணங்கியே வேலையி
லேங்குதல் பாங்கிது வோவென (வய)

வசனம்.

இவ்வாறு ஆண்டை வயல்களில் வேலைசெய்யும் பறையர்களையதட்டி செய்யவேண்டிய வேலைகளைச்சொல்லிக்கொண்டு வருங்காலத்தில் பறையர்கள் ஒன்றாய்க்கூடி யொருமொழியாய்க் கூறுகிறார்கள்.

விருத்தம்.

தட்டாம லுங்கள்மொழி தலைமேற்கொண்டு
தாழ்ந்துபணிந் தேவேலை சரியாய்ச் செய்வோம்
திட்டாதீ ரெங்களைநீ ராண்டேதீது
செய்கின்ற பெற்றானைச் சேரிவாழ
விட்டாலெங் களுக்குதவி வேலைசெய்வான்
வீணாகப் போகின்றான் விறகெடுத்தே
யெட்டானை வலியுள்ளா னவனைக்கண்டு
யேற்றமுறை சொலியவனைத் தேற்றுவீரே.

வசனம்.

இதனைக்கேட்ட ஆண்டை சாம்பனார் சிறுகுழந்தைகளையும் பறையர்களைந்து பேர்களையும்சேர்த்து வைத்துக்கொண்டு நாம

பஜன பரர்களாயிருக்கும் இடத்திற்குவந்து நோக்கவே, சாம்ப னார் முதலிய யாவரும் வந்து ஆண்டையை வணங்கி நிற்கவே அவர்களைப் பார்த்து ஆண்டைகூறுகிறார்.

விருத்தம்.

ஆண்டையவர் களைநோக்கி யகமகிழ்ந்து
வாச்சரிய மிதுவென்று வன்பராகிப்
பூண்டமணி மாலைகளும் பூதியங்கம்
பூசிசிவ நாமமதைப் புகன்றுவென்றும்
வேண்டியரன் றனைப்பணியு மெய்யன்போடும்
விளங்குமவர் தமைநோக்கி மீன்பிடித்தான்
மூண்டபயிர்த் தொழில்புரிதல் முயலா நீங்கண்
முணுமுணுத்தா லென்னவரு மொழிகுவீரே

வசனம்.

இதனைக் கேட்ட சாம்பனாரு மற்றவைந்து புலையர்களுஞ் சிறுவர்களுங் கூடி ஆண்டையை நோக்கிக் கூறுகிறார்கள்.

சிந்து.

1. காதலோடபர நாதந்தன்னிலூறுங்
கள்ளையாங்கள் குடிப்போம் பத்தி
வெள்ளமீனைப் பிடிப்போம் சிவனைக்
கருதிபள்ளு படிப்போம் மறக்
காதுநின்றுபர வீதிதன்னிலிரு
கையைக்கொட்டி நடிப்போம்.

2. மாதோர்பாகனையெண் ணுதவினபசு
மாடுதன்னை யுரிப்போம் தோலை
வாடும்படி விரிப்போம் அற
வரப்பிலென்றுஞ் சரிப்போம் பவ
மாங்கிணற்றிலூறு மட்டையையடித்து
மகிழ்ந்துநாரைத் திரிப்போம்

3. உள்ளமென்னும்வயற் கொள்ளபத்திநீரை
யோடவிட்டுத் தொழுவோம் உறுதி
மாடுகட்டி யுழுவோம் பயி
ரோங்கவெண்ணி யழுவோம் எங்க
ளூனமாறவேலை யானபோதுசுக
வோடைதன்னில் விழுவோம்

4. பள்ளப்பாடிதினம் வெள்ளமார்முடியைப்
பன்னிப்பறை கொட்டுவோம் வினை
யென்னுஞ்செடியை வெட்டுவோம் மனப்
பழுதைப்போக்கிக் கட்டுவோம் மேலாம்
பரம்படிப்போமன்றி பறம்படிப்போமல்லோம்
பதைத்தைப்பார்த்து கிட்டுவோம்

வசனம்

சாம்பனூர் முதலியவர்க ளிவ்வாறு கூறுவதைக்கேட்டஆண்டைஅவர்களை நோக்கிக் கூறுகிறார்.

விருத்தம்

கொலையதைத் தொழிலாய்க்கொண்டு குவலயந் தன்னிற்பாப
மலைகட லென்னநீங்க ளனுதினம் புரிதல் விட்டோர்
நிலையென நின்றுபத்தி நெறியடைந் தாலுநீசக்
குலமதி னளவேயாகுங் கொண்டநுங் கொள்கைதானே.

தண்டகம்.

பரமனருள் தருமோ உத்தமப்
பத்திமனதில் வருமோ
வரவர சேரியில் வழக்கமில்லாத
வழக்கஞ் செயப் படுமோ.
குலத்தளவே யாகும் குணமே
கொள்கையுந்தாழ் வாகும்
நிலத்தளவே யாகும் பயிர்கள் மிக
நீண்டுசெழிக்கு மோடா.
எத்தனைசெய் தாலும் ஈசனை
யெவ்வளவெண்ணி னாலும்
சூத்தகுலத்திற் கன்றி பத்திபுலையருக்குந்
தோன்றிடுமோ போடா.

இராகம்-காபி-தாளம்-ஆதி.

பல்லவி.

பறையா நீபுரிவதுனது குலப்
பாங்கிது வோடா எந்தனடிமைப் (பறை)

அநுபல்லவி.

முறையா குடிகெடுமிது மூடா
முரட்டுத் தனம் பண்ணுதே மோசமிதே (பறை)

சரணங்கள்.

சாதிதன்னை மனந்தனில் மறந்திந்தச்
சாதனை யேனோ . உனக்குகந்த
நீதிநான் சொல்லியுங் கேட்டிலை
நெறியிது தானோ என்னிடமினி
வாது செய்திடும் படியுனை சும்
மாய் விடு வேனோ
ஏது பெரும் பத்தியிற் சிறந்தாய்
என்னை யுளத்திற் றுறந்தாய் எந்தனடிமைப் (பறை)

வசனம்.

சாம்பனுரை இவ்விதமாய் ஆண்டைகோபித்துத் தக்க புத்திமதிகளைச் சொல்லி தங்கள் திருப்பிடம் சென்ருர். பின்னர் சாம்பனுர், ஆண்டைக்கு இத்தனை நல்விஷயங்களைச் சொல்லியும் கொஞ்சமும் நெஞ்சிற் படவில்லையே யென்று தன்மனத்தைப் பார்த்துக் கூறுகிருர்.

இராகம்-கலயாணி தாளம் சாப்பு.

பல்லவி.

மார்க்கஞ் சொல்லினுற் படுமா மாயாபாசதுன்
மார்க்க வாசனை விடுமா
மடமனமே ஞானபத்தி (மா)

அநுபல்லவி.

பார்க்குண் மயங்கி நின்று பாபம் புண்ணியமென்று
பகுத்தறிவிலாது பாதவித்துத் துன்ப
மிகுத்தவர்க்கு ஞான மேவும்பே ரின்ப (மா)

சரணங்கள்.

எட்டிக்குத் தேன்விட்டா லினிப்பு முண் டாகுமா
ஈனச்செம்பின் களிம் பானது மேகுமா
குட்டிக்கு நாய்க்குணங் குலைப்பதும் போகுமா
கோதிலாமலைப் போதுந் த்யாகரா சன்
ஓதிப்புகழ்ந்திடு நீதியான சன் (மார்)

வசனம்.

இவ்வாறு தன் மனதிற்குப் போதனை செய்த சாம்பனார் தான் எப்போதும்போல திருத்தொண்டு செய்வதிற் சிறந்தார்.

இராகம்-நாதநாமக்கிரியை-தாளம்-ஆதி.

பல்லவி

தொண்டு செய்து கொண் டேவந்தார் —தினந்
தொறும்பெற்றுன் சாம்பனார்
விறகளித்துப் * பாம்பனார் (தொ)

சரணங்கள்.

பரிதியுதிக்கு முன்னே படுக்கையை விடுத்து
பண்புடன் முகந்தனைத் துடைத்து நீ றெடுத்து
உரியநெற்றியிற் பூசி நாமத்தைத் தொடுத்து
உற்றவரிவாளெடுத்துச் சுற்றிச்சோலையை யடுத்து(தொ)

பட்டமரங்களைப் பார்த்துமே வெட்டி
பரிவுடன் பிளந்ததைக் கொடியிறைற் கட்டி
இட்டமோடுசிரந்தனிலெடுத் தட்டி
யின்றிபாடிகையைக் கொட்டியென்றுஞ்சிதம்பரங் கிட்டி(தொ)

குருவருள் கொள்ள வெண்ணங் கோரியே ஆழ்ந்து
குறைவிலாத பத்திக் குரைகடல் வீழ்ந்து
திருவருள்பெறத் தில்லை நாதனைத் தாழ்ந்து
சேவடிநிழலில்வாழ்ந்துச் சிறப்பதென்றெனச் சூழ்ந்து (தொ)

வசனம்.

சாம்பனார் இவ்வாறு நாடோறும் சிதம்பராலயத்திற்கு விறகையளித்து ஸ்ரீமந் நடராஜப் பெருமானாற்றரும் இரண்டு பணத்தைப் பெற்றுத்தனது இல்லறத்தை நடாத்தி வாழ்ந்து வருங் காலத்தில் ஈசன் றிருவருளால் சாம்பனாரி னுள்ளத்திலே தனக்கு வொரு குருநாதன் கிடைத்து அன்னவ ரருளாற் சற்கதி யடையு வேண்டுமென்று தோன்றவே சாம்பனார். தன்மனதிற்கு குருவருளின்றி திருவருள் கிடைப்பது அரிதெனக் கூறுகிறார்.

---

* பாம்பனார்-பாம்பை யணிந்த பரமசிவன்.

இராகம்-பியாகடை-தாளம்-ஜம்பை.

பல்லவி.

குருவருளிலாமலரன் றிருவருளெக்காலுங்கை
கூடிடாது மனமே (குரு)

அநுபல்லவி.

மருளாரும்பாழ்மனத்தி னிருளானதொழியபதம்
தருஞானவுபதேசந் தரு தேசிகனை (குரு)

சரணங்கள்

1. வேதமுத லாகமங்கண் மேவியுணர்ந் திட்டாலும்
வேதாந்தஞ் சித்தாந்த மெய்யையறிந் திட்டாலும்
சாதனையா யோகமுறை தன்னைபுரிந் திட்டாலும்
சந்ததமும் பத்திவசந் தன்னினிலைத் திட்டாலும் (குரு)

2. புண்ணிய நதிகள்பல பொருந்திபுன லாடினாலும்
புகழுஞ்சிவ தலங்கடனைப் போந்துகண்டு நாடினாலும்
திண்ணமூட னறங்களையே செய்தன்பு கூடினாலும்
தினமுந்திரு நீறணிந்து செபஞ்செய்து வாடினாலும் (குரு)

4. மீனமென வேகருணை விழியினாற் பார்த் திட்டும்
வினையொழிய கோழியென வேபரிசமாய்த் தொட்டும்
ஞானமுற வாமையென நன்மனதிலெண் ணிட்டும்
நன்மைசெயா விடிலந்த நற்பதமெப்படிக் கிட்டும் (குரு)

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ஆதி

பல்லவி.

குருவருளடையாமல் வாழ்வேனோ பாழுங்
கொடும்பவசாகர மாழ்வேனோ யான் (குரு)

சரணங்கள்.

1. பரனருளடைந்த குருபததரி சனம்
பரமவிசேஷம் பாபவிமோ சனம். (குரு)

2. சற்குருவசனமே சாஸ்திரம் வேதம்
நற்கதிதருமே ஞானிகள் பாதம் (குரு)

3. தரிசனத்தாலே தாபங்கள் போகும்
பரிசத்தினலே பாசங்க ளேகும் (குரு)

4. நோக்கதினல்கல் லுணர்ச்சியிற் றேக்கும்
வாக்கதினலேதன் மயமுற வாக்கும் (குரு)

5. மழைமுகங்காணுப் பயிரது போலே
தழைதலின்றிவாடித் தளர்ந்தேன்மென்மேலே (குரு)

சிந்து.

தில்லைமணி பொற்சபையின் வாசன் நீண்ட
செஞ்சடைய ணிந்தொளிருங் கொன்றைமலர் வாசன்
தொல்லையறு நடனமல ரடியான் றனை
சொந்தமென சிந்தையில்நி னைக்குமவ ரடியான்

துள்ளியெழு வெள்ளிவிடை வாகன் வினை
தொலையவருள் புரியுமன கருணைப்ர வாகன்
உள்ளமுடை யார்க்குதவு சித்தன் வேத
மோதினவ ஞதியென வெங்கும்ப்ர சித்தன்

மின்னலென மின்னுவா ளுடையான் இடர்
வெம்புலியி னங்கமுறு கின்றவத ளுடையான்
பன்னுமிசை டமருக கரத்தான் இளம்
பாவைசிவ காமிமய லாஞ்சா கரத்தான்

மஞ்சுவளர் கைலாய புரியான் தட
மார்பினி லிலங்கியொளிர்கின்றநூற் புரியான்
ரஞ்சிதா கரகநக வில்லான் த்யாக
ராஜதா சன்றனது நேசமன வில்லான்

வசனம்.

ஸ்ரீமந்நடராஜ மூர்த்தியை இவ்வாறு துதித்துத் தனக்கு சற்குருகிடைக்க வேண்டுமென்னு மவாவினராய் பின்னும்ஈசனைத் துதிக்கிறார்.

கண்ணிகள்

1. வேதமலர்ச்சுரும்பே மேலவருண் ணுங்கரும்பே
நாதமுடிவிலமர் நாதனேபொன்னம்பலவா

2. சாமவேதப்பொருளே தன்னிகரில்லாச்சுவையே
எமச்சபையில்வள ரென்னரசேயென்மணியே

3. ஆதியந்தமில்லாத அற்புதனே தற்பரனே
சோதிவுருவாகநின்று தொல்லைதவிர் தூயவனே

4. அன்பேயென்னாரமுதே ஐயாவுன்னடைக்கலமே
இன்பாரவேயெனக்கு இன்னருளைச்செய்யுமினே

5. பொன்னம்பலத்தரசே புண்ணியத்தின்புண்ணியனே
இன்னும்பலயோனியுற்று மின்னலடையாதருளே

6. கற்பகமேமுக்கனியே கண்டேநற்கண்ணியமே
சிற்பரனேசெங்கமலச் சேவடிதந்தருளாயோ

7. ஆகமத்தினரும்பொருளே அன்புவுருவானவனே
ஏகமனத்தோடுவுனை யெண்ணுமெனைக்காத்தருளே

8. உயிருக்குயிராய்வளரு முக்தமனேவித்தகனே,
அய்னைடுமால்பாருமுண ராதபுகழ்வாய்ந்தவனே

9. குருவருளையடைந்துயெந்தன்கொடுமாயைநீங்கிடவே
திருவருளைச்செய்துயெனைச் சேர்ந்திடுவாயுன்னடியே

10பாழும்பறையனென்று பாராதிருப்பதுண்டோ
ஆழுநரகத்திற்கு ஆளாகேன்சங்கரனே.

வசனம்.

பத்திவைராக்கிய மிகுந்த சாம்பனுரிவ்வாறு ஸ்ரீமந் நடராஜ மூர்த்தியை மனதிலிடை விடாது தியானித்தவராய் அன்புப் பெருக்கத்தின் மிகுந்து கண்ணீர்மல்கி தேகம் புளகித்து நாமத் தைப்பாடி பூதியணிந்த புங்கவரான மெய்யன்பர் கையிலரிவாள் கோடரி வகித்துச் சோலைகளிற்சென்று, வோர்நாள்விறகுவெட்டு கிருர்.

இராகம் பூரிகல்யாணி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

விறகு வெட்டினுர் சாம்பனுர்
விறகு வெட்டினுர். (விற)

அநுபல்லவி:

அறமெனு மொரு அரிவாள் பிடித்து
மறமெனும் வினை மரங்க ளொடித்து (விற)

சரணம்.

கிளைக்ளை வெட்டிக் கழித்துமே சொந்தக்
கிளைகளை வெட்டிக் கழித்துமே
தனைநிகர்பவ சாகரம் நீங்க
தன்மயமான சின்மய மோங்க (விற)

வசனம்:

சாம்பனு ரிவ்வாறு விறகுவெட்டிப் பிளந்து தலையிற்றூக்கி ஸ்ரீமந் நடராஜ மூர்த்தியின் குஞ்சித சரணத்தை தியானித்தவராய் சிதம்பராலயத்தை நாடிவருகிறார்.

இராகம்-நாட்டைக்குறிஞ்சி-தாளம் சாபு

பல்லவி.

உனது பதமல ரனுதினமனதி
லுன்னினே னையா

அநுபல்லவி.

அனவரதந்தில்லைக் கநகசபை நண்ணி
அரி மத்தளம் போட
அமரர் பாட
அடியர் கூட நடனமாடும் (உன)

சரணங்கள்.

பஞ்சக்ருத்யமிலங்க காளிகலங்க தண்டைகுலுங்க கண்டிடு
பத்தர்சித்தந் துலங்க பத்திவிளங்க வன்பர் நெருங்கி நின்றிட
தஞ்சமென்று த்யாக ராஜதாசன்பல
தரம்பணியுஞ் சிதம் பரந்தனிலே நின்று

தா——ததிங்கிணத்தோம்
தா——ததிங்கிணத்தோம்
தா——ததிங்கிணத்தோம்
தாவென்றுடுங் குஞ்சித (உன)

வசனம்.

பெற்றான் சாம்பனு ரிவ்வாறு ஸ்ரீமந் நடராஜ மூர்த்தியைச் சிந்தித்த வண்ணமாய் சிதம்பரஞ்சென்று ஆலயத்திற்கு விறகளித்துவிட்டு ஈசனளிக்கும் பணத்தைப்பெற்று வீதிவலம்வந்து ந

மஸ்கரித்து சேரியைநாடி வரும்போது தில்லை மூவாயிரர்களிற்சிலர் சாம்பனுரைக் கண்டு ஆசீர்வதித்துக் கூறுகிருர்கள்.

விருத்தம்.

நாளைமுதற் கொண்டுதனுர் மாதமது நிகழுவதால்
நாள்க டோறும்
வேளை தவ ருதுவெரி விறகளிப்பாய் நமதீசன்
விழவீ டேற
பாளைகமழ் தில்லையதில் நடம்புரியும் பரமனருள்
பாலித் துன்னை
யாளுமினி யடிமைகொளு மவன்பதமே திண்ணமதா
யடைகுவாயே.

வசனம்.

என்று கூறக்கேட்டு சாம்பனுர் முன்னிலும் பெருகுமுவகையராய் கரங்கொட்டி கண்ணீர் மல்கி அவர்களை வணங்கி விறகளிக்கின்றேனென்னச் சொல்லி விடைபெற்றுத் தனதிருப்பிடம் வரவே, அகமகிழ்வோடு வருர். சாம்பனுரைப் பார்த்த அங்குள்ளபுலையர்கள் சாம்பனுரைக் கேழக்கிருர்கள்.

விருத்தம்.

தில்லையாம் பதிக்குச்சென்றுத் திருத்தொண்டாம் விறகளித்து
மெல்லநீ வரலொழித்து மிகமகிழ் மனத்திற்கொண்டு
எல்லையில் லாதவன்பி லிசைந்தனை போலுங்கண்டோம்
நில்லுநீ வுனக்குவாங்கு நிகழ்ந்ததின் றென்னசொல்வாய்.

வசனம்.

சாம்பனு ரிதனைக்கேட்டு புலையர்களுக்கு மனமிரங்கி நிகழ்ந்ததைக் கூறுகிருர்.

விருத்தம்.

பார்புகழ் தில்லைவாழும் பரமனுக் குரியதான
மார்கழித் திங்கள்வந்து மருவுகின் றதுநாளைக்கே
சீர்பெற விடியுமுன்னே சிதம்பரத் தலத்தைநண்ணி
தேர்வரும் வீதிசுற்றித் திகழ்ந்திடு மகிழ்கொள்வேனே

வசனம்.

இதனைக்கேட்ட புலையர்கள் மகிழ்ந்து அன்பு மேலீட்டை யடையவே மறுநாள் தன்னைச்சூழும் பறையர்களோடு விறகுக் கட்டைதூக்கிக் கொண்டு சிதம்பரம் வீதிவலம் வருகிறார்கள்.

இராகம்-பூபாளம்-தாளம்-சாபு
கண்ணிகள்

தில்லையம்பலமாடுஞ் சிவபெரு மானே
எல்லையிலாப்பொருளே யென்கோ மானே
பணியும்புலியுந்தினம் பணியுமென் கோவே
அணையும்வல்வினை தீர்த்திட் டாளுமை யாவே
சனனமரணநோயைத் தவிர்த்திடு மருந்தே
மனனஞ்செயுமன்பரின் வாயிலின் விருந்தே
நாயேன்புலையனென்னை நற்கதி சேரும்
ஆயுங்குருவைக்காண அருளது தாரும்

வசனம்.

சாம்பனார் துதித்து வீதிவலம் வந்து விறகை யளித்து வணங்கி கைகுவித்து ஸ்ரீமந் நடராஜ மூர்த்தியை துதிக்கிறார்.

இராகம்-கேதாரம்-தாளம்-ஆதி.

பல்லவி.

பரமக்ருபா கரனே சம்போ
பாபஹரணாம்ருகதரசசிதர சிவ (பர)

அநுபல்லவி.

சுரவரரனுதினம் துதித்திடும் பாதா
சோமசூர்யாக்நி சுலோசன நாதா (பர)

சரணம்

பக்தபாலனு பவவி மோசனு
பஞ்சகிருத்ய பரமானந்த நடனு
சுத்தபராத்பர ஜோதிப்ர பாகர
சோபதா பாந்தகாரதி வாகர (பர)

வசனம்

இவ்வாறு துதித்து அத்தனார்மாதமுற்றினும் கழித்தவராய் தன்விறகுத் தொண்டை யியற்றி ஸ்ரீமந்நடராஜ மூர்த்தியால்

கொடுத்தருளும் பணத்தைப் பெற்று தன் இல்லறத்தை நடத்தி வருங்காலத்தில் தைமாதமான மகரமாதம் வந்து சேரவே சாம்பனர் தன்னை யறியாத அன்பு மேலெழ ஆனந்தபுளகிதராய் கண்ணீர் மல்க கண்ட ஐந்து புலேயர்களும் சிறுகுழந்தைகளும் சாம்பனரை வணங்கி என்ன, அண்ணே, இந்தமாதம்பிறந்ததுமுதல் ஏதோ அதிகசந்தோஷமாக நீயே ஆடிப்பாடிக் கொள்ளுகின்ருயே யென்ன; சாம்பனர் இந்த தைமாதத்தில் தான் ஸ்ரீமந்நடராஜமூர்த்தி தாண்டவம் புரிந்ததென்று எடுத்துக் கூறவேஅதை விரிவாகச் சொல்லவேண்டு மென்று கேழ்க்க சாம்பனர் கூறுகிருர்.

ஓரடிப்பதம்.

இராகம்-மத்யமாவதி-தாளம்-ஆதி.

**பல்லவி.**

ஆநந்த நடன மாடினர் தில்லை
யம்பலசி தம்பரத்தில் (ஆ)

அநுபல்லவி.

ஸாநந்தஞானவேத சகலாகமப்ர தாபன்
ஸர்வாதீதப்ரகாசன் சச்சிதாநந்த ரூபன்

தவஞ்செய்யும்பதஞ்சலி வ்யாக்ரபாதரவர்
தம்முளங்களி கொண்டு மனஞ்
சிவமயமாகிநின்று பவமறவேகண்ணுரத்
தெரிசனத்தனைக் கண்டு அருள்

தேடி மனதுருகி வாடி நிற்கபலர் கூடி அரகராவென்
ருடி இருகைதலை யோடி குவிதரவே பாடி மகிழ்வுதள்
ளாடி பலகோடான கோடி வானவரன்பு நீடி யின்பசாகர
மாடி அன்பினுற்குதித் தோடி தரிசனத்தை நாடி நின்றிடமகிழ்

சிந்தையாகவேமு குந்தன்மத்தளம் வா
சித்துவின்ப நீட கதியுணர்ந்து
சந்தமோடுவர விந்தவாசன்பொற்
ருளம்வகித்துப் போட நாரதரோடு
கந்தர்வராதியர் காயகர்வீணைகொண்டு
கானமன்றகள் பாட விண்ணுலகின்
சுந்தரிகள்பலர்கள் வந்துகொடியினம்போல்
துவண்டுபரத மாட பலசுரர்கள்.

| | | | |
|---|---|---|---|
| ஆட | சடைமுடி | ளாட | கங்கையவ |
| ளாட | குளிர்மதிய | மாட | குழையணிக |
| ளாட | நீலமிட | ரூட | இருபுயமு |
| மாட | விடையணிக | ளாட | துடியதுவு |
| மாட | மான்மழுவு | மாட | புலியுடையு |
| மாட | அபயகர | மாட | வரதகர |
| மாட | யுமையவளு | மாட | கணபதியு |
| மாட | மயில்முருக | னுட | அருள்விழிக |
| ளாட | பதமணிக | ளாட | முயலகனு |
| மாட | முனிவர்களு | மாட | பூதகண |
| மாட | புவனங்களு | மாட | பூதமுந் |
| லாட | வைந்தொழிலு | மாட | பசுவெவையு |
| மாட | வேதங்களு | மாட | ஆகமங்க |
| ளாட | மந்திரங்க | ளாட | தருமவுரு |
| வாட | பிரணவமு | மாட | அன்பர்மன |
| மாட | வினைவரு | மாட | சேடன்முடி |
| யாட | வசுரர்குல | மாட | சபைதனிலே |

மகரமாத மதிலே குரு வாரம்
மகிழுமிடப லக்கினம்பகல் நேரம்
புகழும்பூசதினமாமதி சாரம்

பூத நாத னீன மீனே கர
வேத கீத விநோத மான பர (மாநக்)

வசனம்.

சாம்பனு ரிவ்வாறு தாண்டவ மகிமையை எடுத்துக் கூறவே கேட்டபுலையர்கள் ஆனந்த பரவசமுற்றார்கள் பின்னர் சாம்பனார் தனக்கு சத்குரு கிடைத்தலை மனதிலெண்ணி திருத்தொண்டிய ற்றி வருகிறார்.

---

இனி சாம்பனார் அடையப்போகிற சத்குரு உமாபதி சிவாசாயா ருடைய வரலாறு கூறும்.

பத்திவிலாஸம்

முற்றிற்று.





## 2-வது ஸத்குருவிலாஸம்.

### தில்லைவனச் சிறப்பு.

### சிந்து.

1. அண்டர்பிரான் வாழுகின்ற ஸ்தானம் ஸ்ரீவி
ராட்புருஷனின் ஹ்ருதய ஸ்தானம் முன்பு
ஆதிசேட னோடுபுலி பாதந்தொழு தேபணிந்த
வனமே தில்லை வனமே.

2. விண்டுமுதற் றெண்டர்பலர் காண காளி
மிக்கவெட்க முற்றுதலை நாண யாரு
மேத்திவரம் வேண்டவீசன் ஊர்த்துவ தாண்டவமாடும்
வனமே தில்லை வனமே.

3. வாய்திறந்து வூமைமொழி யாட மணி
வாசகர் திருவாசகம் பாட கண்டு
மானிலத்தோ ருந்திகழும் வானிலத்தோ ரும்புகழும்
வனமே தில்லை வனமே.

4. தூயநீல கண்டர்கொண்ட தேவி சொன்ன
சொல்லை யுன்னியேதொடாமல் மேவி அவள்
தோளைக்கரு தாமலிளங் காளைப்பரு வங்கழித்த
வனமே தில்லை வனமே.

5. நந்தனுமி ழிந்தகுல நீசன் மன்றில்
நண்ணிநடம் பண்ணிடுந ேடேசன் றனை
நாளைப்போயி காண்பேனென நாளைப்போக்கி யேயடைந்த
வனமே தில்லை வனமே.

6. சிந்தையினிற் காலபய நீக்கி அரன்
செவடியி லேமனதைப் போக்கி அருட்
சீரளித்துச் சீவன்முத்தப்பேரளித்து வாழச்செயும்
வனமே தில்லை வனமே.

7. மேவுசிம்மவர்மன் குஷ்ட *ரோகி ஈசன்
மென்பதத்தி லன்புடைய னாகி தன்
மேலிருந்த நோய்திரிந்த தான்மகிழ்ந்து மேபணிந்த
வனமே தில்லை வனமே.

---

* இரணியவர் மனைக்குறித்துச் சொல்லியது.

8. மூவாயிர மாமுனிவர் கூடி வேத
மூலனைநற் காலமாறும் நாடி பர
முத்திபெற வேயிச்சித்து பத்தியுட னேயர்ச்சிக்கும்
வனமே தில்லை வனமே.

## ஸ்ரீ சிதம்பர க்ஷேத்ரவர்ணநம்

சிந்து.

1. சந்ததந டம்புரிச பேசன் அருட்
சத்திசிவ காமியவள் நேசன் தங்கிச்
சாருந்தில்லை மாநகரச் சீரதனி லேசிறிதைத்
தானே சொல்லு வேனே.

2. விந்தைதரு கின்றவீதி தோறும் இது
விண்ணுலகின் மேலிதெனக் கூறும் படி
வீடுகளு மாளிகையு மாடமொடு, மாடிகளும்
விளங்கும் கொடி துளங்கும்.

3. மேவுபல தேவர்மனம் நாணம் பெற
வேதமுத லாகமபு ராணம் பல
வேதியர்க ளோடுசைவ ரோதிடுசு நாதமது
வீறும் திசை தோறும்

4. பாவலரும் நாவலருங் கூடி பல
பாவினங்க ளும்பதமும் பாடி வாழும்
பங்கமிற்ப்ர சங்கசபைச் சங்கவிற்ப னங்களெங்கும்
பரவும் பக லிரவும்

5. தத்துவம்வி ரித்திடுவி சாரம் கொண்ட
சாதுஜன வாதமோடு பாரம் அதிற்
றர்க்கமோடி லக்கணவி லக்கியவ ழக்குதனிற்
றழைவார் மனங் குழைவார்.

6. சத்தசுர மொத்திடுசங் கீதம் பல
தக்கவித்து வான்கள்பாடும் நாதம் இன்ப
சாகரம்போன் மேவியேம னேகரமே லாடநார
தருக்கும் மன முருக்கும்

7. நல்லவர்க ளில்லறத்தை நீங்க தவ
ஞானிகளுங் கண்டுமய லோங்க விலை

நங்கையர்க ளெங்குநட னங்கள்செய்தி லங்கிபலர்
நடிப்பார் கை பிடிப்பார்

6. அல்லலறுத் தாளுநட ராசன் த்யாக
ராஜதாச னுக்கருளு மீசன் வாழும்
அந்தமார்சி தம்பரப்பெ ரும்புகழ்வி ளம்புவது
யாரே புவி யோரே.

---

ஸ்ரீ சிதம்பராலயவர்ணநம்.

சிந்து.

1. தில்லைக்கோயிலின்சீர் யாவும் ஆதி
சேடனீராயிர நாவும் கொண்டு
செப்பிடினுங்குறை மேவும் அதின்
திருமாமதி ளவைநாலுமே
வரைபோலுயர் வொடுவானவர்
சேரும்பதியைய ளாவும் அதி
லாரும் விடைகளங்கு லாவும்

2 சித்திரக்கோபுர நாலும் சொல்லிற்
செம்பொற்கிரியெனி லேலும் அதின்
சிகரங்களின்கொடி மேலும் சென்று
திகழ்மாமதி யுறுமாசது
மிகவீனம தெனவேயதைத்
தேய்த்திடச்சென் றதைப் போலும் மேலே
சென்றசைந்தாடுமெக் காலும்

3. சொல்லொணுநல்லொளிச் சூட்சி தரத்
தோன்றுந்த்வஜஸ்தம்ப மாட்சி மிகத்
தூரவான்வரையும் நீட்சி கொண்டு
சுரர்யாரையும் மறைநூன்முறை
பிரியாவகை புரிவீரெனச்
சோதிநடனர சாட்சி செய்யத்
துன்னுஞ் செங்கோலாகுங் காட்சி

4. எல்லைமூவாயிரர் கூட்டம் அவர்
ஏத்தும்வேதாகமப் பாட்டம் பணிக்
தே பத்தராடுங்கொண் டாட்டம் கட

லெனவேபல விததூரிய
வினவோசைக ளொடுவோமென
ஈர்த்தடிக்குமணி யாட்டம் சேவி
யேற்ரூர்க்கேதெமன் போ ராட்டம்

5 அன்பர்கள்கூடிய பாரம் அவர்
ஆநந்தமாகத்தே வாரம் பாடும்
அற்புதங்கடலார வாரம் மிகு
அதிசோபித மணிமேடைக
ளதிலேநறு மலர்வாடைக
ளானதுவீசிடும் ஆரம் தொடுத்
தணிவகைப்பார்க்கிலொய் யாரம்

6. இன்பந்தருமணித் தீபம் வாச
மேலுந்தசாங்கநற் றூபம் சொல்ல
யிணையிலா கற்பூரச் சோபம் தனை
எதிர்நோக்கிய மதியோடிரு
வழியேகொடு மெழுகாயுள
மிளகத்தரிசித்தார் பாபம் நீங்கி
யெய்துவர்பதத்தின்சல் லாபம்

வசனம்.

இப்பெருமைகளெல்லாம் வாய்ந்த சிதம்பரமென்னுந் திவ்ய க்ஷேத்திரத்தில் ஸ்ரீமந் நடராஜமூர்த்தியை காலங்கடோறும் பூஜைபுரிந்து வருபவரான தில்லை மூவாயிரவரிலொருவராயுள்ள ஸ்ரீ உமாபதிசிவாசாரியர், என்பவர் மிகுந்த தூயகுண ஸம்பன்னர்.

த்விபதை.

கனகசபேசனைக் கருணையாய்ப்பூசனை
கருதிச்செய்திடு மொரு சாது
புனிதருமாபதி சிவமெனுமவரதி
புங்கவர் புகழ் புவி மீது

விருத்தம்.

வேதவா கமங்களோடு மிருதிகா வியபுராணம்
போதசாத் திரங்கள் கற்று புறச்சமயங்கள்நீத்து
ஏதமிற் சைவ மொன்றே யெதினுமே லாகுமென்று
நீதியா யுணர்ந்து வன்பி னெறியினி லொழுகு நீரார்.

வசனம்.

இத்தகையான உமாபதி சிவாசாரிய சுவாமிகள், ஸ்ரீமந்நடராஜமூர்த்தியை பூஜிக்கும் பலதடவைகளில் முறைநாள் தனக்கு நேர்ந்தவன்று, காலையிலெழுந்து வேதாகமமுறைப்படி ஸ்நானம் பண்ணி, பட்டாடை புனைந்து மகரகுண்டலாதிகளணிந்து கண்டிகைபூண்டு விபூதி உத்தூளனம் பண்ணிக்கொண்டு தான் மேளவாத்தியங்களும், பக்கத்தீவர்த்திகளும், விருது முதலியவைகளும், அனேக அன்பர்களும் புடைசூழ்ந்துவர ஆலத்தியற்கு தந்தப்பல்லக்கின் மீதிவர்ந்து செல்வார்.

சந்த விருத்தம்.

இராகம்-காம்போதி-தாளம்-சாபு

அந்தமொடு வொருதந்தசிவி கையிவர்ந்துவன்பர் நெருங்கவே
சந்தமுறமிரு தங்கதுந்துபி சங்கமேளமு ழங்கவே
விந்தைதருவிரு துங்கொடிகள் சாமரங்களெங்குமி லங்கவே
மந்தமிற்றீ வர்த்தியும்புடைவந்து வரிசைது ளங்கவே

வசனம்.

இவ்வித அணிகளோடு உமாபதி சிவாசாரியார் தன்பூசைமுறைநாளன்று ஆலயஞ்சென்று ஸ்ரீமந் நடராஜமூர்த்தியை பத்திவசத்தராய் பூசனைபுரியும் வைதீகத்திருவாய்ந்தவராய் வாழும்நாளில், ஓர்கா தன்பூசை செய்யுமுறைநாள்வந்து சேர்ந்தது.

விருத்தம்.

விடியுமுன்னே துயில்விடுத்து வேதமார்க்க
மெய்ந்நெறிபோற் கருமம்விரை வினில்முடிப்பான்
கடிபுனலி லாடிமனங் கசிந்து நீற்றைக்
கரமெடுத்துக் குழைத்தணிந்து காதலோடு
மடிதரும்வெண் பட்டுடுத்தி மணிகள்பூண்டு
மகிழ்மகர குண்டலங்கண் டிகையுமார்த்து
கொடிகள்விரு துகள்மேளங் குலவிர்த்திக்
கூடிவரச் சிவிகையுறுங் கோலங்கொண்டார்.

வசனம்.

இத்தகையராய் வீதியிலே உமாபதி சிவாசாரியர் ஸ்ரீமந்நடராஜ மூர்த்தியைப் பூசிப்பான் வேண்டி புறப்பட்டு வருவாராயினர்.

பதம்.

இராகம் பியாகு தாளம்-ஆதி.

வந்தனர் உமாபதி தந்தசிவிகை மீது
வாழ்ந்திடு மன்பர்பலர் சூழ்ந்திடவோர் போது (வந்)

அந்தணர் வசித்திடும் வீதியில் மன்னி
அம்பலவாணனைப் பூசிக்க வுன்னி (வந்)

பலவித வாத்தியம் பரிவுடன் ஒலிக்க
பக்கத் தீவர்த்தியிரு பரிதிபோற் சொலிக்க (வந்)

நாடியே தில்லைநட ராஜனை யின்று
நாம்பூசையு செய்முறை நாளிது வென்று (வந்)

வசனம்

இவ்வாறு உமாபதி சிவசாரியார் சிதம்பர க்ஷேத்திரத்தின் வீதியில் வரும்போது

வசனம்

ஸ்ரீமறைஞான சம்பந்தரது வரலாறு.

ஸ்ரீகயிலாசத்திலே அருட்கல்லால நிழலிலே ஸ்படிகஸ்வரூபராய் த்ரிநேத்ரராய் ருத்ராக்ஷ தாரணராய் சின்முத் ராகரராய் அமிர்தகும்ப ஹஸ்தராய் சிவஞானபோத சாஸ்திரம் வகித்தவராய் சதுர்புஜங்களோடு திருவுருக் கொண்டெழுந்தருளிய தெக்ஷிணாமூர்த்திக் கடவுளான ஸத்குருநாதனை முன்னோர்கால்நந்தியெம்பெருமான் அன்போடு அன்னவரின் சரணார விந்தங்களைப் பணிந்து சிரசாஞ்சலியாக கரமலர் குவித்துத் தாழா நிற்க எம்பெருமான் திருவருள் சுரந்துதமது திருக்கரத்தில் அமர்ந்துள்ளதும்வேதாகமஸாரமானதும் ரௌரவாகமத்தில் பாச விமோசன படலத்தில் அநுஷ்டுப் சந்தசாகவுள்ளதுமான பன்னிரண்டுஸூத்ரத்தை அடிபணிந்த நந்தி கேச்வரருக்கு உபதேசித்து இன்னருள் பாலிக்க அதனை யேற்று மகிழ்ந்து நந்திகேச்ரவர் அவ்வுபதேசங் கேட்ட துணையானே ஐயப்பாடகன்று மெய்ப்பொருடெரிந்து அதனைத் தன் சிஷ்யர்கள் பலருள் பக்குவம் வாய்ந்த ஸனத்குமார முனிகட்கு உபதேசித்தருள அன்னவர் தனது சிஷ்யரான சத்திஞான தரிசனிகளுக்கு உபதேசித்தருள அன்னவர் தனது சிஷ்யரான பரஞ்சோதி முனிவருக்கு உபதேசித்த

ருள அப்பரஞ்சோதிமாமுனிவர் தென்மலயத்தமருங் குறுமுனி வரைக் காணு மாறு திருக்கயிலையை நீங்கி காசி முதலிய க்ஷேத் திரங்களை தரிசித்துக் கொண்டு ஆகாய கமன மார்க்கமாகச் செ ல்லுங்கால் திருவெண்ணெய் நல்லூரை அணுகலும் இவருக்கு கமனசித்தித் தடைபட்டது. தடை படலும், ஈண்டு வோர் அதிசய மிருப்ப தென்னை யெனக் கீழிறங்கி நோக்குவா ராயி ஞர். நோக்குங்கால் அங்கேமணலிற்றிருக் கோயிலமைத்துச் சிவ லிங்கந் தாபித்து பூசை செய்து திருவிளை யாட்டயரும் ஐந்து வயதுள்ள சுவேத வனப் பெருமாளைக்கண்டு வியந்து தமது ஞான திருட்டியால் திருவருளை நோக்கிப் பார்க்கு மளவில் எம் பெருமான் திருவுள்ளக் குறிப்பை யுணர்ந்து அம் மெய்யன் புடைய சாந்த சித்தருக்குத் திருவரு ளேக்கம் பாலித்து மெய் கண்ட தேவர், எனத் தீக்ஷாபிதான மளித்து தமது ஸத் குரு மரபின் வழித்தாக வரும் சிவஞான போதத்தை, உபதேசஞ் செய்தருளி இதனை பத்த திசையிலுள்ளார்யாரும் உய்யும் வண் ணம், திராவிட பாடையில், மொழி பெயர்த்து வார்த்திக விமன் னும் பொழிப்புரையும் செய்வாயாக, என்று திருவாய் மலர்ந்த ருளி, அப்பரஞ் சோதியார் செல்வா ராயினர். பின்னர் இவ்வரு ளுபதேசத்தையுற்ற துணையானே ஞானமார்க்க வசத்தராகி பரி பக்குவமுற்று சில நாட்கழித்ததும் தனதாசார்யரான அப்பரஞ் சோதி முனிவர் வாக்கின் படியே அச் சிவஞான போதத்தை மொழி பெயர்த்து ,, வார்த்திகப் பொழிப்புரையுஞ் செய்தருளி பின்னர் அம் மெய்கண்ட தேவர், தன்னுடைய சிஷ்யர், நாற் பத்தொன்ப தின்மருக்கும் அதனை உபதேசித் தருள அவ்வு பதேச வருள் பெற்ற சிஷ்யர்க ளிற்றலைவ ரானவரும் திருத்து றையூ ரென்னும் தலத்திற் றிருவவ தாரஞ் செய்த வருமான சக லாகம பண்டித ரென்னும் அருணந்தி சிவாசாரியார் அந்த சிவ ஞான போத சாஸ்திரத்தைத் திருக் கடந்தை ,யென்னும் திரும ருதூரில் சாமவேதியர் மரபிலே பராசரரிஷி கோத்தி ரத்தில் திரு வவதாரம் செய்த ஸ்ரீ மறைஞான சம்பந்தருக்கு உபதேசஞ் செ ய்தருளவே அதனைப் பெற்று மனமகிழ்ந்து பரிபக்குவமுற்றுவா ழுநாளில் மறைஞான சம்பந்தரான இவர்க்கு க்ஷேத் ராடனம் பண்ண வேண்டுமென்னுங் காதலுடையாராய் அனேகக்ஷேத்ரங் களை நண்ணி சிவ தரிசனம்பண்ணி பின்னர் ஸ்ரீவிராட் புருஷனு டைய ஹ்ருதய ஸ்தான மாகிய சிதம்பர க்ஷேத்திரத்தையடைந்

து ஸ்ரீமந்நடராஜ மூர்த்தியை தரிசிக்க வுன்னி சிதம்பரம் வந்து சுவாமிதரிசனம் பண்ணிபிறகு அந்தணர் வீதியில்லோர் மாளிகையின் திண்ணையி லமர்ந்து சிவத்யான பரரா யிருக்குங்கால் ஸ்ரீஉமாபதி சிவாசாரியார் திருக்கோயிலுக்குச் செல்லும் திருக்கோலத்தைக் கண்டு வியப்புற்று பரிகசிக்கிறார்.

த்விபதை.

சீர்த்தியாகவேவு மாபதிசென்றிடுஞ்
சிறப்பினைப்போலிது காறும்
பார்த்ததில்லையெனவேமறைஞானசம்
பந்தர் பரிகசித்துக் கூறும்.

வெண்பா.

பட்டப் பகலிலே பக்கத்தீ வர்த்தியொடு
பட்டகட்டை மீதோர் பகற்குருடு—சட்டமதாய்
வாச்சியங்க ளேங்க வரிசையுட னேபோத
லாச்சரிய் மீது அ! ஆ!!

தனுக்ஷரிச்சந்தம்.

பட்டபகற்காலமென்றெண் ணுது நல்ல
பகுத்தறிவுஇல் லாது வெறும்
பட்டகட்டையின் மீது ஒரு
பகற்குருடேகுதே

வசனம்.

என்று மறைஞானசம்பந்தர் பல்லக்கிற்போகும் உமாபதியாரைப் பார்த்து பரிகாசஞ் செய்யவே இதனைக்கேட்டதும். உட்டுறவு பூண்டவரும் ஞானோபதேசம் பெறுதற் குரிய பக்குவம் வாய்ந்தவரு மாகிய உமாதிசுவாமிகள் மிகவும் வெட்கி அப்பொழுதே பல்லக்கினின்று மிறங்கி யோடி ஸாஷ்டாங்கமாகப் பணிந்து கரங்களைக் குவித்து மறைஞான சம்பந்த சுவாமிகளைப் பார்த்துக் கூறுகிறார்.

இராகம்-மத்யமாவதி-தாளம்-ஆதி.

பல்லவி.

பாதாரவிந்தம்பணிந்தேன் பரமானந்தகுருவே (பா)

அநுபல்லவி.

வேதாகமமுணர்ந்த போதாபுவிதுறந்த
வித்தகா வருளுவாய் கதிதானே
பத்தியாகவேவுமாபதி நானே .. (பா)

சரணம்.

பட்டகட்டைதனிலேறிபகற்குருடேகுதுபாரெனவேபரி காசம்
சட்டதிட்டமொடுநீர்சொலவேபுண்பட்டவிடமதனிலேநா ராசம்
சுட்டுவிட்டதெனவேயிடர்நானேபட்டுவுமதினருளாலுப தேசம்
மட்டிலாதுகிட்டிடுமெனவெண்ணியெந்தன்
மாசுதீரத்யாக ராஜன் றாழு முந்தன் (பா)

வசனம்

ஸ்ரீ உமாபதி சிவாசாரியார், மறைஞானசம்பந்தரை இவ்வாறு வணங்கித்தாழா நின்று, கரமலர்குவித்து தேகம் புளகித்து அன்பிணையடுத்து பின்னரும் கூறுகிறார்.

விருத்தம்.

பட்டகட்டை தனிற்பகலிற் பகற்குருடே குதுவெனவே
பகர்ந்தீர் நீரக்
கட்டுரையின் பொருளெடுத்துப் புகன்றெனக்கு மாயையெனுங்
கலக்க நீங்கி
விட்டிடயான் கொளும்படிநல் லுபதேசஞ் செய்தருளி
மேலா யாக்கி
நட்டமிடுஞ் சரணடைய வழிகாட்டு வீரெனது
நாத னீரே.

வசனம்.

என்று உமாபதியார் தாழ்ந்துரைத்து, அன்று முதல் தானேறும் பல்லக்கு முதலிய கொடிவிருதுகள் யாவும் நீத்து தன்னைச் சீர்பண்ணிக் கொள்ளாராய் அந்த மறைஞான சம்பந்தநாயனாருக்கே, அனுதினம் பணிவிடைசெய்து, அவரது இன்னருளென்று பாவிக்குமென வெதிர்பார்த்து வருநாளில் மறைஞான சம்பந்தர், உமாபதியாரது பரிபக்குவம் நோக்குவான் பொருட்டுஓர் நாள்காலையில் உமாபதியாருக்கு, மறைஞான சம்பந்த சுவாமிகள் சிவோத் கிருஷ்ட விஷயங்கள் கூறுகிறார்.

சிந்து.

1. பங்கயாசனத்தி லங்குவேதனொடு நாரணன் பணி
யாரணன் பவனி
வாரணன் மிகும்
பத்திசெய்பவர்க்கு முத்திதந்தளுங் காரணன் பரி
பூரணன்.
அங்கந்தன்னிலிள மங்கைதங்குமொரு பாதியான் நல்ல
நீதியான் வேத
வேதியான் ஞான
வாகமங்கள்சொன்ன வேகனெங்குமன்னுமாதியான் பரஞ்
சோதியான்

2. வேதநான்குமுனை ராதுநின்றபெருங் கீர்த்தியான் சாந்த
மூர்த்தியான் மிக
நேர்த்தியான் காய்ந்த
விறகிற்றீயதென்ன மறைந்துபூதமெங்கும் பூர்த்தியான் அருட்
கீர்த்தியான்
சீதமானதென்றன் மீதுலாமதனை யெரித்தவன் யானை
யுரித்தவன் மதி
தரித்தவன் கரஞ்
சேர்த்துகயிலையைப் பேர்த்தராவணனை நெரித்தவன் புரஞ்
சிரித்தவன்

3. நாலுபேர்கள்புகழ் வாலுரைத்திடுநற் கீதத்தான் பஞ்ச
பூதத்தான் ஞான
போதத்தான் அருள்
நண்ணுமிச்சைகொண்ட புண்ணியர்க்கருளும் பாதத்தான் உரு
நாதத்தான்
சீலமென்று வேடனூலே மென்றயெச்சில் தின்றவன் கூற்றை
வென்றவன் தில்லை
மன்றவன் பாரிற்
றேடுமாலயற்கு நீடுசோதியென நின்றவன் வெள்ளிக்
குன்றவன்

வசனம்.

ஸ்ரீமறைஞான சம்பந்தர் இவ்வாறு சிவோத்கிருஷ்டம் சொல்லவே உமாபதியார் தன்னைமறந்து, அன்பிற் சிறந்து கண்ணீர்வடி

ந்து சிந்தனை நொந்து உள்ளங் கனிந்து சிவனை நினைந்து இடையருவானந்தம் பருகினவராய் அவைகளைச் செவியினிற் கொண்டு பரவ சத்தராய் கரங்கு வித்து நிற்கவே ஸ்ரீமறைஞான சம்பந்தர் திடீரென வெழுந்து வோடினர் ஓடுவதைக் கண்ட உமாபதியார் திகைத்தவ ராய் யாதொன்று முணராது அவர்பின்னே இவரும் ஓடினர்.

துக்கடா

மறைஞானசம்பந்தரெழுந்தோட
மனந்திகைத்தேவுமாபதிபின்னோட

விருத்தம்.

ஆவினைத் தொடருங் கன்றை யனையராய்ப் பின்னே வோடி
தாவில்சம் பந்தரோடி தகுநெய்தற் றெருழிலைச்செய்து
மேவுகாருகரை நண்ணி மெல்லிய நூற்குத் தோயும்
பாவின்கூ ழதைக் கரத்தாற் பரிவொடு வாங்கி யுண்டார்.

வசனம்

ஆவுங்கன்று மெனத் தொடர்ந்து இருவரும் ஓடவே மறைஞான சம்பந்தர் நெய்தற் றொழிலைச் செய்யுங் காருகர்கள் தங்கள் தெருவினிற் கூழை நூற்குத் தோய்த்துக் கொண்டிருப்பதைக் கண்டு, அன்னவரிட மணுகி, தனக்குப் பசியென நடித்து இருகரங்களை யேந்தி யான்குடிக்க இக்கூழை யிடுவீ ரெனவே, காருகர்கள் இவரை யாரோ ஞானியா ரென்று முண்மைநோக்கி பசியைத் தணிப்பதே பான்மையாகு மென்று ஒரு கலயத்தில் அக்கூழை நிறைய முகந்து அவர் ஏந்தின கரத்தில் ஓருவ ரூற்றவே, அதனை வயிராறக் குடித்தனர். அவ்வண்ணம் குடிக்குங்கால், பின்னேநாடி வோடிவந்த உமாபதியார்வந்து பார்த்திடவே கூழ்குடிக்கும் போது அவர் வாயிலிருந்து, எச்சிலோடு கலந்த கூழ் அவர் கரத்தின் வழித்தாக வழிந்து முழங்கையி லொழுகிற்று.

சந்தாந சாரியார் புராணச் செய்யுள்

உண்ணுறு காலையந்தக் கரத்தினி லொழுகுங்கூழை
பண்ணலா ருமாபதிப்பே ரந்தண ரேந்தியுண்ணத்
தண்ணருள் சுரந்தேயாங்குத் தனிச்சிவஞானபோதம்
புண்ணியர் திருவாக்காலே பொலிவுறப் போதித்தாரே

வசனம்.

தனது கரத்தி லிருந்து ஒழுகின கூழை கரமேந்தி யுண்ட உமாபதி யாரை மறைஞான சம்பந்தர்நோக்கி, பக்குவம்வாய்ந்து விட்டதென்றுணர்ந்து அக்கணமே அன்னவர்க்குத் திருவருள் செய்து தனது குருமரபின் வழியா யுபதேச முறையில் வரும்,, சிவஞான போத,,த்தை உமாபதியாருக்கு உபதேசித்துஇன்னும் அரிய ஆகமப் பொருள்களை யெல்லாங்கூறவே, அதனை யெல் லாம் பெற்று அமிழ்துண்ட வானவரெனக் களித்துத்தன் குரு வின் விடைபெற்று தனதில்லற மடைந்தார்.

ஸ்வாய் அல்லது த்விபதை.

சாந்தமறைஞான் சம்பந்தராலேசித்
தாந்த சிவஞான போதம்
தேர்ந்தருள் யேற்றவர் சேவடியைபணிந்
தேத்தினர் தீர்ந்துதன் னேதம்

சந்தான சாரியார் புராணச் செய்யுள்

இம்முறை வாழ்வார் தம்மை யெழிலரு ணித்தர் தாளை
மெய்ம்முறை பூசைசெய்யும் வேதிய ரறியாராகித்
தம்முறை பிறழ்ந்தா ரிந்தத் தனியுமா பதியா ரென்ன
வம்மறை யவர்கள் கூடி யுவர்தனை நீக்கு வாரே.

வசனம்.

தில்லை மூவாயிரர்களிற் சிலர் உமாபதியாரது உண்மையறி யாது காருகர்வீதியிலே ஓர்மறையவனுண்ட யெச்சிக் கூழை கை யேந்தி யுண்டா ரென்பதைக் கேள்வியுற்று சிதம்பரா்லயத்துள் ளே நண்ணி மூவாயிரர் ஒருங்கே வசித்திடு மிடத்திற்குச்சென்று கூறுகிறார்.

த்விபதை

ஈசனையனுதினம் பூசனைபுரிபவ
ரேயெமது மொழியைக் கேளும்
மாசிலாதவருமாபதி கோயிலுள்
வரலாகாதுயெங் நாளும்

வசனம்

என்று தில்லைமூவாயிரரிற் சிலர் வந்து கூறுவதைக்கேட்டுமறை வேதியர்கள் கூறுகிறுர்கள்.

விருத்தம்.

நன்றுநன் றென்னசொன்னீர் நாவினு லினிசொல்லாதீர்
மன்றுளே யாடுமீசன் மலரடிக் கன்புமிக்கார்
துன்றுநங் குலத்தின்மேலாய்த் தோன்றிய நாதனன்றோ
என்றுபின் னவர்செய்திட்ட தென்னநீரியும்பு மென்ருர்.

வசனம்.

இதனைக்கேட்ட உமாபதியாரைப் பழியுரைத்த மறையவர்கள் தாங்கள் கேள்வியுற்ற வண்ணங் கூறுகிறுர்கள்

இராகம்-நாட்டைக்குறிஞ்சி-தாளம்-ஆதி.

பல்லவி.

உமாபதி நமது சபாபதி பூசைக்கு
உரியவரல்லவையா இனிமேல் (உமா)

அநுபல்லவி.

சமாதி யோகங்களைச் சாதித்தவராஞலும்
தர்க்கவேதாகமங்கள் மிக்கவுணர்ந்திட்டாலும் (உமா)

சரணங்கள்.

ஆரோ வேதியர் அடைந்து மிகுந்தபசி
யாலே காருகர்வீதி சென்று தன்
அருங்கரம் நீட்டியே அவரிடுங்கூழினை
யருந்திட அவர்கையி னின்று கூழ்
பாரிலொழுகவுமா பதிகர மேந்தி
பருகினராமதைப் பகர்ந்திட வாந்தி
நேருது அவருக்கு நெறிமுறைச் சாந்தி
நீங்கள்செயினும் பச்சைநிறமோபச் சோந்தி (உமா)

வசனம்.

இதனைக்கேட்ட தில்லை மூவாயிரவர்கள் மனந்திகைத்து கைபுடைத்து வாயிலடித்துக்கொண்டு ஆச்சரியமுற்று எல்லோரும், புலம்புகிறுர்கள்.

இராகம்-கேதாரம்-தாளம்-மிசுரம்.

பல்லவி.

என்ன! என்ன! இது யென்ன! புதுமைமிக
ஏன்னமாகுமிதே ஈதாச்சர்யம் (என்)

அநுபல்லவி.

சொன்னசொல் வொவ்வொன்றுந் தொடுபில்லினம்பிணை
யன்னவேபாய்ந்தது அந்தோ அந்தோ (என்)

சரணங்கள்.

1. படித்த படிப்பெல்லாம் பாழாக்கியேவுமா
பதியுமிப்படி செய்ய லாமா
அடுத்தினி கோயிலிலரனைப்பூசித்திட
அவர்முறையிலும் வரப் போமா (என்)

2. நங்குலத்தினிலேமே லானவராயவர்
நண்ணியிருந்தது போச்சே
எங்கினியிவரைப்போ லெவருமில்லைகேலி
யெவரும் பண்ணிநகைக்க லாச்சே. (என்)

3. கோதிலாவேதங்கள் கூறும்வாயாலினக்
கொடுத்த கூழைக்குடிந் தாரே
சாதியிலில்லாவழக்கத்தைச் செய்வது
தரணியிலொப்பங்கொள் ளாரே (என்)

விருத்தம்.

இந்தவிதந் தில்லைமூவா யிரர்கள்கூடி
யெழிலாருமுமாபதியை யெண்ணிநொந்து
சிந்தைமிக விருந்தினராய்த் திகைத்துப்பின்னர்
சிறந்திடு நம்மறைக்குலத்திற் றிகழ்ந்துமன்பாய்
யந்தமொடு வேதமுறை யாவுங்கற்று
மனியாயம் புரிந்தவவ ரரன்பூசைக்கு
எந்தவிதமும் வருத லேலாதென்று
யெள்ளினர் குலத்தைவிட்டு தள்ளினரே.

வசனம்.

இவ்வாறு தில்லை மூவாயிரர்கள் கூடிப்பேசி உமாபதியார்,
ந்குலத்திற்கு ஆகாரென்றும், ஆலயத்திற்கு பூசனைபுரிய வருதல்

கூடாதென்றும், நிச்சயித்து, இனி, அன்னவர், வரின், ஆலயத்துள்விடாது தடுப்பதே முறையென்று திண்ணமாய் நிச்சயித்து இருக்குங் காலத்தில், ஸ்ரீ உமாபதியாரான, மெய்யன்பர் ஸ்ரீமந் நடராஜனைப் பூசிக்கும், முறை நாள்வரவே, உமாபதியார் வருகிருர்.

த்விபதை.

மாசிலாதவரு மாபதியம்பல
வானரின்பூசனை செய்ய
ஆசையாய்மூ வாயிரர் வரலா
காதென்றனாவர் ஐய

இராகம்-அம்ஸத்வநி-தாளம்-ஆதி.

பல்லவி.

நில்லும் போகாதீ ரையா வேத
நெறியொடு யீசன்பூசை
முறைபுரிய வந்தீரோ. (நில்)

அநுபல்லவி.

எல்லாமுணர்ந்திடு வல்லவராய்நீ
ரதையுந்தெரிந்தவுமா பதியென்ருலாவதென்ன (நில்)

சரணங்கள்.

1. பசியடைந்தபார்ப் பான்மன மேங்கி
பாழுங்காருகரிடுங் கூழினை வாங்கி
இசைமனமோடவர் பருகும்போதுகை யில்
இருந்தொழுகிடுமதை யேந்தியுண்டீர்வெளி யில் (நில்)

2. கேடிலாதகுலங் கெடுத்திட் நீரே
கெட்டதன்றியெங்களைக் கெடுக்கப்பார்த் தீரே
ஈடிலாதவுமக் கேனிந்த யோசனை
இழிகுலத்தாரொடு செயற்கையின் வாசனை (நில்)

3. படித்ததோகணக்கிலே பார்க்கில பாரம்
பரம 'கேவல' மானீர் பலதுரா சாரம்
அடுத்தினிவாலய மதிற்புகுந்தே பூசை
யதைப்புரிந்திட லாகாது ஏ ஞசை (நில்)

துக்கடா.

மூவாயிரர்களிலே உம்மைப்போலே
முற்றுங்கற்றவரில்லை முற்றுங்கெட்டாரில்லை தில்லை (மூவ)

தேவாதி தேவன் திருத்தில்லைநாதனைத்
தீண்டித்தினந்தோறுஞ் சேவித்துப்பூசைசெயும் (மூவ)

வசனம்.

சினவயத்தரா யிவ்வாறு மூவாயிரர் சீறுவதைக்கண்டு உமாபதி இனி நாம் இவண் வருவதும், ஈசனைப்பூசிக்கும் விஷயத்தை யுன்னுவது மேலாதெனக் கருதி அகன்று தன் இல்லறத்தையுந் துறந்து வாழ்வில் வெறுப்புடையராய், நம்முடைய முறைநாளில்மானத பூசனையியற்றுவோமெனக் கருதிதில்லையின் கீழ்த்திசையிலிருக்குங் கொற்றங்குடி அணுகி அங்குதிருமடமொன்றமைத்து தம்முடைய அடியவர்கள்சூழ வாழ்வாராயினர். வாழுமன்னவர், ஸ்ரீமந்நடராஜனைத் தொட்டுப் பூஜிக்கும் பேறு இல்லாமல் காலம்வீணாகப்போகிறதே யெனவருந்தி அம்பலவாணனைத் துதிக்கினார்.

இராகம் புன்னாகவராளி-தாளம்-ரூபகம்.

கண்ணிகள்

1. தில்லைமன்றில் நடமாடுஞ் சிவனே யருள்பரனே
எல்லையில்லாப் பெருமானே அரனே சங்கரனே

2. அம்பலவணவமலாவருளே மறைப் பொருளே
உம்பர்தொழும் பதமுடையாய் சீலா மறைமுலா

3. அங்கியிற் சூடாகயெங்கு முறைவா யென் னறவா
மங்கையொரு பாகம்வைத்த நாதா ஞான போதா

4. நான்பூசைபுரியாம லானேன் தனியானேன்
வான்மாறினு மனமாறிடேன் இனியே யென் கனியே.

5 தேவாவுனை யென்றூ பூசை செய்வேன் நானுய்வேன்
காவாயெனை கதிவேறில்லை பதியே உமா பதியே.

வசனம்

இவ்வாறு மனம்வருந்தி ஸ்ரீமந்நடராஜனை மனதிற் சிந்தித்த வண்ணமாக வாழ்ந்து வருவா ராயினர்.

விருத்தம்.

நல்லவுமா பதியவரும் நாதன் றன்னை
நண்ணு யன முடையவராய் வாழுநாளிற்
றெல்லைதவிர் தாண்டவனைத் தொட்டுவன்பிற்
றாயவர்பூ சனைசெய்யும் நாளுந்துன்ன
தில்லைமறை யவர்களிலோர் சிறப்புவாய்ந்தோர்
சென்றரனைப் பூசிப்பான் றிறத்திைேடு
கல்லையறு கனகமன்றின் கதவம்நீக்கி
கனப்பட்டார் பூசனைக்கெத் தனப்பட்டார்.

வசனம்.

தில்லை மூவாயிரரி லொருவர் உமாபதியார் பூசை செய்யும் நாளிற்சென்று பூசனைபுரிய ஆரம்பிக்குங் காலத்தில் அம்பலவாணர், "உமாபதியின்" பெருமையை உலகறியக்காட்டுவான், தங்கப்பேடகத்தோடு கொற்றங்குடியிலாரும்உமாபதியாருடைய திருமடத்திற்கு சென்று தங்குவாராயினர், இதனை யறியாது பூசைபுரியப்போந்த மறையவர், "அழகிய சிற்றம்பலவ" ரது தங்கப்பேடகத்தைக் காணராகி மனம்நொந்து புலம்ப, மற்றைய மறையவரு மிஃதையறிந்துஒவ்வொருவரும் துன்பக்கடலிலாழ்ந்து வருந்துவா ராயினர்.

சந்தானசாரியர் புராணச்செய்யுள்.

அழகியசிற் றம்பலவன் பேடகத்தை
யாங்குற்று நோக்கினர் காணரஞ்சி
மழவிடையான் றிருமுன்னர்ப் பணிந்துமாழ்கி
மாயமிதென் மன்றின்வளர் மணியேமாது
மழகுறுதார மரையயனு மாதியந்த
மறிவறிய வழற்பிழம்பா மண்ணு லண்ணல்
பழகியவெம் மபராதம் பற்ருயெங்ஙன்
பழவடியார்க் கருள்புரிவான் பரிந்துசென்ருய்.

தாட்டுணையே புணையாகப் பற்றிநின்று
தனிமாயைக் கடனீந்துந் தக்கோர்பாலோ
கோட்டமிலா மனத்தோடுங் குளத்திலுன்னைக்
குறித்துமதி யமிழ்துண்ணுங் குணத்தர்பாலோ

வீட்டமரு மலராதி கொண்டன்பாக
வெழிலுறுபூ சனைபுரியு மியல்பார் பாலோ
நாட்டமொரு மூன்றுடையா யெங்கணுறறுய்
நட்டமிடுவா யென்றழுது நைவாரானார்.

வேறு-விருத்தம்.

அழகியசிற்றம்பலவா வண்ணலே யெமதன்பே
பழகியவெங்களை விடுத்துப் பறந்தனையே நிதம்பரவித்
தொழுவதற்கு வுமைக்காணு துள்ளமதிற் றுயரடைந்தோம்
பிழைகளெதுஞ் செய்தோமோ பேதையர்களென்செய்வோம்

வசனம்.

என்று இவ்வாறு அழுதாற்றிப் பின்னும் நீர்யார் வசஞ்சென்றிருக்கிறீரென மனம்வருந்தி ஒவ்வொருவரும் கண்ணீரலம்புவராய் புலம்புவார்.

இராக மாலிகைக் கீர்த்தனம்

தாளம்-ஆதி.

பல்லவி.

எவர் "வசந்தா" னீர் சென்றீரோ
ஏதுமறியோம் (எவ)

அநுபல்லவி:

எவர்வசந்தானீர்சென்று இருக்கின்றீரோவின்று
இன்னுமறியோமொன்று மிதுவோவுமக்கு நன்று(எவ)

சரணங்கள்.

1. உம்க்"கேதார"மாகிய உத்தமிசிவ காமி
உளமதிலுமையெண்ணி வுணங்கலாமோ சாமி
எமக்குமையன்றிகதி யேதுவிப்பெரும் பூமி
இனியிருந்திடுமோகொண் டேகுமேவனை நேமி(எவ)

2. "ஆரபி"மானித்துமை யடிபணிந்தழைத் தாரோ
அபிமானித்தவர்க்காக வையனேநீர்போ னீரோ
ஊரையுமூரிலுள்ள யாரைமொழித் தீரோ
உமதுகுழந்தைகண்மே லுள்ளஆசைவிட்டீரோ ()

3. இந்த "நாட்டை" விட வெந்த நாடுமேம் பாடு
என்றெண்ணி நீர்நடந்தீ ரிதனுக்காகுமோ யீடு
எந்தையான வும்மை யிழந்துமுயி ரோடு
இனியிருப்போமோ வந்தோ என்செய்வோந்துன்போடு (எவர்)

4. பறந் "தோடிப்" போகவே பார்த்திருந்தீரோ காலம்
பாதவித்துநாங்கள் படுமிந்தவலங் கோலம்
மறைந்திருந்துபார்ப்பீரோ மாயமேயிந்த ஜாலம்
வகையொன்றுந்தெரிகிலோ மாதேவனே வோலம்

5"சீராக" வேயெங்கட்குச் செப்பிப்போகலா காதா
சிற்றம்பலவாயிந்தச் சிறுவர்களோடு வாதா
பாரோர்புகழுமெங்கள் பரமாதாண்டவப் பாதா
பத்தர்களெண்ணமதைச் சித்திசெய்திடும் நாதா

6 குஞ்சிதக்"கானடா" தாடினகோ மானே
கோபமெங்கண்மீதுண்டோ கூறுமறசென்ற தேனே
வஞ்சகத்தையிந்த மறையவர்மீது தானே
வைத்ததுநீரேனோ மன்றுளாடுமென் கோனே()

7. "சுருட்டி"சாமரமேளந் தூரியங்கண்முன் னேக
தோரணவீதிதனிற் றுலங்கிசுந்தர மாக
திரட்டும்பத்தர்களோடு சிறப்பாய்போவது போக
தேவாதிதேவஜக தீசாநீர்தனி யாக

8. உம்மையே"சகாநா"ங்கள் உறுதியாகவே யெண்ணி
உமதுதிருவடியையுன்னி மனனம் பண்ணி
இம்மையில்யாங்களுற்ற விடர்தினுலே குண்ணி
இன்பம்பெற்றிலோமந்தோ ஏழைதுன்பத்தில்நண்ணி()

9. "மோகனஞ்"செய்தெம்மங்கை மோகிக்கநீருங் கண்டு
மோகித்துவவளது மோகப்பித்தினைக்கொண்டு
த்யாகராஜன்பணியுந் தேவாயெங்களை விண்டு
சென்றீரேயிதனைப்போல் ஜெகத்திலெங்கினி வுண்டு

வசனம்

இம்முறை யாகவே தில்லை மூவாயிரர்கள்கூடி மனம் வருந்தி அழுதாற்றுங்கால்" உமாபதியாரின்" பெருமையை அவர்க்குக் காட்டுவான் ஈசன் விண்ணிடை யுற்று தில்லை மூவாயிரரின்செவி படக் கூறுகிறார்.

விருத்தம்.

தில்லையில்வாழுமூவா யிரவரேமனந்தியங்கி
அல்லலுற்றெம்மையுன்னி யுழுதிடவேண்டாங்கேண்மோ
எல்லியிலுமாபதிப்பே ரெம்மடியவர்தம்பாலே
புல்வினைமவரேபூசை புரிந்திடுதினமின்றென்றே.

த்விபதை.

மறையவரேமனம் வருந்தாதிருமாபதி
மாட்டமர்ந்தோங்களிப் பாக
முறையெரடுசென்றவர் முன்பணிந்தேநீங்கள்
மொழிந்திடுவீர்துய ரேக

சந்தானுசாரியார் புராணச்செய்யுள்.

விளம்பு மாகாயவாணி வேதியர்யாருங் கேட்டுத்
தளர்ந்த நெஞ்சுடையராகித் தாயிடைப் புகுமான்கன்றிற்
கிளர்ந்தெழுமன்பினேடுங் கேடிலாஞானச்செல்வ
வளந்தருமுமாபதிப்பேர் மறையவர் பால்வந்துற்ருர்.

விருத்தம்.

ஐயனே வடியேங்கள் கோவேபோற்றி
அம்பல னடிமலரி னன்பா போற்றி
மெய்யனே வேதமுணர் விமலாபோற்றி
வித்தகா வெங்களது மேலாய் போற்றி
துய்யபெரும் பெருமையினி துணர்ந்தோம் போற்றி
துன்னுமெங்கள், துன்பகற்றுஞ் சுகுணு போற்றி
செய்யும்வகை யதையறியோம் தேவே போற்றி;
திருவருளைச் செய்திடுவீர் போற்றி போற்றி.

இராகம்-யமுனகல்யாணி-தாளம்-ஆதி.

பல்லவி.

பிழைபொருத்தருளுமையா குருவே
வழி யெதுந் தெரிகி லோம்
பழி யினி புரிகி லோம். (பிழை)

சரணங்கள்

1. வேதாகமங்களை யுணர்ந்ததினுலே
மெய்யை யின்னுங் காணும் குருவே
நாதனேவும்மைப்போலு ம போதமுறையின்னமு
நண்ணி மனதிற் பூணும் குருவே ;(பி)

2. ஜன்மித்தகுலவுயர் வாலேசங்கரன்பத்தி
தானடைந்திடப் படுமோ குருவே
கன்மத்தினாலன்றி ஜன்மத்தினாலென்ன
கருணையும் பலித் திடுமோ குருவே (பி)

3. கங்கையிலுளைந்திடுந் தவளையதின்புண்ணியங்
கண்ணிய மறிந் திடுமோ குருவே
அங்கமாயனுதின மன்பின் றிபூஜித்ததா
லருளரன்பு ரிந்திடுமோ குருவே (பி)

4. படித்தும்பயனுணராப் பாவிகளானோம்
பத்திநெறியை யறியோம் குருவே
நடித்தபாவனையன்றி நாதனின்னருள்தை
நாங்களின்னுங் குறியோம் குருவே (பி)

5. புங்கவரேவந்து பூசனையிற்றைக்கே
புரிந்திடுவீ ரையா குருவே
துங்கமதியிலாத பேதையெங்களின்றுன்பத்
தொடர்தனையகற்று மெய்யா குருவே (பி)

6. காருகரிட்டகூழை கருதிக்குடித்தீரெனக்
கசந்துமையே நீக்கினோம் குருவே
பாரகந்தனில்நீர் பரமஞானியென்பதை
பகுத்தறிவின்றி நோக்கினோம் குருவே (பி)

7. குற்றங்கள்பலநாங்கள் கூறியிருப்பினுமே
குணமாகக் கொள்ளுவீரே குருவே
சற்றுநல்லுணர்விலாத் தாழ்ந்தபித்தர்கள்மொழிந்
ததுவெனத் தள்ளுவீரே குருவே (பி)

வசனம்.

தில்லை மூவாயிரர்களிவ்வண்ணம் இரங்கி நின்று அடிபணிந்து தாழ்ந்திடவே, கண்டஉமாபதியார் தண்ணருள்சுரந்து, ஏதுமறியா வேதியர்களுக்கு இன்னருள் செய்வானிரங்கி அவர் வேண்டுகோளின்படி, தம்மிடம் வந்தமர்ந்த அழகிய சிற்றம்பலவரைப் பேடகத்தோடு தனது திருக்கரத்திலேந்தி அன்புடையாராய் அடிபணிந்து முறையிட்ட வேதியரை யழைத்துக் கொ

ண்டு, கொற்றங்குடிநீங்கி சிதம்பராலயஞ் சென்று, கனகமன்றில் பேடகத்தை யெழுந்தருளச்செய்து வேதாகம முறைப்படிபூசை பண்ணுகிருர்.

இராகம்-மத்யமாவதி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

பூசைபண்ணிஞர் (ஐயர்) தில்லைப்
பொன்னம்பல வாணனைத் தொட்டுப் (பூசை)

அநுபல்லவி.

மாசிலாத்திரு மஞ்சன மாட்டி
மகிழ்ந்து தூப தீபங் காட்டி
நேசமாக நிவேதன மூட்டி
நீதனை வேதா கமமதி
லோதிய படியேவு மாபதி (பூசை)

சரணங்கள்.

வேதியர்கள்சாம வேதமதைநல்ல
கீதநாதமொடு பாட பல
சாதுக்கள் நற்றுதி யோதிகண்களிமை
யாதுவீசனையே நாட அன்பர்
காதலாலாநந்த போகமுற்றேதில்லை
நாதாவென்றேபாடி யாட மணி
நாதமும்வாத்திய வோதைபுங்கூடியே
வோதமெனநண்ணி மூட தில்லை
நாயகனே பரனே சிவனே யென்று
நான்மறைத்தில்லை மூவாயிரர்க ணின்று
வாயார வாழ்த்திடவேமன தோடு
மன்னுமுமபாபதி யாரு மன் போடு. (பூசை)

சந்தான சாரியார் புராணச்செய்யுள்.

இன்னணந் தில்லைவாழு மந்தணர் வேண்ட வேகிப்
பொன்னணி மன்றவாணர் பூம்பதப் பூசை யாற்றி
தன்னிகரந்தனுளர் தனிமட மேவிப் பின்னர்
மன்னுறு சீவன்முத்தி வரத்தராய் வைகுநாளில்

வசனம்:

கொற்றங் குடியில் ஸ்ரீஉமாபதியார் பூசனை புரிந்த பின்னர் வந்து தங்கி வாழுநாளில் தன்னுடைய மாணாக் கர்களில் முதன் மாணாக்கரான "அருணமச்சிவாயர்" என்பவர் பரிபக்குவம், வாய்ந்திருப்பதை உமாபதியார் அறிந்து, ஓர் நாள் அவரை யருகிலழைத்து ஞான திருட்டியால் நோக்கி தண்ணருள் சுரந்து அன்னவ ருய்யும் வண்ணம்" பதி பசு பாச" விலக்கணம் போதித்து பின்னர்" முத்தி பஞ்சாக்கத்தை" யுபதேசித்திடவே*அருணமச்சிவாயர், அவ்வுப தேசம் பெற்ற துணையானே மனமகிழ்ந்து அன்னவர் சரண கமலம் பணிந்து சில நாள் அங்ஙனமே வசித்து பின்னர் தனது குரு உமாபதியா ரிடம் விடைபெற்று மீண்டு அநேக க்ஷேத்ராடனம் பண்ணி வருங்கால், பொன்னியின் பாங்க ருள்ளதும் தனது, திருவவதாரஸ் தலமானதுமான "மூவலூர்" என்னும் திவ்விய க்ஷேத்ரம் வந்து சில நாட்டங்சி பின்னர் திருமயிலாடு துறை யென்னு" மாயூர" முதலிய க்ஷேத்ரங்களைச் சென்று, சிவதரிசனம் பண்ணி பிறகு "படர்ந்த வரசும் "வளர்ந்த விடபமும்" வாய்ந்ததும்" திருமூலர்" என்னும் யோகிசமாதியானதும்" அம்பாளுக்கு" பரிசுத் துவம், நீங்கினது மான,, "கோமுத்தீசு வர" மென்னும்" திருவாவடுதுறை" யடைந்து, வாழுங்கால் அங்கு மெய்யன்புடையரான* அருணமச்சிவாய மூர்த்திகளுக்கு அநேக மாணாக்கர்கள் சேர அவர்களுக்கு சாஸ்திராதியன உபதேசித்து சிவானந்தச் செல்வராய் சில நாட் கெல்லாம் ஸ்ரீ ஒப்பிலா முலையம்மை ஸமேத மாசிலாமணி யாரது திருவடி நிழலிலிரண்டறக் கலந்து வாழ்வா ராயினார். இனி இது நிற்க, ஸ்ரீஉமாபதியார் கொற்றங்குடியில் தன்னுடைய திருமடத்தில்வசித்துவரும் நாளில், சிதம்பரக்ஷேத்திரத்தில் பஞ்சகிருத்தியபரமானந்த தாண்டவம்புரியும், ஸ்ரீநடராஜ மூர்த்திக்கு, "ஆனித் திருமஞ்சன" உத்ஸவம் வந்து சேரவே, உமாபதியாரறிந்து, ஆலயத்திற்குச்செல்லுவோமென, உத்ஸவம்தொடங்குவதற்கு, சிலநாள் முன்னதாக, சென்று, ஆலயத்தின் கோபுரவாயிலை யணுகலும், இவரைக்கண்ட, தில்லைமூவாயிரர்களிற்சிலர், "முன்னம் நிகழ்ந்தவை முற்றும் மறந்து" அம்மெய்யன்புடையாரை, குலமுறையகன்ற நீர், ஆலயம். வரலாகா தெனத் தடுத்தார்கள்.

விருத்தம்.

நில்லுமையா பேரகாதீர் பூசைசெய்ய
நெறிதவறி நெறியடைந்தீர் நீருமிக்க
வல்லவரா யினுஞ்சாதி முறைக்குமாறுய்
மறையவன்கா ருகர்கூழை யுண்ணும்போது
வெல்லமெனக் கையேந்தி யுண்டீர்கர்ம
வேதியரின் குலமுறையை விடுத்தீர்வீணாய்
தில்லையரன் றனைத்தீண்ட லாமோவென்று
திட்டியே யவரைபுறம் நெட்டிக்கூறும்.

ஷ

அழகியசிற் றம்பலவன் பேடகத்தோ டும்மிடம்வந்
தமர்ந்த தாலே [ந்தோம்
பிழையெதுவும் பொறுத்தருளு மென்றுவுமை முணம்பணி
பேதை போலுங் [த்தோ
குழைந்துவுமையேமாற்றிப் பேட்கத்தைக் கொணர்ந்தமை
யினியெங் கோயி
நுழைந்திடவும் விடுவோமோ வந்தவழி தனைநீரு
நோக்கிப் போவீர்.

இராகம்-கானடா-தாளம்-ஆதி.

பல்லவி.

செல்லலாகா தையா நீரினிமேல் (செல்

சரணங்கள்.

1. வல்லவராய்நீா வாழினு நீதியை
மறந்துதில்லைமூ வாயிரர் சாதியை
புல்லரென்றுநம் புந்தியிற் கொண்டீர்
போந்துகாருகர் கூழை யேந்திநீ ருண்டீர் (செல்)

2. அழகியசிற்றம்பல வாணர் முன்னாலே
அமர்ந்த பேடகத்தோடு அணுகினதாலே
பிழைதனைப் பொறுமென்று பேதையைப்போலே
பேணிப்பணிந்தோ மதைப்பெற யினிமேலே (செல்)

வசனம்.

இந்தவிதமாய் ஸ்ரீ உமாபதியாரை கோயிலுக்குள் போகலாகாதென தில்லை மூவாயிரவர்கள் தடுத்துவிடவே, மனம் வருந்தி கொற்றவங்குடிக்கு வந்து ஸ்ரீமந்நடராஜனை யெண்ணி வருந்துகிருர்.

இராகம்-எதுகுலகாம்போதி-தாளம்-சாபு

பல்லவி.

ஈசனேவுமையென்று பூசனைசெய்திடுவேன்
இதுவுந்த னருள் தானே.

அநுபல்லவி.

மாசிலாக்கனகச பேசாத்தில்லைவன
வாசாசிவகாமி நேசாவன்பர்க்கருளும் (ஈ)

சரணம்.

வேதியர்கூடியெனை சாதியினின்று நீக்கி
விலக்கிவிட்டனரந்தோ விமலாவுந்தனை நோக்கி
பாதம்பணியவந்தேன் பார்த்தவரென்னைத் தாக்கி
பரதவிக்கவிட்டாரே பரமகேவல மாக்கி (ஈ)

வசனம்.

உமாபதியா ரிவ்வாறு ஸ்ரீமந் நடராஜப் பெருமானைச் சிந்தித்து வாழுநாளில் உத்ஸவத்தை யாரம்பித்து நடத்துவான்றில்லைமூவாயிரவர் முதற்றினத்தன்று, கொடியேற்றும் பொருட்டு ஆயத்தமாகி எல்லோரு மொருங்கே சேர்ந்து த்வஜஸ்தம்பமநுகி வேதாகமந்திரங்களைச் சபித்துக்கொடி யேற்றவே "கொடியேருது" தடைபடவே, கண்டு ஈசனைத்துதித்து மனம் வருந்துகிருர்கள்.

விருத்தம்

மடக்கொடியா ளொருபாகத் தமர்ந்திடபொன் மன்றுணட
மாடு மன்னே
விடைக்கொடியை யேற்றுவித்து விரைந்தானித் திங்களினும்
விழைவைச் செய்ய

தொடக்கமுற விடைக்கொடியு மேருது தடைபடவே
துன்ப மாழ்ந்தோ
நடக்குமிந்த விழவுதனை நடக்கவருள் செயுமெதையு
நடத்த, வல்லோய்.

அஞ்சனகீதச் சந்தம்.

1. விடைக்கொடியுடையோய் விமலனே நாதா
விடைக்கொடியேறிட வேசெயும் நீதா
விடைக்கொடியேற்றிடும் விதங்காணேம் போதா
விடைக்கொடியாள் சமேதா.

2. மறையொடுவாக மந்திரத் தாலே
மறையவர்கள் யாங்கள்மகிழ்ந்து மென் மேலே
இறைவனே கொடி யேற்றிடுங் காலே
யேறலை யாகை யாலே.

3. வேதியரெங்கண்மன மிகமகிழ் பூண
விடைக்கொடியது மேலேறியே தோண
ஆதியே வமலா அம்பல வாண
அருள்செயும் நாங்கள் காண.

வசனம்.

தில்லை மூவாயிரர் கொடியெழாமை கண்டு மனந்தாழ்த்து இவ்வாறு விடைக்கொடியுயர்த்ததில்லை நாதனை வேண்டி யிரங்காநிற்க, ஈசன், பின்னரும், தன்னிடத்தில் மெய்யன்புடையரான "உமாபதியாரின்" பெருமைதனை தில்லைமூவாயிரருக்கு வெள்ளிடைமலையெனத் தெரிவிப்பான், ஆகாசவாணியாகக் கூறுகிறார்.

விருத்தம்

நம்முமா பதிவந்தக்கா நங்கொடி யேறுமன்றி
யும்மினத்தவராலாவ தொன்றுமே யில்லைநீவி
ரிம்மெனவோடியன்னா ரிருப லர்ப்பதம் பணிந்தா
லெம்மருங்கொடியைப் போந்து வேற்றுவர் தேற்றுவாரே.

வசனம்

அன்பருக்கருளு மம்பலவாணன் ஆகாசவாணியாக விளம்பின்மொழியைக் கேட்டதில்லை மூவாயிரர்கள் மனம்நொந்து "காருகரிடுங் கூழைக்கையேந்தி யுண்டோன் கரத்தொழுகுங் கூழைக்

கையேந்தியுண்டு வேதியர் குலத்தினது நெறியைவிடுத்த உமாபதியாரிடம் போய்ச்சேர்ந்து பணிந்தால், அன்னுர்வந்து கொடியேற்றுவாரென்று, ஈசன் நமக்கருளளிக்கின்ருரே, அந்தோ! அந்தோ! என்செய்வோமெனப் பலவாறு வியாகூலாங் தக்கரணராய்பின்னர்; ஈசன்திருவுளச் சம்மதமிவ்வழித்தோ, யாதோ, வென்றுகொடியேற்றிவிழவினை நடத்துவதைக்கருதினவர்களாய்பின்னரும், மெய்யன்புடையரான "உமாபதியாரிடம்" எல்லோருமொருங்கோடி கொற்றங்குடியடைந்து அன்னுரைப்பணிந்து, கொடியெழாமையைக்கூறி கொடியையேற்றி ஆனித்திருவிழாவைநடத்திவைத்தருள வேண்டுமென்று மன்ருடுகிருர்கள்.

இராகம்-மோகனம்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

உமாபதி குருவே (உமா)
உமாபதியா ரருள்மேவும்
உத்தம பக்தப்ர சித்த (உமா)

சரணங்கள்.

சமதமாதிகுண ரஹிதா
சாதுசங்கம விஹிதா
மமதை யதனிலுறு மறிவிலி
யான யெங்களை காத்திடும் (உமா)
கதி வேறிலை நீர் மகிழ்ந்து
காப்பாற்றுவீர் மன மிசைந்து
மதியிலாது நாங்கள் செய்த
குற்ற மென்னி டாதீர். (உமா)

வசனம்

தில்லை மூவாயிரர்கள் இவ்வாறு போற்றி பணிந்து, கொடியேற்ற எழுந்தருள்வீரென இரங்கி நிற்க. இளகு மனமுடையரான" உமாபதியார்" மூவாயிரர்கள் தன்னைச் செய்த இடர்தனைக் கொஞ்சமு மெண்ணுது அவர்களோடு சென்று அம்பலவாணனைப்பணிந்து போற்றி. ஆனித்திருவிழாவை, அரியவிடைக்கொடியை யேற்றி நடத்துவான், எழாத கொடி யெழும் பொரு

ட்டு அத்து வசதம் பத்தின் முன்னர் செய்ய வேண்டிய முறை யிணையொருங்கே செய்து, "கொடிக்கவி" யென்னும். அரியநூ லாகிய, பாசுரங்களை திருவாய் மலர்ந்தருளினர்.

வசனம்.

இக்" கொடிக்கவி" அருளிச் செய்து கொடி பேற்று, திரு விழாவை நடப் பித்து பின்னர் தான் கொற்றங் குடிவந்து சிவாநு பூதிச்செல்வராய் வாழுங்காலத்தில்" ஸ்ரீமங்கடராஜப்பெ ருமான் திருவருளால். நற் பொருள் விளங்கும். சில அரிய நூல் களை யியற்றினர்.

சந்தாஞ்சாரியார் புராணச் செய்யுள்.

கொடிப்பாட்டு நூலருளிக் குலவுசிவப் பிரகாசங்
கொள்வி னுப்பா
வொடிப்பாட்டு மருட்பயனே டுண்மைநெறி விளக்குமுள
முய்துங் தூது
படைப்போற்றிப் பஃறொடைப்பர் சங்கற்ப நிராகரணம்
பதிகக் கோவை
புடைத்தோற்று பதிக்கோவை சேக்கிழார் புராணமன்பர்
புராண சாரம்.

வசனம்

உமாபதியார் இவ்வரிய நூல்களை யியற்றிய பின்னர், "திருக் கோயிற் புராணம்" என்னும்நூல் பொருள் விளங்கும்அருநூலை யியற்றி அதனை யோர் பேடகத் திலமைத்து, மனதிலிதனை அம் பலவாணர் திருமுன்பேஅரங்கேற்ற வேண்டுமெனக் கருதி, உமா பதியார், முயலவே" தில்லை மூவாயிரர்கள் பழமை போலவே, வர வொண்ணதெனத் தடுக்க மனந் தியங்கினவராய் வாழு நாளில், ஸ்ரீமங்கடராஜப் பெருமான் உமாபதியார் செய்த" திருக் கோயிற் புராணமதை, அரங்கேற்று வித்து பூவிற் பிரசித்தமாக்கு மாறு கருதி, ஓர்நாள், மாலைநேரம், தன்னுருவத்தை" மறைத்துக்கொள் ளவே" தில்லை மூவாயிரர் வந்து கண்டு தியங்கி கீழே விழுந்துபுர ண்டழுது ஈசனைத் துதிப்பாராயினர்.

இராகம்-முகாரி-தாளம்-ரூபகம்

பல்லவி.

எங்குமறைந்தேகினீர் எம்பெருமானே—நீர்(எங்)

அநுபல்லவி.

மங்கைசிவ காமியின்மன
வாளனேயாடுந் தாளனேநீர் (என்)

சரணங்கள்

1. கதவமதைநீக்கினதுங் கனகசபேசா வுன்னை
கண்ணாரக்கண்டுமனங் களிப்பதற்கில்லாம லென்னை
விதமாயெங்களைவிடுத்து மெல்லிசிவகாமி அன்னை
மெலிந்துவருந்திடவுமேகினீர் காண்போமோ நின்னை (எ)

2. சிந்தனையிடைவிடாது சிந்தனைசெயன்பர் பாலோ
சிறந்திடுயோகமுறை சேர்த்திடுவோர்கள் பாலோ
புந்தியிலன்பாய்நிதமும் பூசனைசெய்வாரின் பாலோ
போதமுறைகொள்ளயெண்ணிப்போற்றிப்பணிந்தோரின்பாலோ

வசனம்

இவ்விதம் மனம்வாடிக் கண்ணீரரும்பிப் புலம்புங்கால் ஸ்ரீமந் நடராஜப்பெருமான் ஆகாசவாணியாகக் கூறுகிருர்

தனகூரிச்சந்தம்.

உன்னதப் பொற்சபைப் பேர்ந்தோம் நாம்
உமாபதிபேடகஞ் சார்ந்தோம் அங்கு
மன்னிமனமகிழ் கூர்ந்தோம் போய்
வணங்கிப்பணிகுவீரே.

வசனம்.

விண்ணிடையிவ்வாறு ஒலியெழுந்ததைச் செவியுற்று வருந்துகிருர்கள்.

விருத்தம்.

ஐயோயி தென்னவுந்த னருளிதுவோ காருகரா
லளித்த கூழைக்
கையேந்தி யுண்டவொரு மறையவரின் கரத்தினின்றுங்
கசியக் கண்டு
நையாத மனதொடுமா பதியேந்தி யருந்தினதா
லவரை நீத்தோஞ்
செய்யாத முறைசெய்தா ரிடஞ்சென்று பணியமனந்
திகைக்கின் ரேமே.

வசனம்

என்று மனம்வாடி பின்னர் என்செய்வதென வெண்ணி தில்லைமூவாயிரவர் ஒருங்கேசேர்ந்து, கொற்றங்குடி வந்து சேர்ந்து ஸ்ரீ உமாபதியாரிடம் நிகழ்ந்ததை விண்ணப்பித்து வருந்தியழைக்கிறார்கள்.

இராகம்-ஆரபி-தாளம்-ஆதி.

பல்லவி.

வந்தருள்செய்திடு மையா வேறே
வகையிலையெங்களுக்கு மெய்யா (வந்)

அநுபல்லவி.

நைந்திடும்படிவும்மை நாங்கள்பல சதியே
நண்ணிபுரிந்தோமதை யெண்ணாதுமா பதியே (வந்)

சரணம்

நாதனேமன்றதனி லில்லை அத
னாலேமிகயடைந்தோந் தொல்லை நாங்கள்
வேதனைப்படும்போதோர் சொல்லை அந்த
விண்ணிடைக்கேட்டோம்திருத் தில்லை வாழும்
வேதியரேவுமாபதியிட மேவியின்று
விளங்குகின்றோமென்று விளங்கிற்றுநீரு மின்று (வந்)

வசனம்

இவ்வண்ணம் விண்ணப்பித்து வந்தருள வேண்டு மென்று இரங்கி நிற்பவர்க்கு அருள்செய்யுமாறு உமாபதியார் அவர்களை நோக்கி, ஐயன்மீர், நம்பேடகத்தில், ஸ்ரீமந் நடராஜ மூர்த்தியின் அருளினாலேயான் இயற்றிய "கோயிற்புராண" முளதேயன்றி ஈசன் வந்தமரவில்லை, நான் என்செய்வது வெனவே இதனைக் கேட்ட மூவாயிரர்கள் கூறுகிறார்கள்.

சந்தானசாரியார் புராணம்.

அடிகேளப் புராணமதை யம்பலம்வைத் தரங்கேற்றி
யருள்வீ ரென்னப்
படிபோற்றுந் தில்லைநகர்த் திருவுடையந் தணராவார்
பல்லோர் கூடிச்

கொடிதோர ணங்கள்குடை சாமரைசின் னம்முதல்
குலவிச் சூழ
படியாரத் தவமுடையீர் வைகுறுமிச் சிவிகைமிசை
யென்ன வந்தார்.

வசனம்.

புராணமதை யரங்கேற்று வீரென்று பணிந்து, ஓர் சிவிகை கொண்டு ஸ்ரீ உமாபதியாரையும், அன்னவரருளிச்செய்த "திருக்கோயிற் புராணத்தையும்" அதிலெழுந்தருள்வித்து தில்லை மூவாயிரர்களிற்சிலர், அச்சிவிகையைத் தூக்கி சிதம்பராலயத்தை நாடினார்கள்.

பதம்.

இராகம்-பியாகு-தாளம்-ஆதி.

1. தூக்கிவந்தார் உமாபதியைச் சிவிகை
தூக்கிவைத்தே திருக் கோயிற்புராணத்தோடு (தூக்)

2. நீக்கிவைத்தேகுல நெறியகன்றாரென்று
நிந்தனைசெய்திட்டவர் வந்தனஞ்செய்துதோளில் (தூ)

3. கொடிசாமரந்தோரணங் குடைகளுஞ்சூழ்ந்திட
கொட்டுமேளதாளங்கள் குலவியேயொலித்திட (தூ)

4. விண்ணிடைவிமலனும் விளம்பினதையெண்ணி
வேறெதுஞ்செய்திடும் விதமிலாகிநண்ணி (தூ)

வசனம்.

இவ்வாறு எல்லோருமொருங்கே சேர்ந்து உமாபதியாரை சிதம்பராலயத்திற்கு அழைத்து கனகசபையிலமரச்செய்து "கோயிற் புராணத்தை" பேர் பீடத்தேற்றி, தூபதீபங்கொடுத்துப் பூசித்துப், பணிந்து நிற்கவே, "அப்புராணத்தை ப்ரஸங்கிக்க உமாபதியார் தொடங்கும் போது, ஸ்ரீமந்நடராஜப் பெருமானது திருவுருவம், முன்னம்போலவே தோற்றுதலும், எல்லோருங்கண்டு மகிழ்ந்தார்கள், புராணமும், ஸ்ரீ உமாபதியாரா லரங்கேற்றப்பட்டது, பின்னர்' மெய்யன்புடையரான உமாபதியார் தனது கொற்றங் குடிக்குவந்து சிவாநந்தச்செல்வ சீவன் முத்தராய் வாழ்ந்து வருகிறார்.





## 3-ஸ்ரீஸத்குரு சங்கம விலாசம்.

ஸ்ரீமந்நடராஜப் பெருமானுக்கு அநுதினம் பெற்றான் சாம்பனார் விறகளிக்குந் தொண்டைத் தவறாதியற்றிவரும் ஓர் நாள் மனமுருகி ஈசனை யெண்ணி ஸத்குருநாதனை, அருளும்படிவேண்டுகிறார்.

இராகம்-செஞ்சுருட்டி தாளம்-ஆதி.



பல்லவி.

குருநாதன் திருவருளாலின்பங்
கொண்டிடும் நாளெந்தநாளோ அறியேன் (குரு)

அநுபல்லவி.

மருளாரெனமனத் திருள்தனைப் போக்கும்
வன்மயலகற்றியே தன்மய மாக்கும் (குரு)

சரணம்



தாபங்களொழிந்து பாபங்க ளழிந்து
தானென்று வருமெந்தனாணவங் கழிந்து
மாபவங்கடந்து வினைசம மாகி
மான்மயகன்றவருள் பதிந்துதா னாகி (குரு)

வசனம்

பரமசாம்பவரான சாம்பனார் இவ்விதம் வருந்தி துன்புற்று குருநாதன் கிருபை என்றுரைக்குமோ என்று யேங்கி திருத்தொண்டை விடாது புரிந்து வரும் ஓர் நாள் விறகளித்து விட்டு தனது தென்னஞ்சோலையைநாடி வருங்காலத்தில் தன்னையறியாமல்ஆனந்தக்களிப்புந்தேகஞ்சிலிர்ப்பும் நாத்தழுதழுப்பும்உடையவராய் கண்ணீரரும்பி நற்காலத்திற்கு வேற்ப சூசகங்களுண்டாகவே, ஆனந்த பரிதராய் சாம்பனார் தனதிருப்பிடம் வந்து சேரவே, மாலைநேரமுங் கழித்து பொழுதும், போயிற்று அன்றிரவில், ஸ்ரீமந் நடராஜப் பெருமான், சாம்பனாருக்கு இன்னருள் செய்வான் திருவுளத்தி லெண்ணி, சாம்பனாருடைய கனவில் தோன்றினார்.

இராகம்-தோடி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

கனவினிலே தில்லைநாதன் பனவ ரொருவராகவந்தார் (கன)

அநுபல்லவி.

நினைவினுக் கெட்டாக நித்தன்
நீசச்சாம்ப ஞாம் பத்தன் (க)

சரணம்.

நெற்றியிற் திரு நீறு துலங்க
நீண்டமுன் னூல் மார்பி லிலங்க
கற்றைச் சிகையின் குடுமி நலுங்க
காதிற்கவசகுண்டலங் குலுங்க
கண்மணிபூண்டு விளங்கிட
கரசரணுதி துளங்கிட

வசனம்.

ஈசன் சாம்பனாரின் கனவினிலே வந்து சாம்பனாரைப் பார்த்து ஸத்குரு நாதனை அடையுமாறு இன்னருள் பாலிக்கிறார்

வெண்பா

கொற்றங் குடியாருங் கோதி லுமாபதிப்பேர்
நற்றவர்க்கே நீவிறகை நல்கிடுவாய் பெற்றா
வுனக்கருள்வா ரின்னேபோ வுத்தமருக் கீயி
லெனக்களித்த தற்குநிகரே

எனதடியார்க் கேயளித்தா லெற்களித்த தாகு
மெனக்களித்தா லென்னடியார்க் கேலா வெனதுவடி
யார்மனமே கோயிலா யானமர்வே னுகையா
லாரினுமே லாவா ரவர்.

வசனம்

ஈசன் இவ்வாறு சாம்பனாரின் கனவில்வந்து கொற்றங் குடி, ஸ்ரீஉமாபதியாருக்கு, நீ இந்த விறகுத் தொண்டினைச் செய்து வருவா யாஞல் உனக்கு இன்னருள் பாலிப்பா ரெனச் சொல்லி திருவுரு மறைத் தருளவே, சாம்பனார் விழித்தார், பொழுதும் விடிந்தது. ஆனந்த பரவசராய், ஈசனே, எனக்கும் அருள்செய்ய வந்தீரோ, என, மகிழ்ந்து துதிக்கிறார்.

இராகம்-மோகனம்-தாளம்-ஆதி.

பல்லவி.

எனக்கு மின்னருள்செய்ய ஈசனேநீரும் வந்தீரோ (எ)

அநுபல்லவி:

நினைக்கடிமை செய்யும் நெறியுணரா நிலையன்
நீசகுலத்தோன் பவம் நிதம்புரியும் புலையன் (என)

சரணம்.

எட்டுமிரண்டுமறி யேனெனைநீர் நினைந்து
ஏதோ திருவுளத்தி லெண்ணிகனவில் வந்து
வெட்டும் விறகையுமா பதியைமேவிப்ப பணிந்து
மெய்யன்போடளித்திடு வென்றுசொல்லமகிழ்ந்து (எ)

வசனம்

சாம்பனர் ஈசன் கருணையோடு கனவில் அருள்செய்ததைநினைந்து நினைந்து மகிழ்ந்து தனக்குண்டாகும் சுக நிகழ்ச்சியைக் கூறுகிறார்.

தண்டகம்.

1. ஆநந்தமாநந்த மாநந்தந் தானே
ஆஆ நானடைந்தே னருளின்று கோனே
ஈனப்பறையனுன் எழிலடைந் தேனே
ஏழைபடும் பாட்டுக் கிரங்கினீர் தானே(ஆ)

2. மனதை யறியாமல் மகிழ்ச்சியைக் கொண்டேன்
மன்றுளே தாண்டவ மாடியைக் கண்டேன்
எனது துன்பமது மிழந்துநான் விண்டேன்
ஈசனருளெனு மின்னமு துண்டேன்(ஆ)

3. இரும்பினைக்காந்த மிழுப்பது போலே
ஈசனருளெனு மீர்த்துதன் னாலே
விரும்பிய படிகுரு வின்னரு ளாலே
மேலடைந்திடும் வழி விளங்கின தாலே(ஆ)

வசனம்.

சாம்பனு ரிவ்வாறு மகிழ்ச்சிகொண்டு நான் இனி ஸ்ரீமந்நடராஜப்பெருமான் திருவருட்படி ஸ்ரீ உமாபதிசுவாமிகளான, என்

ஸத்குருவைக்கண்டு அன்னவருக்கு உபயோகப்படுமாறு இந்த விறகுத்தொண்டினை யியற்றுவதன்றி ஈசனுக்கும் விறகளிப்பேன் எனநிச்சயித்து தன்மனதுக்குக் கூறுகிருர்.

ஆநந்தக்களிப்பு.

இனிவீணு யிருப்பேனே நானே எனக்
கீசனருளிய விதமேசெய் வேனே (இனி)

1. சற்குரு பாதத்தைக் கண்டு நான்
சாஷ்டாங்கமாய்ப் பணிந்தேமகிழ் கொண்டு
நிற்கு நிலையதை விண்டு இந்த
நீசனுக்கருளென வியற்றுவேன் ருெண்டு (இனி)

2, தேகமோ யென்றுஞ்சங் தேகம் குரு
திருவடிபணி செய்வதேசிவ போகம்
ஏகமனதாக யோகம் புரி
யென்குருவருளே கருணைப்ர வாகம். (இனி)

3. வாழ்வாவது பெரு மாயம் இதை
மறப்பதே குருவையடையுமு பாயம்
சூழ்வது தொண்டர்ச காயம் அதைச்
சூழ்ந்திடில் நீங்குஞ்சனனவ பாயம் (இனி)

4. மனைமக்களாடுகண் மாடு நாம்
வசிக்கக்கட்டின பெருமாடியார் வீடு
இனையதெல்லாம் பெரும் பாடு நாம்
ஏகும்போதே வருமோசுடு காடு (இனி)

5. காலன்கரத்தினி லீட்டி கத்தி
கட்டாரிவெட்டரி வாள்களை நீட்டி
நாலாவிதத்தினும் வாட்டி வீணுய்
நாகத்திலிடுவதை மனதினில் நாட்டி! (இனி)

6. வயிற்றுக்கு வுணவினைத் தேடி நாயாய்
வயிறுவளப்பதினு லென்ன நாடி
இயற்றிய கோடான கோடி பவ
மேகிடும்வழியதைப் பார்ப்பேன் நான்வரீடி இனி)

7. குடும்பமென்பதுவீண் கூட்டம் அதைக்
கொண்டவர்க் கென்றுந்தொலையாத்திண் டாட்டம்
ஒடும்பையன்றி மன வாட்டம் இன்றி
இருப்பதில்லையிது வேபொம்ம லாட்டம் (இனி)

8. பித்தொடு பேயும்பி சாசு வந்து
பிடித்தலைதநிக ராகுமையலா மாசு
சித்தத்தி லென்னாளுங் காசு தீர்க்கச்
சிந்திப்பதன்றி சேராதெதுந் தூசு இனி)

9 சகத்தினில் மனிதராய்ப் பிறந்து நாம்
சாவோமென்னுந் திண்ணந்தனைமனந் துறந்து
மிருந்த செல்வத்தினிற் சிறந்து அணை
வீற்றிருந்தாலெமன் விடுவானோ மறந்து (இனி)

10. இன்னே விறகினை வெட்டி தனை
யெடுத்திடுவேனொரு சும்மாடு கட்டி
நன்னயமாய்க் குருவைக் கிட்டி எந்த
நாளுங்கொடுத்திடவேதினி யட்டி (இனி)

விருத்தம்.

பெற்றானும் மிருப்பிடத்தை விட்டுப்பேர்ந்துப்
பெருங்காட்டு மரங்கள்வெட்டிப் பிளந்துகட்டி
வற்றாத பேரன்பு மனதிற்பூண்டு
வாயார குருநாதன் றன்னைவாழ்த்தி
முற்றாத பேரின்புக் கடலில்முழ்கி
வூக்கமொடு குருமுகத்தைக் காணவுன்னி
நற்றவை யிளங்கன்று நாடல்போலு
நாடினார் குருவிடத்தைத் தேடினாரே.

வசனம்.

சாம்பனார் விறகுக்கட்டைத் தலையிலெடுத்துக்கொண்டு அன்புப்பெருக்கத்தினாற் கொற்றங்குடிவந்து இளங்கன்று அவாவோடு ஆவைத்தேடும் விதமாகப்பார்த்துக் கொண்டேவரும்போது ஸ்ரீமங்கடராஜப் பெருமானுடைய அருள்வாய்ந்த ஸ்ரீ ஸத்குருவாகிய உமாபதி சிவாசாரிய சுவாமிகள் வசித்திடும் திருமடத்தினைக்கண்டு இதுதானோ சத்குருநாதன் திருமடம் என்று மயங்குகிறார்.

இராகம்-பியாகு-தாளம்-ஆதி.

பல்லவி.

குருநாதன் மட மிதுவோ (குரு)

அநுபல்லவி.

அரனார்வேதியராய்க் கனவினில்வந்
தருளியபடி வுமாபதிசிவா சாரியரின்
மடமிது வோ. (குரு)

சரணம்.

ஏதோவென் மனதி லின்பம் பூணுது
எண்ணங்களித்து தேதோ தோணுது
நாதன்வாசஞ் செயு மிடமெனக் காணுது
நன்றேவரு மென்றே யெண்ணுதுகுரு (நாத)

வசனம்.

இவ்வாறு ஐயப்பாடுற்ற சாம்பனார் அத்திருமடத்தின் வாயயிலின் கண் பரமசாம்பவர்களாய் சிலர்கள் நின்றுகொண்டும் சிலர்கள் சாஸ்திரங்களைப் படித்துக்கொண்டும் சிலர்கள் பத்திவசத்தராய் நாமபஜனம்பண்ணிக்கொண்டும் இருப்பதைக்கண்டு சாம்பனார்ஸ்ரீஉமாபதியாரின் திருமடம் இதுவாகத் தானிருக்கவேண்டுமென்று நிச்சயித்துச் சென்று அவர்கள் பார்க்கும் வண்ணம் தலையிலிருந்த விறகுக்கட்டினை அவித்தையென்கிற மூட்டையையிழந்து பாரங்கழிந்தவரென கீழேயிரக்கி அங்குள்ளோர்களைச் சாம்பனார் வணங்கவே அவர்கள் நீயாரென்றும் இவ்விறகு யேதென்றும் வினவ சாம்பனார் கூறுகிறார்.

விருத்தம்.

ஈசனின்னருளினாலே யேழையான் தினமும்வந்து
நேசமாய் விறகுபோட்டு நித்தமுந்தொழுதற் கெண்ணி
மாசிலாமனமுங் கொண்டேன் மகிழ்ந்தின்று முதலாய்நீங்கள்
காசிலாவிறகைப்பெற்று களிப்புடன் மடஞ்சேர்ப்பீரே.

வசனம்.

சாம்பனா ரிவ்விதம் புகன்றதைக் கேட்ட, ஸ்ரீஉமாபதி யாரின், மாணாக்கர் குழாங்கள் மகிழ்ந்து, அவ்விறகினை யெடுத்துமடத்தின் மடைப்பள்ளிக்குச் செலுத்தி விட்டார்கள் அன்றுமுதல்

சாம்பனார் தினந் தவறாது ஈசனுக்கும் குருவுக்கும் விறகளித்துக் கொண்டே வருகிறார். இவ்விஷயத்தை அம்மாணாக்கர்களேனும் மடையாளர்களேனும் ஸ்ரீ உமாபதியாரிடம் விண்ணப்பித்தவரல்ல. சாம்பனார் விறகு கொண்டு போடுவதும், என்றைக்கு சற்குருநாததரிசனம் கிடைக்குமோவென. எதிர் பார்த்துக்கொண்டே ஆனந்த பரவசராய் வாழ்ந்து வருநாளில் சில புலையர்களிதனையறிந்து சாம்பனாரிடம் வந்து கூறுகிறார்கள்.

தண்டகம்

| | | |
|---|---|---|
| 1. பெற்றாவுனக்கென்ன | பித்தோ | நீயும் |
| பெரியவனோதலை | பத்தோ | |
| சுற்றாதே விறகினை | வெட்டி | யென்று |
| சொன்னோமே பலதரஞ் | சுட்டி | |
| 2. புலையரிற்பலரைநீ | கெடுத்தாய் | ஞாயம் |
| புகல்வோருக்கேமதி | கொடுத்தாய் | |
| நிலையாதகாரியந் | தன்னை | செய்து |
| நெறிவிட்டாயொடுக்குவோ | முன்னை | |
| 3. வனபூசைதனைவந்து | அழித்தாய் | சேரி |
| வாழும்புலையர்சொந்தம் | ஒழித்தாய் | |
| தினமும்விறகெடுத்துத் | தூக்கி | வீணாய் |
| திரிந்திட்டாய்காலத்தைப் | போக்கி | |
| 4. இப்படியிருந்திடும் | போதே | இப்போ |
| தியற்றமுயன்றாயோர் | சூதே | |
| குப்பலாய்விறகினைத் | தேடி | கட் |
| கொற்றங்குடியதை | நாடி | |
| 5. சாமியாரொருவர்க்கு | அளித்தே | மகிழ் |
| தாடுகின்றாய்நிதங் | களித்தே | |
| தீமைவயிற்றுவலிக் | கிடமே | தந்த |
| திறமாச்சுவுந்தன்சங் | கடமே | |
| 6. கோரிச்செய்வதெல்லாந் | தீம்பு | புலைக் |
| குலத்திற்கு கோடாலிக் | காம்பு | |
| சேரிப்புலையரின் | நடுவே | வந்து |
| சேர்ந்தாயே நீயொரு | வடுவே | |

7. அருமையாய்ப்பாம்புக்குப் பாலே வைத்தா
லருந்திவிஷந்தருதல் போலே
உரிமையாய்ச்சொல்லிட்டாற் புத்தி குலத்தை
யொழிக்கவெடுக்கிறாய்நீ கத்தி

8. மண்டையுனக்கென்ன இரும்போ சேரி
வாழும்புலையருனக்குத் தரும்போ
கண்டவருளமரு வருக்க ஏதுங்
கருதிச்செய்கின்றாய்நி பெருக்க

9. விறகளித்தால்நீயோ ஞானி இந்த
மேதினியிலில்லாச் சூனி
பறையருக்கோவடியார் தொண்டு இதை
பரிகசிப்பார் யாருங் கண்டு

10 ஆண்டையிடத்தினிற் சொல்வோம் உந்தன்
ஆட்டம்பாட்டமெல்லாம் வெல்வோம்
வேண்டாமெங்''கள்மொழியை கேளு அந்த
வெட்டிவேலையைவிட்டு மீளு

வசனம்

புலையர்களிவ்வாறு சாம்பனாரைப்பார்த்துக் கூறவே சாம்பனார், அப்புலையரைப் பார்த்துக் கூறுகிறார்.

விருத்தம்.

புலையர்களே வுங்களுக்குப் புகன்றநல்ல
போதமதை மறந்தின்னும் புகல்கின்றீரே
மலையெனவே யனுதினமு மறம்புரிந்து
மாடாடைப் போற்சேரி வாழ்ந்துகெட்டீர்
உலையதனின் மெழுகனவே வுளத்திலன்பு
வுருகியரன் பதமடையு முறுதிநாடி
தொலையகன்ற வடியவரைத் துதித்துப்போற்றித்
தொண்டுசெய்வீர் பேரின்பங் கொண்டுய்வீரே.

இராகம்-எதுகுலகாம்போதி-தாளம்-திசிரம்.

பல்லவி.

தொண்டுசெய்துக் கொண்டுவந்தாற் சுகமடையலாமே.

அநுபல்லவி

பண்டுமனமதுமகிழ்ந்து தொண்டரெலாம்வாழவிட
முண்டவராகியநீல கண்டனது படிபவர்க்குத்(தொ

சரணங்கள்.

அங்கமதி நீறணிந்து வரநாமம் பாடி
அக்கமணி பூண்டுசிவா நந்தமதிற் கூடி
சங்கையறச் சாத்திரங்க டனையறிந்து நாடி
சகமனைத்து மித்தையெனத் தனிர்த்தருளைத் தேடி
மங்கையர்கண் மோகமற்று மாயையறவே துறந்த
மனமுடையா ரானசிவன் றனதடியர் தனக் குகந்த (தொ)

ஈனமுறும் புலையரெனு மிழிகுலத்த ராலும்
என்றுமிள மாதர்கள்சிற் றின்பத்தின ராலும்
மானமற மதுவுண் மகிழ்ந்துண்ணுவ ராலும்
மனதுநிலை யறநீங்கி வசிக்கும்பித்த ராலும்
ஞானமுறுஞ் சிவவேடந் தானணிந்தாற் சிவ னென்று
நாடியவர் தனைப்பணிந்து நல்லன்ப ரிவ ரென்று (தொ)

சிவனடியார் தனக்களிக்கிற் சிவனுக்காகுமப் போது
தேவர்பணி சிவற்களிக்கிற் சிவனடியார்க்கா காது
தவனன்முன நின்றாலு மவனொளிசார்தரை மீது
தங்கிபதம் வைத்திடிலோ தாங்கமுடி யாது
அவனுக்கிடர் செயினுமவன டியார்க்குச்செயிற் பாபம்
அடியவர்கட் கிணையவரே யாருரைக்கப்பாரவர் ப்ர தாபம்(தொ)

வசனம்.

அடியவர் பெருமையை யெடுத்துக்கூறி திருத்தொண்டியற் றிடும்படி சாம்பனார் கூறுவதைக்கேட்ட புலையர்கள். மிகவும் வெறுப்புற்று சேரிக்குப்போய், அன்றே புலையர்களெல்லோரும் சேர்ந்து சாம்பனாரை யெண்ணி வருந்துகிறார்கள்.

விருத்தம்

முன்னமிருந் ததனைவிட முதிர்ச்சிகொண்டு
முனைந்ததிருத் தொண்டுசெய முயன்றுசாம்பான்
பன்னெடுநாட் கோயிலுக்குப் பரிவாயீந்த
பதத்தோடு மிப்பொழுதோர் பண்டுவாய்ந்து
உள்ளிகொற்றங் குடியதனி லுற்றசாமி
யொருவருக்கு வளித்துவர லுற்றனந்தோ
துன்னுமிவன் றனக்கென்ன சொல்வதென்றுச்
சூழ்ந்திட்டார் யோசனையி லாழ்ந்திட்டாரே.

இராகம்-தர்பார்-தாளம்-ரூபகம்

கண்ணிகள்.

1 புலையர்களேயினிநாம் புரிவதுவெவ் வழியே
நிலையதுமாறிபெற்ருன் நிதம்புரிந்தான் பழியே

2. புத்திமதிபலவெடுத்து போதனைசெய்தே தடுத்தோம்
நத்திநமதாண்டையிடம்நண்ணிச் சொல்லியுங் கொடுத்தோம்

3. தொண்டியற்றும்வேலைதனை தொலைத்திடுவழி யறியோம்
மூண்டனிவனுற்சேரிக்கு மூண்டிடுமிடரைக் குறியோம்

4. ஐந்துபுலையர்கள்சிறுவர் அவன்மாய்வலையிற் பட்டார்
சிந்தையொடுநமைமறந்து செய்தொழிலுமழிந்து விட்டார்

விருத்தம்

பாரதனிலில்லாத பழக்கந்தன்னைப்
பாராட்டி செய்தேநீ பாழாகாதே
ஏரதனைப் பூட்டிவுழு தேயெல்லோரு
மிசைந்துபயிர்த் தொழிலதனை யியற்றியாண்டைச்
சீரடியைப் போற்றிநின்ருற் சிந்தையோடு
செஞ்சம்பா நெற்கூலி தேர்ந்தளிப்பார்
வாரநெல்லும் வாங்கிடலாம் வயலைநாடி
மகிழிடுவாய் வேலையதில் நிகழுவாயே

வசனம்.

புலையர்கள் இவ்வாறு சாம்பனுரை நயமாக பண்ணைப் பயிர்த்தொழில் செய்திட வரவேண்டினபோது சாம்பனுர் கூறுகிருர்.

விருத்தம்.

பயிர்த்தொழிற்செயும்பொருட்டு பரிந்தழைக்கின் றீரிந்த
பயிர்த்தொழிற்புரிந்தால்யாதும் பயனிலைநானேசொல்லும்
பயிர்த்தொழிற்செய்தாலீசன் பதமடைந்திடலாம்நீர்செய்
பயிர்த்தொழிலதனுல்வாழ்விற் பட்டுழல்வது தானன்றே.

இராகம்-கோபிகாவசந்தம்-தாளம்-ஆதி.

பல்லவி.

பயிர்செய்யும்வகைசொல்வேன் கேளீர்
பறையர்காள் நீர் (பயி

அநுபல்லவி.

உயர்வாகியசோதிப்ர காசன் பார்க்குமெங்கினு
முயிருக்குயிராய்த்தங்கு மீசன் தன்னருளினல்
உத்தமமானவுணவுண்பதை விடுத்து
உடலைவளர்க்குமீனவுணவதை யெடுத்து
மித்தையாய்ப்போவதேன்வேண்டாம்நீ ரடுத்து
மேவுஞ்ஜனனமரணந்தனைக் கெடுத்து (ப)

சரணங்கள்

வெள்ளந்தாழ்சடையானைத் தொழுது நாங்கள்கொண்டிடு
வேலைமுடிப்பாயென்று அழுது மனதுவாடி
உள்ளமென்றவயலைப் பழுது இல்லாமற்பின்பு
உறுதியென்னுமேர்கொண்டு உழுது இந்த்ரியச்செய
லோங்கிடாதுசெடி கொடிகள்போல் வெட்டி
உயர்ந்தபூதியெனு மெருவினைக் கொட்டி
நீங்கிடாதவுக்க நெறிக்கரை கட்டி
நீண்டவிழியிலாநந்த நீர் சொட்டி (பயி)

பத்தியென்னுந் தண்ணீரை விட்டு அளவில்சிவ
வித்தாம்விரையைத் தெளித் திட்டு காலங்கண்டுமு
ளைத்தானவுடன்பறித் திடடு நாமத்தைப்பாடி
சித்தந்தனிலே நட விட்டு பின்னுமதற்கு
தேங்கும்படியே பத்திநீரது பாச்சு
சிவஞானப்பயிர்து திகழ்ந்திட லர்ச்சு
ஓங்குசாயுஜ்ய மாப்நெல்லா யாச்சு
உறுமின்பே வுணவா மாயை போச்சு (பயிர்)

வசனம்

இப்படியாய்ச்சொன்ன சாம்பனுரை விடுத்து மனம்வாடின வர்களாய் சேரிவந்து யோசிக்கிறுர்கள்.

விருத்தம்

இதுவென்ன முறைமையிதை யெங்குங்காணே
மென்னவோ பலபலவா யியம்புகின்றுன்
மதிதிரிந்து வழக்கமில்லா வழக்கஞ்சேர்ந்து
மார்க்கமல்லா துன்மார்க்க மானுனந் தோ

விதியிதுவோ யாண்டையிட மேவிச்சொன்னே
 மிகவுரைத்தா ரிவனுக்கது விளங்கவில்லை
அதிவிரைவாய்ச் சென்றுநம தாண்டையண்டை
 யண்டுவோ மவர்க்குசினங்கிண்டுவோமே.

வசனம்

புலையர்கள் இல்வாறு யோசனைசெய்து கொண்டு ஆண்டை யிடத்திற்கு இன்று சென்று சாம்பானைப்பற்றி சொல்லுவதில் ஆண்டைக்கு மிகுந்தகோபம் உண்டாகி அவனைக்கண்டிக்கும்படி தூண்டிவிட வேண்டுமென்று பேசிக்கொண்டு புலையர்கள் எல்லோருங்கூடி ஆண்டையிடம் வந்து அடிபணிந்து சாம்பனாரின் தீம்பைக் கூறுகிறார்கள்.

பறையர்கள் கூறும்

நொண்டிச் சிந்து.

1. ஆண்டே ஒருசங்கதி கேளும் உங்க
அடிமை வேலைசெயுங் குடிப்பறையன்
பெற்றான் மதிகெட்டான் தங்களது
பேரைக்கெடுத் ததுமல்லா லூரைக்கெடுத்தான்
சிதம்பரம் போயடுத்தான் முன்னம்
தினந்தோறுஞ் சென்றுதொண்டு தனைப்புரிந்தான்

2. பரபரப்புடன் செல்வான் காடுகளிற்
பட்டமரங் களைக்கண்டு வெட்டிவருவான்
கோடாலி கொண்டு பிளப்பான் சின்னசின்னக்
கோபுரம்போற் கட்டுகட்டிக் கொண்டுசெல்லுவான்
கோயிலின் மடைப்பள்ளிக்கெ விறகதைக்
குப்பலா யதிகமாய்நி ரப்பியேவைப்பான்.

3, பறைய ரெங்களைக்கூட்டி பலபல
பத்திவழி சொல்லிசில புத்திகூறினான்
பலநாளிப்படி போகச் சின்னஞ்சிறு
பயல்களைச் சேர்த்துதின்னும் பண்டங்கொடுத்தே
அவன் வழிப்படியாக்கினான் சேரிதனில்
ஐந்துபுலை யர்கள்தமை சிந்தைமாற்றியே

4. தன்வசப்படுத்திக் கொண்டான் இதைக்கண்டு
தயங்கி, யெங்கள்மனது மயங்கிநின்றோம்
இருக்கட்டுமென்று வெண்ணியே நீதிதனை
எவரைச்சொல் லச்செய்யலா மென்றுநாடியே
எங்களதுநாட்டாமைக் காரரிடம்
எடுத்துச்சொல் லியேநீதி யெடுத்துச்சொல்ல

5. விடுத்தோமவர் சென்று நீதிமொழி
மிகவுரை த்தாரவ னகங்கரைத்தார்
சாம்பானவர் தன்னை பரிகாசந்
தானெடுத்துப் பேசியவன் மானங்கெடுத்தான்
சிறுபயல்களை யேவி சண்டைபோடச்
செப்பிக்கொடுத் தான்தனைத் தப்பிமறந்தான்

6. சங்கைகுணமென்று நாங்கள் வனபூசை
சட்டமாகப் போட்டுபணிந் திட்டுத்தொழுதோம்
சன்னதம்வந்தவன் போலே நாங்கள்வைத்த
சாமிகளைப் பூமிதள்ளி யேமிதித்திட்டான்
எங்களைப்பிடித் தடித்திட்டான் ஓட்டம்பிடித்
தேகிச்சேரி தன்னில்மறை வாகியிருந்தோம்

7. உங்களிடம்வந்தும் சொல்லினோம் அதைநீங்கள்
உள்ளத்தினி லெள்ளளவுங் கொள்ளவேயில்லை
செய்துவந்த தீமைகள்போக. தற்காலஞ்
செய்துவரு வதைதயை செய்துகேளுங்கள்
சாருங்கொற் றவன்குடியில் யாரோவொரு
சாமியாரைக் கண்டுமிக நேமமுடனே.

8. விறகளித்தே வருகின்றான் மனம்போன
விதமாகப் போகபெரு மதம்பிடித்தான்
விறகுவெட்ட வடிப்பான் எங்களை
விறகு தனையெடுத்து வீசியடிப்பான்
பேசுவா னொருநேரம் பேசாமற்
பித்தனைப்போற் சுற்றிபிர மித்துஅழுவான்.

9. தூக்கந்தன்னை மறந்தான் ஏதேதோ
தோணுதென் பானின்பங் காணுதென்பான்

சிவநாமஞ்சொல் லச்சொல்லுவான் சொல்லாவிட்டாற்
சிங்கம்போலே தாவிகண்க லங்கவறைவான்
மயானச்சாம்பல் பூசுவான் பலபல
மணியணிந்தான் வெள்ளைத் துணிபுனைந்தான்

10. அரகரவென்று பாடுவான் சிலநேரம்
ஆடிப்பாடிக் கூடிமகிழ்ந் தோடிச்சிரிப்பான்
வந்தபடிவாய் புலம்புவான் எங்களை
வாழ்த்திடு வான்பிறகு தாழ்த்திடுவான்
மாமிசந்தனைத்தின்னுன் தின்றவரை
வாயிலடிப் பானுண்ணுஞ் சேயையுதைப்பான்

11. கள்ளைக்குடிக்கமாட்டான் குடிப்போரைக்
கல்லாலடிப் பான்பேசிச் சொல்லாலடிப்பான்
இன்னும்பலவிதஞ் செய்கிருன் அதையெல்லாம்
எடுத்துச்சொல் லிடில்நாக்குக் கடுத்திடுமே
உங்களிடம்யாவு மொழிந்தோம் வந்தவனை
யொடுக்கியெங் களைப்போலே நடக்கும்படி.

12. செய்வதுவுங்கள் கடமை செய்யாவிட்டால்
சேரியிலி ருந்துதொழில் யாருமேசெய்யோம்
ஓடிப்போவோம் நாங்கள் உண்மையிது
உற்றதையு ரைத்திட்டோம் சற்று வாருங்கள்
அவசிய மிதுவென்றே பறையர்கள்
அடிபணிந் தார்தம் முடிதணிந்தார்.

விருத்தம்.

கூறுமிந்த மொழிகேட்டுக் கோபமாகி
  குறையிரந்த புலையருக்கு விடைகொடுத்து
சீறுபுலி யெனக்கிளம்பி சேரிவந்துத்
  தென்னைமரச் சோலையதிற் றிகழுமீசன்
பேறுபெற்றப் பெற்ருனைப் பேசியேசி
  பேரடியர் தொண்டியற்றும் பெருமைநீக்கி
மாறுபடப் புத்திசொல வாண்டையெண்ணி
மறுகினுர் சாம்பனிடங் குறுகினரே.

விருத்தம்.

என்னடாபெற்ருநீயு மியற்றிடுங்காரியங்க
ளின்னமும்விடுத்தாயில்லை யிவ்வணஞ்செய்வதேனே
துன்னுமோரடியவர்க்கு தொண்டுநீசெய்வதாகக்
கன்னமதனிலேகேட்டு கண்டிக்கவந்தேம்நில்லாய்.

வசனம்.

இவ்விதம், ஆண்டை கோபித்து சேரிக்குப் பக்கத்தில் இருக்கும் தென்னஞ் சோலைக்கு வந்து சாம்பனரைக்கண்டு, கூறவே, சாம்பனர், பணிந்து அஞ்சி தூரவிலகி நிற்கலானர், சாம்பனரைப்பார்த்து ஆண்டை புத்திமதி கூறுகிறார்.

இராகம்-ஆபோகி-தாளம்-ஆதி.

பல்லவி.

புலையா சிவனடியர்தனக்குத் தொண்டு
புரிவாயோ வீணாய்த் திரிவாயே அட (புலை)

அநுபல்லவி:

நிலையாக்காரியம் நீயினிசெய்தால்
நெரிப்பேன்கட்டிவைத்து வுரிப்பேன்நிசமிது (புலை)

சரணங்கள்.

விடியுமுன்மாடுகளை யோட்டு அதை
மேய்த்தும்மாலையிற்குளிப் பாட்டு வீடு
கடிதிலோட்டிதண்ணீர் காட்டு பாது
காத்திடுதீனியதைப் போட்டு அட (புலை)

மாரிகாலம் நீங்கிகோடை யாச்சு கொல்லை
மானம்பார்த்து மிகக்காய்ந்து போச்சு தண்ணீர்
ஈரங்கொள்ள வேற்றுவிட்டுப் பாச்சு போ
இதைவிட வேறுயென்ன பேச்சு அட (புலை)

வயிராறக்கஞ்சிவாங்கிக் கொள்ளு அரி
வாளலக்கு கொண்டறுப்பாய் முள்ளு அதை
கயிறூல்கட்டியே தூக்கித் தள்ளு வா
காசுதருகிறேன் குடி கள்ளு அட (புலை)

வசனம்

ஆண்டை சாம்பனரை யிப்படிக்கோபித்துக்கூறி தனது இருப்பிடஞ்சேர்ந்தார். பின்னர், சாம்பனர் மனம்வாடி புலையர்கள் செய்த தீங்கென்று நிச்சயித்து நாம் நாளையதினம் ஆண்டையைப்பணிந்து முறியோலையைக்கிழித்துத் தன் அடிமையை நீக்கிக்கொண்டு சற்குருநாதனுக்குத் தொண்டியற்றிட உத்தரவுகேட்டுக்கொண்டு வருவதே உசிதமென்று யெண்ணி மறுநாள்ஆண்டையினிடம் போகிறார்.

விருத்தம்.

அடியவர்தொண்டுசெய்யு மன்பனும்பெற்றான்சாம்பன்
அடிமையாய்த்தன்னைக்கொண்டவாண்டையினிடம்போய்நின்று
அடிபணிந்திறைஞ்சிதான்றன் னகக்கருத்துரைக்குமுன்னே
அடிமையாள்படிந்தானென்று வாண்டையும்பிதற்றுவாரே.

இராகம்-ஹம்ஸத்வநி-தாளம்-ஆதி.

பல்லவி.

பெற்றா-மதி-யுற்ற.தென்ன-சற்றே அதை முற்றுஞ்
சொல்லடா.

அநுபல்லவி.

கற்றவன்போலேதோ நிதம் நற்றவம்புரிந்து சாதிக்
குற்றவேலைசெய்யாதுநீ சுற்றித்திருந்ததை விட்டுப் (பெ)

சரணங்கள்.

பட்ட மரமாயிருக்குங் கட்டைகளை வெட்டுவாய்
வெட்டியே பிளந்ததனை கட்டுகட்டாய் கட்டுவாய்
கட்டித்தூக்கிக்கோயிலதைக் கிட்டியங்குகொட்டுவாய்
கொட்டியேபணிந்துகையைச் சட்டமாக தட்டுவாய்
கொட்டமொழிந்திட்டையா கெட்டுநிலைப்பட்டையா
இஷ்டம்போல்வந்திட்டையா கஷ்டம்பலபட்டையா
ஏதேது வுன்னைப்போலே
ஏதேதுபுவி மேலே

பட்டால் தெரிவானினப் பறையனென்ப தாச்சுதா
கஷ்டப்பட்டதெல்லாம்விழற் கிட்டதண்ணீ ராச்சுதா
வெட்டினவிறகுயெரி பட்டுகரி யாச்சுதா
இட்டுக்கொண்ட சாம்பலழிபட்டு வெள்ளை போச்சுதா
எண்ணிப்பாரடா இது திண்ணந் தேரடா எந்தன்
பண்ணைக்காரடா வயல் நண்ணிச்சேரடா இனி

நெற்றிவேர்வை நிலத்தினி லிற்றுவிழவேலை பாரு
சற்றுநேரங்கூடவீணைச் சுற்றாதேபணத்தைச்சேரு
உள்ளதையெடுத்துச் சொன்னாற் கடுப்போ புகை
யுற்றுயெரியா திருப்பதெங்கள் வீட்டு அடுப்போ

வண்டிகட்டி சாம்பல் கொண்டுவந்து வயல் கொட்டடா
கண்டங்கட்டளை வரப்பிரண்டையும் பு ரட்டடா
உண்டைச்சம்பா மாசூல்நெல்லு கண்டதுவோ மட்டடா
கொண்டகுத்தகை நிலத்தின் ஆண்டையதை வெட்டடா

கொஞ்சமேனு மிவ்வருஷம்
புஞ்சைநஞ்சை யாக்கவேண்டும்
சஞ்சலங் கொள்ளாமலிந்த
பஞ்ச காலம் நீக்கவேண்டும்

நெல்லுவிலை யேறிப் போச்சு
நல்லமழை யற்றுப் போச்சு
கொல்லையெல்லாங் காய்ந்து போச்சு
தொல்லை கொண்டிடவு மாச்சு

ஆனாலுந் தொண்ணூத்தாறு வேலி நீ
ஆட்களோ டிருந்து பரி பாலி இனி
நானுமில்லை யென்போனோடா கூலி நீ
நல்லவன் ஆனாலும் புத்தி சாலி

வேண்டியதெல்லா முனக்கு நான் கொடுக்கிறேன்
வேறுநிலமுங் குத்தகை நான் எடுக்கிறேன்
பட்டாநிலத்தில் பாடு பட்டால் நமக்குமினி
கட்டாமல் போகாதுநீ வொட்டாரம் பண்ணாதே
பட்டமரம் வெட்டிகஷ்டப் பட்டுவுழைத் திட்டுத்துன்பப்
பட்டுத் தவித் திட்டுழலைத் திட்டு தட்டு கெட்டுநீ

பத்திபண்ணி சாகாதே
புத்திகெட்டுப் போகாதே
சத்தியமாய் ஆகாதே
சித்தமிக நோகாதே

பயிர்த்தொழில் செய்தாலினி
உயிர்க்கஞ்சி கொள்ளலாம்
பாழும்பஞ்சம் வந்தாலும்
சுகமாய் காலம் தள்ளலாம் பெற்

வசனம்.

ஆண்டை சாம்பனைப்பார்த்து நாம் நேற்று கண்டித்து விட்டு வந்ததில் புத்திவந்து வணங்கி வேலைசெய்ய வந்து விட்டா

னென்று எண்ணி பிதற்றிய பின்னர், சாம்பஞர் இவைபெல்லாங் கெட்டு ஆண்டையைப்பார்த்து நயமாக வணங்கிக்கூறுகிருர்.

கண்ணிகள்

1. வயிற்றைவளர்க்குமிந்த வழிகளெல்லாமெனக்கு
மனதிற்படாது ஆண்டே
பயிர்த்தொழிற் செய்வதாற் பாபங்கள்விலகுமோ
பகுத்தறிந்திடும் ஆண்டே

2. பத்திவலையிற்பட்ட புத்தியுடையோரிந்தப்
பாரினிற் சூழ்வாரோ
முத்தியடைவதன்றி மித்தையமாயைதன்னில்
மூழ்கியே வீழ்வாரோ

3. மீண்ணில் வசித்திருந்தும் மாயையகன்றுவேருய்
மன்னுத லறியீரோ
எண்ணிச்செயுங்கரும மெல்லாமவனதென்று
எண்ணுதற் குறியீரோ

4. செய்பவனுமவனேசெய்விப்பதுமவனே
செய்திறம்நமக் குண்டோ
மெய்யனென்பதவனே பொய்யனென்பதவனே
வேறினிமெய் யுண்டோ

5. ரஞ்சித கவித்யாக ராஜன்பணியுநட
ராஜன் குஞ்சித பதமே
சஞ்சிதவினைதீர நெஞ்சினினைத்திட்டேன்
தருவாரெனக் கிதமே

வசனம்.

சாம்பஞர் இவ்விதம் கூறவே, ஆண்டைசாம்பஞர் மேற்கோபித்து இத்தனை நற்புத்தியும் உனக்கு ஏறவில்லையேயென்று பின்னும் கூறுகிருர்.

விருத்தம்.

பற்பலபுத்திதன்னைப் படும்படியான்பகர்ந்தும்
கற்பிதமாகவேதோ கண்டவன்போலுப்பேசி
விற்பனனுகநீயும் விளங்குகின்றனையேபோடா
அற்பனேவுனக்குமீச னருளதுகிடைக்குமோடா.

வசனம்

இதைக்கேட்ட சாம்பனுர் கூறும் ஆண்டே? தாம்சொன்ன துமெய்தான் ஈசன்றிருவருள் கிடைப்பது அரிதேயாம், மேலும், குருவருளாற்கிடைக்கும். ஆனதினல், யான் எழுதித்தந்திருக்கிறமுறியைக் கிழித்து என்னையடிமையினின்றும் விலக்கிநான் அடுத்த சற்குருவுக்குத் தொண்டியற்றும் வண்ணம் என்னைவிட்டருள்செய்வீரென, சாம்பனுர், ஆண்டையை உத்தரவு கேட்கிறுர்.

இராகம்-சௌராஷ்டிரம்-தாளம்-ஆதி.

பல்லவி.

ஆண்டேவுத்தரந் தாரும் ஏழைப்பறையன்
அருள்பெறவருள் கூரும்

சரணங்கள்.

1. மாண்டுமாண்டு நான் பிறந்து
மாய்வாழ்வினிற் சிறந்து
ஈண்டுழல்வதைத் துறந்து
இன்பமுற வாய் திறந்து(ஆண்)

2. முன்னம் நானெழுதித் தந்த
முறிகிழித்தே வா னந்த
வின்னருளையானுஞ் சொந்த
மென்றடைந்துதி ருந்த (ஆண்)

3. அரனடியாரின் மீது
அன்பொடு தவ ரூது
புரியுந் தொண்டைவி டாது
புரிய மகிழ்ந்திப் போது

வசனம்

சாம்பனுர் என்னை யடியவர் தொண்டியற்ற முறி கிழித்து விலக்கி யருளும்படி மன்ருடிக் கேட்டு பின்னர் அடியவர் பெருமையைக் கூறுகிறுர்.

இராகம்-உசேனி-தாளம்-ரூபகம்.

கண்ணிகள்

1. சாதுசங்கம பத்தி மார்க்கமே என்னுளுமீசன்
சரணகமலமதனிற் சேர்க்குமே

2. பாதம்பணிந்தாற் பவவி நாசமே செய்தேநமக்கு
பண்ணிடுவர்ஞானுபே தேசமே

3. தரிசனத்தினுற்ருபம் போகுமே சித்தத்தினின்று
தானென்றுவருமமதை யேகுமே

4. முத்தியெய்திடும் வழியைக் காட்டுமே சிவயோகந்தன்னில்
மோனந்தசுகந்தன்னில் நாட்டுமே

5. ஆண்டேயிவ்விதநானு மாகவே தயவுசெய்து
அருள்விடைதருவீரன் பாகவே

6. எந்தனுலுமக்கென்ன லாபமே எனையொழிக்க
ஏனுசெய்கிறீரா க்ஷேபமே

7. தொண்டுபுரியவிடையுந் தாருமே என்னுலேதைக்கு
தொல்லையணுகாது தேருமே

8. அடிமையாளெனையன்றி இல்லையோ வேறேவுமக்கு
ஆளில்லாமலேதுந் தொல்லையோ

வசனம்

இம்முறையாய்க் கூறின சாம்பனுரைப் பார்த்து அதிகக் கோபங்கொண்டு கூறுகிறுர்

விருத்தம.

சற்குரு சங்கம முனக்கு தகுமோ போடா
சாதிக்கு யேற்ற தொழில் தானேபாராய்
சற்குரு வுனக்களிப்ப தென்ன சாற்று
தவித்திடும் போதரைக் காசுந் தருவாரோடா
சற்குருவுன் றரித் திரத்தைத் தணிப்பா ரோடா
சாற்று மென்றன் வார்த்தையதைத் தவறலாமோ
சற்குருவினி டமினி நீ சார்ந்தா யானுல்
தண்டிப் பேன் உன்னைமிகக் கண்டிப் பேனே.

இராகம்-முகாரி-தாளம்-ஆதி.

பல்லவி

சற்கு சங்க மமா உனக்கு
சர்வமுஞ்சிவம யமா பெற்று (சற்)

சரணங்கள்.

1. சற்குருசங்கமம் சகலவேதாகமம்
தனையுணர்ந்தோர்களுந் தாமடையாரே நீ
தாழாதே நரகம் வீழாதே உந்தன்
சாதியைமறந்தாய் நீதியைத்துறந்தாய் (சற்)

2. சேரியிலிருந்து தீமைகள்புரியுநீ
திருவருளால்குரு அருளடைவாயோ அதை
சேராதே எண்ணிப் பாராதே உன்
சேரியும்நாசம் நேருமே மோசம் (சற்)

3. பறையனுக்குமடியர் பணிவிடையோடா
பாரிலிதையறிந்தோர் பரிகசிப்பாரே
பலிக்காது எண்ணம் கெலிக்காது யீனப்
பறையா எடா முறையிதுவோடா (சற்)

வசனம்.

ஆண்டை இவ்விதம் ஆரூச்சினத்தராய் சாம்பனுரைக் கண்டித்துவிட்டு விடைகொடுத் தனுப்பவே பின்னர், சாம்பனுர், ஆண்டைதன்னை துன்பப்படுத்தினதை யெண்ணியும், சற்குருநாதனுக்கு தொண்டியற்றுதலில், இடர்வருகிறதே. என்னும,ஏக்கத்தால், ஸ்ரீமந் நடராஜப் பெருமானைத் துதித்தவராய் தனதிருப்பிடம் வருகிருர்.

இராகம்-தோடி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

குஞ்சித பாதா என் நாதா (குஞ்)

அநுபல்லவி.

ஸஞ்சிதாதி பாபஹரண ஜடாமகுடசந்த்ர தரண

சரஹண ஜநகதயா பர
ஸாதுஜனப்ரிய புர ஹர
கரம்ருகதர கருண கர
கநக சபேசபராத் பர குஞ்

சரணம்.

பாம்பும்புலியும்பணியும்பாதா பாவைசிவகாமியாள்சமேதா
தீம்பையகற்றுந்தீனர்கள்தாதா சிதம்பரந்தனிலாடும்விநோதா

தினகர கிரணவி	லாசா
த்யாகனுக் கருளும்ந	டேசா
பனகா பரணப்ர	காசா
பரம மஹேசசர்	வேசா	(குஞ்)

வசனம்.

சாம்பனுர் இவ்விதம் ஸ்ரீமந் நடராஜப் பெருமானை வாயார வாழ்த்தி பிறகு தான் எப்போதும் போல் ஸ்ரீ உமாபதி சிவாசாரியாருடைய திருமடத் திற்கு விறகளிப்பதை விடாமற் ருெண்டியற்றுவா நாயினுர் பின்னர் சிலநாட் கழித்து சேரிப் புலையர்களிற் சிலர் சாம்பனுரிடம்வந்து கூறுகிருர்கள்

விருத்தம்.

ஆண்டையின் பண்ணைவேலை யடிமையாயிருந்துசெய்ய
வேண்டியநிலைமைவிட்டு வெறிபிடித்தவனைப்போலே
தாண்டிநீபேசியின்னுந் தவிக்கிருயினிமேலாண்டை
தீண்டியே வுனையடிக்கச் செய்கிறேம்பா ராயின்னே.

வசனம்.

என்று பறையர்கள், சாம்பனுரைக் கண்டு ஞாயஞ் சொல்லிக் கொண்டிருக்குங் காலத்தில் ஆண்டையானவர் பெற்ருன்நிலமை யெவ்வா றிருக்கிறது பார்த்து வருவோ மென வருகிருர்

விருத்தம்

தொண்டினைச்செய்தேவாழுந் தூயவர் அன்புதன்னைக்
கண்டறியாதவாண்டைக் கருதிப்பெற்ருனேக்கம்
விண்டுநாம்பார்ப்போமென்று விரைந்தவர்வந்தேநோக்க
மண்டியபுலையர்சூழ மத்தியிலன்பர்நின்ருர்.

வசனம்.

ஆண்டைவந்து பறையர்களோடு நிற்கும் சாம்பனுரைப்பார்த்து பெற்ருு? புத்தி நிதான முற்று என் பண்ணை வேலையை இனி பார்க்க மாட்டாயா வென, சாம்பனுர் கூறுகிருர்.

விருத்தம்.

எத்தனைநா ளோவடிமை யாயிருந்து வுழைத்திட்டே
னினியென் னுலே

மெத்தமன நொந்துபுவி தனிலிருந்து வாழ்ந்திருக்க
வேலா தாண்டே
இத்தருண மெனதடிமை முறிகிழித்து யெனைவிடுத்தா
லின்னே சென்று
பத்தியொடு யென்குருவின் பதம்பணிந்து பரமடையப்
பணிசெய் வேனே

வசனம்.

இதைக் கேட்ட ஆண்டை சாம்பனார்மீது கோபித்துக் கொள்ளுகிறார்.

இராகம்-சுருட்டி-தாளம்-மிசிரம்.

பல்லவி.

புலையா அடே
புலையா யீனப்
புலையா அடிமைப்
புலையா புலையா புலையா புலையா (அடே)

அநுபல்லவி

நிலையாக்காரியந்தனை நீயினிசெய்திட்டால்
நெட்டித் தொழுவத் திட்டுனை
கட்டிய டிப்பேன் கட்டையி

சரணம்

கெட்டகாலமும் வந்திட்டதோ வடிமைப்
பட்டதைநீயு மறந்தாயோ நிகச்
ச்சட்டமினியுந்தன் கொட்டமடக்கின்றேன்
திட்டபதித்யிற் சிறந்தாயோ எல்லாம்
விட்டுவாழ்வினைத் துறந்தாயோ நீமேன்
பட்டகுலத்தினிற் பிறந்தாயோ போதும்
இட்டமாயுனக்கு விட்டவென் சொல்லையே
இப்போதேவிட்டுநீ சொல்வா யேன் தொல்லையே

வசனம்.

ஆண்டையிவ்வாறு பேசி உத்தமபத்திமானை சாம்பனாரை புடைப்ப அடியுண்ட சாம்பனார் கண்ணுங் கண்ணீருமாக நின்றுபயந்து கூறுகிறார்.

சலன் வரிகள்.

இராகம்-பந்துவராளி-தாளம்-சாபு

1. என்னையடிப்பதனு
லென்னபயனுமக்கு எந்தனுண்டே இது
என்னையடித்த தாமோ
ஈசனையடித்ததே எந்தனுண்டே

2. இன்பமும் துன்பமு
மெதுமெனக்குண்டோ எந்தனுண்டே நல்ல
அன்பினுக்கிடுபடு
அடியேனுக்கொன் றுமில்லை எந்தனுண்டே

3. பத்தர் படுந்துயரம்
பரமனுக்கேயறிவீர் எந்தனுண்டே உங்கள்
சித்தமதி லிதை
நிச்சய மெண்ணுவீர் எந்தனுண்டே

4. ஆண்டையடித்தா லிந்த
வடியைபட லாகாதோ எந்தனுண்டே இனி
நண்டெனக்கேதுமில்லை
யெல்லாமீசன் செயலே எந்தனுண்டே

5. விட்டமனைக் கொல்லையை
விட்டெனைப் போகச்சொன்னீர் எந்தனுண்டே யுகம்
எட்டாறு மிருக்க
மனைக்கொல்லை யெனக்குண்டு எந்தனுண்டே

வசனம்.

அடியுண்ட சாம்பனர் இவ்விதங் கூறினதைக்கேட்ட ஆண்டை கூறுகிருர்.

விருத்தம்

நினைக்குமுன்னே யுந்தனிரு கண்ணின்மிக்க
நீர்ப்பெருக்கங் காட்டுகின்ருய் நீலிபோலும்
எனக்கடிமை வேலைசெய மாட்டேனென்று
வேதேதோ பாசாங்கு வியற்றுகின்ருய்

மனைக்கொல்லை யதனைவிட்டுப் போடாவென்றான்
 மனைக்கொல்லை வேறுயெனக் குண்டுயென்று
யுனக்கேது மனைக்கொல்லை யுண்மையாக
 வுரைத்திடுவா யதன்விபரம் விரித்திடாயே.

வசனம்.

இதைக்கேட்ட சாம்பனார் தன்னை ஆண்டை அடித்ததைமறந்து ஆனந்தபரவசமுற்று உள்ளங்கனிந்து தனதாண்டையை நோக்கிக் கூறுகிறார்.

இராகம்-எதுகுலகாம்போதி-தாளம்-சாபு

பல்லவி

தில்லங்காட்டினிடு எல்லையிலென்மனைக்
கொல்லை யொன்றுண்டு ஐயே (தில்)

அநுபல்லவி.

இல்லையெனக்கிட மென்றாண்ணுதீராண்டே
இப்போதேபோகின்றே னென்றும்வரே னீண்டே (தில்)

சரணங்கள்.

வெட்டவெளியதில் வேறொன்றுமில்லையோர்
 விருட்சமொன்றுண்டு ஐயே
மேதினியிலது சேத்திரமென்பர்
 மிகவுஞ் செழித்தது ஐயே
வெட்டவுமுறிக்கவு மேலாது பூமியிற்
 வித்தின்றி முளைத்தது ஐயே
மெலியாது பட்டுப்போகாது நாளுக்குநாள்
 மென்மேல் வளரும் ஐயே (தில்லை)
மெல்லியதாம் பச்சைவல்லி யொன்றுசுற்றி
 மேவிப்படருது ஐயே
மெய்யாய் மூவாயிரர் கூடிதினந் தண்ணீர்
 விட்டுவளர்ப்பார் ஐயே
சொல்லுமதிவந்துலாவ வுயர்ந்தது
 தோன்றின தன்று ஐயே
சோபதாபமதைநீக்கு நிழல்தந்து
 சுகந்தருஞ் சொன்னேன் ஐயே (தில்லை)

பாழாமரமதிலேபழுக் குங்கனி
பத்தருக் கன்றி ஐயே
புரிவுடன்றின்னக் கிடைப்பதரிதகைப்
பார்க்கத்தகாது ஐயே
வீழுஞ்சனன மரணநோய் போக்கிடும்
வினையெதுந் தீரும் ஐயே
விண்ணவருண்ணாத தண்ணங்று கனியின்சீர்
விளம்ப வொண்ணாது ஐயே (தில்லை)
அம்மரமோங்கி வளருமென் கொல்லையை
யானும டைந்து ஐயே
அக்கனியைப் பறித்திட்டுப் புசித்திட்
டகமகிழ் கொள்வேன் ஐயே
இம்மையிலே சுகம் பெற்றுமறுமையி
லின்ப மடைவேன் ஐயே
எந்தனுக்குச்சொந்த கொல்லையில்லை யென்று
எண்ணிட வேண்டாம் ஐயே தில்லை)

வசனம்

இவ்விதம் தில்லைக் கனகசபையின் விஷயத்தைச் சாம்பனார் எடுத்துக் கூறவே, ஆண்டை மிகுந்த கோபங்கொண்டு சாம்பனாரைப் பார்த்துக் கூறுகிறார்.

இராகம்-மோகனம்-தாளம்-மிசிரம்,

பல்லவி.

பெற்றாவுந்தன்சாதிக் குற்றநைதவிட்டென்றறன்
பேசுகின்றாயே போடா அடே அடே (பெ)

அநுபல்லவி.

நற்றவம்புரிந்திடும் ஞானியைப் போலே
நண்ணி வீண்வேலையைப் பண்ணிமென் மேலே
கற்றவன்போலநீ வீணாசை யாலே
கதறுகின்றாயென்ன காண்பாயித் தாலே (பெ)

சரணங்கள்.

1. ஈனப்புலையருக்கு ஞானப்பதமென்றா
லெவரும் வைவாரிது தீது யாரும்

மானம்விட்டு அவமானங் கொள்வாருண்டோ
மானிலந்தன்னில்நீ ஓது பெரும்
ஆனமதப்படி வழகாகும் நாய்மத
மானுலழகதற் கேது நல்ல
கானக்குயிலெனக் காக்கைதானெண்ணியே
கத்திடில்நிகராயா காது உந்தன்
கருத்தென் றும் நிலைத்திடே ரூது உடலை
வருத்தா தேயென் சொல்தப் பாது
உண்மை யீதீ
கேளிப் போது அட (பெ)

2. நீற்றை யள்ளியுந்த நெற்றியிற்பூசினு
னெறியையுணர்ந்தனே யோடா எனையே
மாற்றிபத்திருமுறைச் சாற்றிடிலென்மனம்
மாறியுன்வசப்படு போடா தின்னுஞ்
சோற்றுக்குங் கூரையின் கீற்றுக்கும்வழிதேடுங்
தொல்லையுனைவிட்டு தோடா எனக்கு
மாற்றுக்குத்துணியில்லை வாங்கித்தா வென்றிடும்
மனையைவிட்டாயோ போடா இந்த
வழக்கத்தைவிட்டல்ல வோடா பத்திப்
பழக்கத்தைக்கொளவேண்டு மூடா
சொன்னூற் பாடா
இது ஏடா அட (பெ)

3. மாட்டினானை நெருப்பில்வாட்டிச் சமைத்திட்டு
வயிறுரத்தின்பதை விடுவாயோ மேயும்
ஆட்டைத்திருடியே வீட்டிற்குள் வந்ததை
யாக்கியுண்பதையொழித் திடுவாயோ வீரைக்
கோட்டைநெல்லைத் தூக்கிக்கேட்டோர்க் களித்துக்கள்
குடிப்பதைவிட்டுநீ கெடுவாயோ உந்தன்
பாட்டனுண்டையவர் வீட்டுப்பண்ணை வயலிற்
பயிர்செயமாட்டேனென் றிடுவாயோ நீயும்
பறச்சேரிதனிலிருந் திடுவாயோ அன்பின்
றிறச்செயலதில்வழிப் படுவாயோ
பிழைத் திடுவாயோ
தப்பித் திடுவாயே அட (பெ)

### வசனம்

ஆண்டை யிவ்வாறு சாம்பனாருக்குப் புத்தி கூறவே இதனை யெல்லாந் தெரிந்து கொண்டு சாமபனார் ஒன்றும் பேசாமல் நிற்கவே ஆண்டைதன் திருமாளிகை யடைந்தார் பின்னர் சாம்பனார்தான் எப்போதும்போலவே சிதம்பராலயத்திற்கு விறகளிப்ப ஈசனாலளிக்கும் இரண்டு பணத்தைக் கொண்டு தன தில்லறத்தை தும்நடாத்திகொண்டு ஸ்ரீஉமாபதியார் திருமடத்திற்கு விறகளிப்பதையும்விடாது தொண்டு செய்துகொண்டுவரு நாளில்ஓர்நாள் மனதில் தனக்கு குருதரிசனம் கிடைக்கவில்லையேயென்றும்இத்தனைநாள் திருத்தொண்டு செய்தும் ஈசனுக்கு மனமிரங்க வில்லையென்றும் ஆண்டை நம்மைமுறிகிழித்து தொண்டு செய்யவிடாமல் துன்பஞ்செய்கிறாரே யென்றும் வருந்துகிறார்.

இராகம்-ஹரிகாம்போதி-தாளம்-ஆதி.

### கண்ணிகள்.

1 இன்னந்துன்பங்கொள்ளவிட்டா
லென்னசெய்குவேன் ஏழை
பொன்னம்பலவாணா அருள்
புரிந்திடாயோநான் ஏழை (இன்)

2. எத்தனைநாளாயுழைத்தும்
எதுங்காணேனே ஏழை
பித்தனிலும் பித்தனான
பேதையல்லவோநான் ஏழை (இன்)

3. உள்ளந்தனிலுன்னையன்றி
யுன்னவறியேன் ஏழை
கள்ளங்கொண்டேனல்லேனென்னைக்
காக்கலாகாதா நான் ஏழை. (இன்)

4. பாழும்பறச்சாதியென்று
பாராமுகமா ஏழை
ஆழும்நரகத்திலாழ்ந்து
அவதிகொள்ளேன்நான் ஏழை (இன்)

5. மேலுமாண்டை முறிகிழித்து
விட்டபாடில்லை ஏழை
காலனைப் போற்றீறி யென்னைக்
கண்டிக்கவிட்டாய்நான் ஏழை (இன்)

6. குருவைக் கண்ணாரக்காண
கூடவில்லையே ஏழை
தருமமோ உனக்கிது
தஞ்சமானேனே நான் ஏழை (இன்)

7. உன்செயலல்லாமல் வேறு
ஒன்றுமில்லை ஏழை
என்செயலா லாவதுண்டோ
ஏதுமில்லையே நான் ஏழை (இன்)

வசனம்.

சாம்பனார் இவ்வாறு வருந்திபின்னர்தனக்குத் துன்பங்கள் யாவும் நீத்து எனக்கு சற்குருவினருளால் நற்கதி சேர்த்தருளு வாயென்று ஸ்ரீமந்நடராஜ மூர்த்தியை, பலவாறு தோத்திரம்பண்ணுகிறார்.

இராகம்-தனாசரி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

சபாபதியின் குஞ்சிதபதம்
சதாத்யானமே செய் மனமே (சபா)

சரணங்கள்.

அபராபவ நேமி நாசம்
அகற்றிடு மீனகர்ப்ப வாசம்
தபாதிகளினாற்ப்ர யாசம்
சார்வது வீணா யாசம் (சபா)

ஆணவங் கர்ம மாயை நீங்கும்
ஆனந்த வெள்ளம் பொங்கி யோங்கும்
தோணு மவித்தைத் தொடரா தேங்கும்
துன்பந் தனித்து யெங்கும் (சபா)

பாடு தருமே குடும்ப வ்யசனம்
பட்டுந் தினமு முண்ணு மசனம்
தேடி யொன்றிலே தேவத ரிசனம்
செய்க வென்பதுத்யாகன் வசனம் (சபா)

இராகம்-தோடி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

செந்தாமரைப் பாதா
வந்தாளவொண் ணுதா . (செந்)

அநுபல்லவி.

அந்தாமரைக் கண்ணன் கண்ணை
யலரென வருச்சனை புரிந்திடுஞ் (செந்)

சரணங்கள்.

கொன்றைதும்பை யணிந்த வாசா
கோதிலா சோதிப்ர காசா
மன்றுணடனமாடுஞ்ச பேசா
மலரயன் பணிந்திடுஞ்சர் வேசா (செந்)

பாம்பு புலிக்குவருளும் நாதா
பாவை சிவகாமியாள்ச மேதா
தீம்பை யகற்றியருளுந் தாதா
திருவாதவூரர்பணியும் போதா (செந்)

ஏகமாகிநின்ற சீலா
எத்தும்மறையின்பொருளே மூலா
த்யாகராஜனுக் கனு கூலா
தேவர்கள் யாருந்தொழும்வி லோலா

இராகம்-யமுனு-கல்யாணி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

சிவசிவசிவ சங்கரசிவ தில்லையம்பலவாணு (சிவ)

சரணங்கள்.

பவவாரிதி நீக்குந்த யாளா
பாவைசிவ காமியாளின்ம ணுளா
தவத்தோர் தினந் தாழ்ந்திடுந் தாளா
தமியேற்கருள் புரிவாய் (சிவ)

சோமனைச் சோதிமுடியிற் றரித்த
சுந்தரா யானைப்புலியை யுரித்த.
ஏமச்சபையி லாட்டைப் பரித்த
ஈசனே வந்தருளு வாய் (சிவ

யோகியர்யாருக்கு முற்றச காயூ
உத்தமவேத முரைத்த வாயா
த்யாகராஜனுக் கருள் நேயா
சிறியேனை வந்தாள் வாய். (சிவ)

இராகம்-மத்யமாவதி-தாளம்-ஜம்பை

பல்லவி

ஏழையென்மீ தினக்கு
இன்னுந் தயவில்லையா (ஏழை)

அநுபல்லவி

பாழான மாயை வசப்
பட்டுழல்கின்றே னந்தோ (ஏழை)

சரணம்

பாலனொருவனுக்காக காலனையுதைத்து அநு
கூலம்நீ புரிய வில்லையா
பத்தாறுபத்து மூவர்க்கருள் செய்தேயவர்கள்
பாசவலை நீக்க வில்லையா
மாலுக்கருள் செய வில்லையா
வந்தருள் மிகத் தில்லையா
பானுக்கழும் பாலகனை
பாது காப்பது மில்லையா (ஏழை)

இராகம்-அடாணா-தாளம்-ஆதி.

பல்லவி.

ஜாலம்செய்வது தர்மமா கதியாதுமில்லாத்
தமியேன்மீதின்னும் வர்மமா (ஜா)

அநுபல்லவி:

சீலபக்த பரி பாலசிவகாமி
லோலவாலமுண்ட நீலகண்டசிவ
காலகால மறை மூலசத்குணவி
சாலவானந்த கோலநடேசனே (ஜா)

சரணங்கள்

ஈசாஸ்ரீசிதம்பர வாசா ஜோதிப்ர காசா
பாசாகர்ம விமோசனா பாலலோசனா

மாசிலாதமலர் வாசவனுேடரி
கேசவனும்பணி தேசுகொண்டுவொளி
வீசுநவமணி விலாசசபேசகை
லாசவாசத்யாக ராஜன்தொழுமீசனே (ஜா)

இராகம்-தன்யாசி-தாளம்-ஜம்பை

பல்லவி.

யாதாரவிந்தமதை
பாவியெனக்கருள்வாயே (பாதா)

அநுபல்லவி.

வேதாகம மர்தி யுணர்ந்
தோதமுடி யாதவுன்றன் (பாதா)

சரணம்.

பத்திசெயும்வழியறியேன் பகருமறைமுறை குறியேன்
பாதகனுயானெங்கும் பாரிலினி திரியேன்
சத்திசிவகாமியொடு சபையில்வளர் தாண்டவனே
தண்டமிழிறைல்த்யாக தாசன்பணி யாண்டவனே(பா)

இராகம்-அம்ஸத்வநி-தாளம்-ஆதி

பல்லவி.

ஏனிந்தபரா முக மென்மீதையா
ஏழையிலுமிக ஏழையானல்லவோ (ஏனி)

அநுபல்லவி.

ஆனந்தசபா நடனவி லாசா
ஆதிமத்யாந்த ரஹிதப்ர காசா (ஏ)

சரணம்.

சாம்பவி சமேத சர்வலோக நாதா
ஸஜ்ஜன பரிபா லனவி நோதா
பாம்பணிந்த தேகா பரமவை போகா
பத்தருக்களித்துப் பாலித்திடுந் த்யாகா (ஏ)

இராகம்-ஆபோகி-தாளம்-ஆதி.

பல்லவி.

ஈசா அபயம்
இதுவே சமயம் (ஈசா)

அநுபல்லவி.

பாசாடவியில் பாடடைந்து நானே
பதைக்கின்றேனங்தோ பாதுகாருங் கோனே

சரணம்.

ஜோதிஸ்வப்ர காசா சுகிர்தபத்த தாசா
சோபதாப நாசா ஸ்வர்ணச பேசா
ஆதிமத்யாந்த ரஹிதா பர மேசா
அத்புதாகராநந்த கரா ந டேசா (ஈ)

இராகம்-வஸந்தா—தாளம்-ஆதி.

பல்லவி.

பராத்பரா சத்தி
பார்வதி ரமணா (பரா)

சரணம்

நிராமயா அதி நிர்மல ரூபா
நித்யாநந்தவை போகப்ர தாபா (பரா)

சத்வகுணாகர சந்த்ரஜடாதர
பக்தமனோகர பரமசிவசங்கர (பரா)

வேதாகம மூலா விண்ணவர்க்கநு கூலா
மாதவன்பணி சீலா மங்கைபாகத்து லோலா (பரா)

இராகம்-முகாரி-தாளம்-ஆதி.

பல்லவி.

எப்பொழுதெனக்கருள்வா யம்பலவாணனே (எப்)

அநுபல்லவி

மைப்படியும் நீலகண்டா மாதுமை பங்கா
மாயவாழ்விலெனைத் தோயச்செய்திடலாமா

சரணம்.

பந்தபாசமாகும்கிர்ப் பந்தத்திலகப்பட்டு
பாபம்புண்ணியமெனும் பகுத்தலைமறந்திட்டு
சிந்தையிலுனைமறந்து தீமையிலே சிறந்து
திரியுமென்மனம்வந்து சிற்பொருளாயமர்ந்து எப்)

இராகம்—அடாணு—தாளம்—ரூபகம்.

பல்லவி.

காலன்வந்தே வுயிரைப் பற்றக்
காட்டிக்கொடாதீ ரீசா நடேசா (கால)

அநுபல்லவி.

பாலன்மார்க்கண்டனைப் பற்றினபோதுநீ
படி யதில் விழ வுதை தர வுயி
ரது பெற வரு ளிய புர ஹர (கால)

சரணம்

கட்டாரி கத்தி யீட்டி கதைவேலும்
வெட்டரிவாளும் நீட்டி
கொட்டங்கள் செய்துமே பட்டாளமாய் பல
கொடி தடி படையொடு விரை வொடு
பட பட வென பிடி அடி யென (கால)
தீயெனச் செவ் விழியும் இடித்
திட்டதைப் போன் மொழியும்
வரையைப்பிளந்து வருந்தூத ரெந்தனை,
வதை யுதை சதை சிதை யென விழி
யது பொறி தர கடு கடு வென (கால)

இராகம்—அசாவேரி—தாளம்—சாபு.

பல்லவி.

காலன்வந்தே வுயிரைக் கைப்பற்றுவானே அந்த
காலத்திலென்ன செய்வாய் மனமே (கா)

அநுபல்லவி.

ஆலமுண்டோனது அடியவனுகிய
பாலன் மார்க்கண்டனையும் பற்றவந்தகொடுந் (கா)

சரணம்.

சாதியிலுயர்ந்தவன் சாத்திரமுணர்ந்தவன்
தக்கவனென்று சொன்னல் விடுவானே
மேதினிதனில்மிக்க யாதியுடையவன்யான்
மெத்தவினையனென்ருல் விடுவானே (கா)

மாடிவீட்டினில்வாழும் கோடீசுவரன்மிக
மாபணக்காரனென்றால் விடுவானோ
ஈடில்லாபுஜபலத் தோடுள்ளவன் றுஷ்ட
னென்பாரென்னை யென்றாலும் விடுவானோ (கா)
ஏழையாரினுமிக யேழையானவனுண்ண
வேதுமில்லையென்றாலும் விடுவானோ
கோழைநெஞ்சினனன்றல்ல குலத்திற்பிறந்தவன்
குணமுடையானென்றால் விடுவானோ(கால)
சித்தசனையொத்தச் சீரழகுமுகத்
தேசுடையானென்றாலும் விடுவானோ
புத்தியிற்சிறந்தவன் பூவுலகத்தோர் மெச்சும்
புகழுடையானென்றாலும் விடுவானோ(கால)
தாண்டவமாடிடும் ஆண்டவன்றன்னடி
தாழ்ந்திடும்பத்தனென்றால் தொடுவானோ
வேண்டியவாறளிக்கும் விமலனருள்பெற்ற
வித்தகனென்றால் கிட்டெ வருவானோ (கா)

வசனம்.

சாம்பனு ரிவ்வாறு பத்திவயத்தராய் நின்று தோத்திரம்பண்ணியும் உமாபதி சிவசாரிய சுவாமிகளுக்கும் சிதம்பராலயத்திற்கும் விறகுத்தொண்டை விடாது செய்தும் ஈசனுலளிக்கும் இரண்டு பணத்தைக்கொண்டு தனதில்லறத்தை நடத்தியும் வருகிறபோது ஒருநாள் காலையில் மிகவருந்தினராய், ஆண்டையானவர் நம்மை முறிகழித்து நீக்கி சத்கதி யடையும்வண்ணம் விடமாட்டேனென்று துன்பப்படுத்துகிறாரே யென ஸ்ரீமந்நடராஜமூர்த்தியைத் துதிக்கிறார்.

அகவல்.

தில்லையில் வாழுந் தேசிக மணியே
எல்லையில் லாத விமையவர் கோனே
ஆரண வாகம மறியவொண் ணாத
காரண யெந்தன் கருத்ததி னுள்ளே
அங்கியிற் சூடா யபிமன்னமா யமர்ந்து
தங்கிய சிவமே சகமதில் வாழும்
ஒவ்வோ ருயிரி னுள்ளத்திற் றங்கி

அவ்வவ் வுயிரை யாட்டிவைத் திடுநீ
குறித்தெனை யடிமை கொண்டவென் ஞண்டை
மறுத்தெனைப் பேசு மனத்தினை மாற்றி
சமாதி யோகஞ் சார்ந்திடு மெந்த
னுமாபதி யார்க்கு மோதுமீ சற்கும்
கொண்ட வுன்றன் கொள்கையிடேறத்
தொண்டினை விடாது தூயநல் லன்பால்
நிதந்தவ றாது நீபுரி யென்னும்
பதந்தரும் வாக்கைப் பகருமா ரருளே
பொன்னம் பலத்திற் போற்றியென் றெவரு
முன்னம் பதத்தை யுளமதி லெண்ணி
மாலய னேடு வானவர் யாருங்.
காலங்க ளாறுங் கண்டு தரிசனம்
பண்ணிடு மவரைப் பாலித்து வவர்க
ளெண்ணிய படிநீ யீய்ந்திடுந் தருவே
முக்கண் ணுடையோய் மூடனு மென்னை
இக்கணம் பார்த்து வின்னருள் செய்மின்
நின்செய லன்றி நீளுலகந் தனி
லென்செய லாலே யெதுவு மாகாதே
போற்றி வுன்சரணம் போற்றிவுன் னருளே
போற்றி வுன்னுருவே போற்றி போற்றினனே.

வசனம்

மெய்த்தொண்டரான சாம்பனர் இவ்வாறு ஸ்ரீமந்நடராஜ மூர்த்தியைத் துதித்தவராய் பழக்கம் போலசிதம்பரா லயத்திற் கும் உமாபதி சிவாசாரியா ருக்கும் விறகளித்து வருவாராயினர் இதனை யோர்ந்த எல்லாம் வல்லமுழு முதற் கடவுளான ஸ்ரீமந் நடராஜ மூர்த்தி தனதன்பரான பெற்றானுக்கு இன்னருள் பாலிப்பான் பொருட்டு தண்ணருள் சுரந்து ஓர் நாள் அவ்வெள்ளாழருடைய கனவிற் றோன்றி கூறுகிறார்.

விருத்தம்.

எமதன்பன் பெற்றானை முறிகிழித்து வடிமையினி
லிருந்து நீக்கி
நமதடிய ரானவுமா பதியார்க்கு நமக்குமினி
நாள்க டோறு

மைவுறு நற்றிருத் தொண்டை யியற்றும்வணம்
விட்டிடுதி யவனல்நீயுன்
மமதையற நற்போதம் பெற்றிடுவா யென்றரனு
மறைந்திட்டாரே

வசனம்.

ஈசனிவ்வாறு வெள்ளாழனுக்கு சொப்பனம் சாதித்துமறை யவே வெள்ளாழன் கண்விழித்து மெய் சிலிர்த்து படபடத்து தன்னை மறந்து வாயுளறி யெழுந்திடவே பொழுதும் விடிந்தது ஆண்டையான வெள்ளாழன் ஓர் நீசனுக்காக ஈசன் நம் கனவில் வந்து இவ்வாறு சொல்ல நேர்ந்தால் அப்பெற்றானுடைய பெருமை யார் காணவல்லா ரென்று அஞ்சி பின்னர் பெற்றானைக்கண்டு வணங்கி ஈசனருளியவிதம் செய்வதே முறை யென்றுன்னினவராய் பெற்றான் எழுதித் தந்திருக்கும் முறி யோலையைக் கையில் வகித்தவராய்வாயாற்புலம்பி பெற்றான் வசிக்கும்சேரியைநாடிஓடி வரும்போது வயல்களில் வேலைசெய்து கொண்டிருந்த பறையர்கள் ஆண்டையோடி வருவதைக் கண்ணுற்று அவ ரவர்களும் வேலையை விடுத்து ஆண்டையின் பின் றொடர்ந்து வந்தார்கள் சாம்பனார் அச்சமயத்தில் திருத்தொண்டு செய்யும் பொருட்டு நல்ல விறகுகளைப் பார்த்து வெட்டிக்கொண்டிருக்கும்போது ,,ஆண்டையானவர் சாம்பனாரைக் கண்டு விரைந்தோடி தடிவீழ்ந்தாற் போலும் சாம்பனாரது பாதத்தில் வீழ்ந்து பணிந்து வாயாற் புலம்பி கூறுகிறார்.''

விருத்தம்.

சிவனடிக் கன்பா வோலம் திருத்தொண்டிற் சிறந்தாயோலம்
அவனெறி நீத்தோ யோலம் அரனருள் பெற்றா யோலம்
தவமதிலுயர்ந்தோ யோலம் தாணுவையறிந்தோ யோலம்
பவக்கடல் விட்டோ யோலம் பத்தனே வோலமோலம்.

அடிமையா யெனக்கிருந்து ஆளவந்தரே வோலம்
படியினிலெவரும் போற்றும் பதந்தனை யடைந்தோயோலம்
முடிவினையுணர்ந்தோ யோலம் முத்தனே குருவே வோலம்
கொடியவாழ்வினைத் துறந்த கோதிலாப் பெரியோ யோலம்

பற்பலநாடம்மோடு பழகியுநாயேனுந்த
னற்புதச் செயலைக்காணு தறிவிலியானேனந்தோ
தற்பரனருளை வாய்ந்த சத்துவகுணத்தோ யேழை
யற்பனுமென்னைகர்த்து வருள்புரிந் திடுவீரையா.

வசனம்.

இவ்வாறு ஆண்டை சாம்பனாருடைய இரு பாதபங்ய யங்களைப் பிடித்துக்கொண்டு வாயாற் புலம்பி கண்ணீர் மல்கி பின்னுங் கூறுகிறார்.

ஆனந்தக் களிப்பு

பெற்றாரீசிவ ஞானி உந்தன்
பைருமையறியாமற்போனேனஞ்ஞானி (பெற்)

நீசனாய்நீயிருந் தாலும் சைவ
நெறிகொண்டவெள்ளாழனானே யானாலும்
ஈசனறியமுக் காலும் நீ
என்னைப்பார்க்கினுமேலோனெனச் சாலும் (பெற்)

சைவகுலத்தினிற் பிறந்தேன் சிவ
சமயநெறியென்பதனை யுள மறந்தேன்
ஐவர்வழியதிற் சிறந்தேன் அந்த
அமலனடியடையும் வழியதைத் துறந்தேன் (பெற்)

ஆணவமேவுரு வாகி சற்றும்
அறிவில்லாதவீனமடையனா யாகி
மாணடையாத் துர்வி வேகி யானேன்
மண்டலந்தன்னில் நீயேகண்கண்டயோகி (பெற்)

மனைவிமக்களாசை கொண்டு பண்ணை
வயலைத்தெய்வமென மனமும ருண்டு
கனவிலு மீசனைக் கண்டு கொள்ளக்
கருதாமற்போனேனென்னைப்போலெங்குண்டு (பெற்)

உந்தனுக்குநீயே யீடு வீணா
யுழைத்ததெல்லாம்பாழாயிற்று பாடு
பந்தத்தால்வந்ததிக் கேடு செய்த
பாவத்தைவரைந்திடவுண்டோவெள்ளேடு (பெற்

விருத்தம்.

கொடியதோர் மாயையென்னுங் குகையதிலடங்கியானும்
படியதிலுள்ளபொன்னும் பாவையும் மண்ணுமெண்ணி
மடையனுய்ப்போனேனுன்னை மதிக்கிலேன் பாதவத்தோ
யடிமைநியல்ல யானுன்னடிமை சொல்வதனைக்கேளாய்.

வசனம்

ஆண்டை யிவ்வாறு வாய்புலம்பி அழுதரற்றிடவே, சாம்பனூர். அஞ்சி ஆண்டை வணங்காமுன் வணங்கி யொன்றுந்தோன்ருதவராயிது ஈசன் செயலோவென்று வோர் பக்கமொதுங்கி நிற்கவே சாம்பனுரைப்பார்த்து பின்னுமாண்டை வணங்கிக்கூறுகிருர்.

இராகம்-எதுகுலகாம்போதி தாளம்-ஆதி.

கண்ணிகள்

வினையமறியா வெள்ளாழன் யான்,
மெய்யறியே — னையா
கனவிலும்நீர்பத்திமானென்று வுளத்தினிற்
கருதிலேன் யான் — மெய்யா

சாம்பனுர்.

பூமியையாளும் புண்ணியர்களுக்குப்
பொருத்தமிது — வாண்டே
தாமிந்தப்புலையனைத் தாழ்ந்திடலிந்தத்
தரணியிகழு — மாண்டே.

ஆண்டை.

எத்தனைகுற்றங்க ளிழைத்துயான் திட்டினே
னிதையெலாம் பொறுப் — பீரே
சித்தமதில் வருத்தங் கொண்டிடவேண்டாந்
தெரிந்தருள் செய் — வீரே

சாம்பனுர்.

ஆண்டைநீரையே அடிமையானையே
யாது வருத்த — மாண்டே
வேண்டியெனதுபதம் வீழ்ந்திடலாமோ
வேண்டாம் பழி — யாண்டே

வசனம்

இவ்வாறு ஒருவர்க்கொருவர் வணங்கிப்பேசிடவே சாம்பனரைப்பார்த்து ஆண்டை கூறுகிறார்.

பதம்.

பெற்று பெரியவரென்பது நீரே என்
பிழைபொறுப் பீரே (பெற்று)
அரியயன் றனக்கு அரியவ னும்
அவனடி யாரது அன்பதி னும்
புரியும் பணிவிடை யாலும்
புவியிலெக் காலும்
புகலலா மேலும் பெற்று (பெரி)
ஈனமதாக விழுந்தனன் புத்தி
இனி மேலாவ தெனக்கருள்வாய் பத்தி
ஞானமடைந்து பர சித்தி
நாடினேன் நத்தி
நயந்தருள் முத்தி (பெற்)

வசனம்

ஆண்டை யிவ்வாறு தான் முன்னிருந்த நிலைமையைக்கூறி எனக்கு நீ உபதேசம் செய்யவேண்டுமென் மன்றாடி நிற்கவேசாம்பனார் ஆண்டையை வணங்கிக் கூறுகிறார்.

இராகம்-தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி.

முறையோயீதென்னபழி போகுமா யினப்
பறையன்றனைப்பணிய லாகுமோ

அநுபல்லவி.

மறையாகம முணர்ந்த மாதவத்தோர்களுமே
அறியாப்பொருளையிந்த வடிமையுமக்குச்சொல்ல (மு)

சரணம்.

பாழும்புலைக்குலத்து நாயினேன் பவஞ்
சூழும்வினைகள் செய்யு பேயினேன்.

வாழுமுயிர்களைக்கொன்று வயிறூரமென்றுத்தின்று
வாழுங்கேவலமான தாழும்புலையனையோ (மு)

வசனம்.

சாம்பனு ரிவ்விதங் கூறுவதைக் கேட்ட ஆண்டைபின்னும் அன்பரினடிமலரை வணங்கிக் கூறுகிறார்.

விருத்தம்.

கொலைகள்செய்துயிரைக்கொல்லுங் கொடியனசெய்திட்டாலும்
புலையனுய்ப்பிறந்துவிந்த புவிதனிற்றிரிந்திட்டாலுங்
கலைமுதலாகமங்கள் கற்கிலாயேனுநீயே
யலைதருமாயைநீக்கி யருள்தருவாயிப்போதே.

சிந்து.

பரமனருள்தனைப் பெற்றேனே என்
பெற்றுனே இந்த நீர்
பாவியான்கதி சேரவேதயை
யாகநீமன தோடுயென்முகம்
பாராய் இடர தீராய்

குரவரெனவே வும்மைத் தானே யெண்ணினே
கோதிலாமலே .. போதமானதை
யோதவே தடை யேதுமுண்டோவென்
கோவே .. யென்னை யாவே.

மமதையதனைப் பெற லானேன் வீணய்ப்
போனேன் இனி
மாயையானது தீரவே யருள்
தோயநீயுப தேசமேசெயில்
வாழ்வேன் இன்பஞ் சூழ்வேன்.

தமது கருணையரு ளாலே அன்பி
ஞலே இந்தத்
தாழுமானிட வாழ்வுமேலுற
வேழையான் படும் பாடு கண்டருள்
தாரும் கதி சேரும்.

வசனம்.

ஆண்டை யிவ்வாறு கண்ணீரலம்பினராய் தன்மனதிலுள்ள யாவையும் கூறிபின்னர் தான்தன் வாணுளை வீணுய்க்கழித்தவிதத்தைக் கூறினர்

விருத்தம்.

சுத்தசைவ வேளாள குலத்திற் ரேன்றித்
துய்யபொரு ளிதுவெனவே தோன்றக்காணே
னித்தமுநா னீறணிந்து நெறியோராது
நீளுமக்க மணிபூண்டு சைவன் போலே
பத்திமிக வுடையவனுய்ப் பாவித்திட்டுப்
பாதையன்றி போதமதைப் பகர்ந்துங் கேட்டுச்
சித்தமதில் வைத்தறியேன் சிவனு ரன்பின்
றிறங்காணேன் சிவசமய வறங்காணேனே.

இராகம்-ஆரபி-தாளம்-ஜம்பை.

பல்லவி.

காலத்தைவீணுகக் கழித்ததல்லாமலேயான்
கண்டதொன்றுமே யில்லையே

அநுபல்லவி.

வேலொத்தவிழியதையும் பாலொத்தமொழியதையு
மானுற்றுமங்கையரி ணுனுற்றமையலினுற் (கால)

சரணங்கள்.

1. மங்கைமொழியே வேக மவதாமே வமிர்தம்
வஞ்சி சுகமே வின்ப மவர்மதியதே சுகிர்தம்
கொங்கைகள் கைலாயம்மவை குந்தமெனவவ ரின்பதம்
கும்பிட்டுமனங்குலைந்தேன் கொடியேன்பாழாகஙிதம் (கால)

2. சொந்தமெனவருபவரி னுடுசூழ்ந்துபல சூது
துங்கமெனவிளையாடித் தொலைத்தபொருள்கணக்கேது
வந்தவரின்பசிகண்டு வயிருரவொரு போது
மகிழ்ந்தவருண்டிவன்ன மளிக்க மனமெண்ணுது(கால)

3. அங்கமொடுவசுவம்பல காடிவாகனங்க ளார்ந்து
அங்குமிங்குமுயிர்ப்பிண மாயவனியெலா மூர்ந்து

சங்கையின்றித் தன்புகழைத் தான்பேசிமதஞ் சார்ந்து
தம்பிதமையன் பொருளை யபகரிக்குந்ததிதேர்ந்து (கால)

4. பூமிமிகவேயிருந்தும் புகழறங்கள் பண்ணாது
பூவையொருபர்கனது பொற்கோயில் நண்ணாது
நேமமுடனேநல்ல வுண்டிநித முண்ணாது
நெஞ்சமதிலிறந்திடுதல் நிச்சயமென் றெண்ணாது (கால)

5. சங்கரனுக்குகந்திடு சங்கீதவுணர்வில்லாது
சைவசாதித்ரங்கள்தினஞ் சந்ததமுங் கல்லாது
பொங்கும்வயல்மாடுமனை புன்செய்நில மல்லாது
பூமியில்வேறேதுவென போதநெறி நில்லாது (கால)

6. த்யாகராஜன்சொல்லுஞ் சிவநாமந் தொடுக்காம
சிறந்த கவிவாணருக்குச் சிறிதும்பொருள் கொடுக்காமல்
ஏகமனதுடையசிவ னடியர்தமை யடுக்காமல்
ஈனன்வெள்ளாழன்யான் யென்னுணவத்தையொடுக்காமல்()

வசனம்

சாம்பனரிடத்தில் ஆண்டையிவ்வாறு கூறி மன்ருடி மெய்யன் புடையரான சாம்பனரை பின்னரும் வணங்கி தனக்கு உபதேசஞ் செய்யுமாறு கேட்கிருர்.

இராகம்-ஆபோகி-தாளம்-ஆதி

பல்லவி

உபதேசங் கூறுமையா நீர்
உமதருள்ர லென்மமதையை நீங்கி (உப)

சரணம்

அபசாரமினி யணுவதுஞ் செய்யேன்
அகன்றிட விடுத்திடி லடியே னுய்யேன் (உப)
பதிபசுபாசம் பதமதின் பொருளே
மதியினிற்படவே யிதுததி யருளே (உப)
அடிமையானுமக்கே ஆண்டைநீ ரெனக்கே
மடமதைநீக்கிடில் மகத்துவ முகக்கே (உப)

வசனம்.

உபதேசஞ் செய்யுமாறு கேட்டுக் கொண்ட ஆண்டையை நோக்கி சாம்பனர் வணங்கிக் கூறுகிருர்.

விருத்தம.

பரிந்தெனை யுபதேசிக்கப் பண்புடன் கேட்டீராண்டே
விரிந்தநல்ஞானமார்க்க மெய்ந்நெறிதன்னைப் பாவம்
புரிந்திடும் புலையன்வாயாற் போதமுங் கொள்ளலாமோ
தெரிந்ததைச் சொல்லுவேனச் சிவனருளதனுற் கேட்பீர்

இராகம்-புன்னுகவராளி தாளம்-ஆதி.

பல்லவி.

ஆண்டே மிகவு மருமை கண்டுகொள்வது
ஆண்டேமிகவு மருமை

அநுபல்லவி

மாண்டோர்பணியும்பணி பூண்டா ரெந்தபோதினும்
தூண்டாவிளக்கர்தமை வேண்டாது வேண்டுவது (ஆ)

சரணங்கள்.

த்யாகன்புகழ்ந் திடும்பரை
மோகனடி யவர்கள்சி
நேகனருள் செய்யுமவ
னேகனன்றி யேதுமாவ
தில்லையே அருளில்லையே தெதுமில்லையே மிகத் தொல்லையே
இந்த
யெவ்வுலகத் துள்ளபல
வெவ்வுயிர்க ளினுமுள்ளே
யவ்வுயிர்க குயிராய் நின்று
வெவ்விடத்துந் தங்குமந்த
வீசனே ஸ்வப்ர காசனே அன்பர் நேசனே நடராசனே

அது
உருவமல்ல கண்டிடாத
அருவமல்ல கண்டுங்காணு
உருவருவ மல்ல அது
அருவுருவ மல்ல வுரு
போதமே பர நாதமே பிந்து நீதமே ஞான ஓதமே

அதை

தன்னிற்றன்னை யறிபவன்
றன்னிற்றன்னை காணிற்பாடும்
தன்னிற்றன்னை யறிகிலார்
தன்னிற் றன்னைச் சார்ந்திடுவ

தாகுமோ ஆனாற்போகுமோ மனம் ஏகுமோ வினை போகுமோ
மேலும்

அந்தமாதியிற் பரமா
நந்தமதிற்றங்கி யேமோ
நந்தமாயிருந்து சுகா
நந்தமதை யுண்ணற்சிவ

நந்தமே அறும் பந்தமே அது அந்தமே இலைதெசந்தமே
அங்கே

மத்தகக் கரித்துதிக்கை
யொத்துயிந்த சீவனொரு
மித்துக்கலந்தே பெருஞ் சு
கத்தைக்கொள்ளும்போது வொன்று

மல்லவே ரெண்டு மல்லவே அதைச் சொல்லவே தர மல்லவே
ஆனால்

நீயதுவா யாகா யது
நீயாகும் பின்பு வது
நீயாக அவ்வருள்
பாயாது போனலது

நேருமோ உனைச் சாருமோ பதி தேருமோ அருள் கூருமோ.

வசனம்.

பின்னரும் சாம்பனர் ஆண்டைக்கு சீவத்தின் பெருமை யைக் கூறுகிறுர்.

சிந்து

வேதசாரமான வுருவம்
அமரர்கோனும்
கமலத்தோனும்
விண்டிடிவுங்கண்டிடா அருவம் அது

வித்தமே பரி சுத்தமேயென்று
நித்தமே த டத்தமே மிக
மேதையான போத பருவம்
வந்தவர்க் கென்றுஞ்
சிந்தையினின்றும்
மேவியேவுலாவி மருவும்
ஓதுதற்கெட்டாத பிர காசம்
எள்ளிலெண்ணெயா
யுள்ளே வமர்ந்து
வுற்றிடும் பூதங்களின் வாசம் பர
வேதமேபர ஈாதமேவுரு
போதமேஅத நீதமேஞான
வுத்தமர் துதிக்குஞ்சர் வேசம்
உயர்வு தேங்கி
மயர்வு நீங்கி
யுன்னுமவர்க் கன்றிப்ர யாசம்
நித்திய நிராமயா காரம்
தற்பரா நந்தம்
சிற்பரா நந்தம்
நிற்மலநிர்க்குண நிரா தாரம் அது
நிர்மயங்கதி சின்மயம்பர
சின்மயம்மொளி யின்பயமது
நிர்விகார ரூபசஞ் சாரம்
பூதகாரணம்
நாதகாரணம்
நிர்ணயித்து வாழ்த்திடத் தாரம்

வசனம்.

சாம்பனார் சிவநாமவைபவங் கூறுகிறார்.

விருத்தம்.

சிவநாம மேபதவி சேர்க்கு மந்தச்
சிவநாம மேமபத்தைச் சிதைக்கு மிக்கச்
சிவநாமஞ் செய்வினைகள் யாவுந் தீர்க்குஞ்
சிவநாமந் திரிகால வுணர்ச்சி காட்டுஞ்

சிவநாமந் தெளிஞானந் தெரியக் கூட்டுஞ்
சிவநாம மஷ்டாங்கஞ் செய்ய வாக்குஞ்
சிவநாமந் தனக்கிடு செப்பொண்ணாதே
சிவநாமந் தனக்கிடு சிவமதாமே.

இராகம்-மோகனம்-தாளம்-மிசாம்

பல்லவி.

சிவநாமம் பெருநாமம்
செப்பிடிற் சுகமாகியக்ஷேமம்

சரணம்.

1. பவசாகரந் தீர்த்திடுநாமம் பாபகர்மத்தைப்போக்கிடுநாமம்
தவத்தோர்கள் துதித்திடுநாமம் தாண்டவமாடியவாண்டவனுமம்
2 பாம்பும்புலியும்பரவிடு நாமம் பண்ணவர்கள் துதித்திடுநாமம்
சாம்பவிதினமேத்திடுநாமம் சத்துவகுணமாகியநாமம்
3. ஆதியந்தமில்லாவொருநாமம் ஆநந்தாகரந்தந்திடுநாமம்
வேதவாகமசாரமாம் நாமம் வேதன்மாலுமேசொல்லிடுநாமம்
4சொன்னநாக்குமினித்திடுநாமம்சோபதாபங்கள்போக்கிடுநாமம்
பன்னுநால்வர்கள்பரவினநாமம்பத்தருள்ளங்களிக்கச்செய்நாமம்
5.ராகவன்புகழ்ந்தோதிடுநாமம் ராவணன்நாவினுற்சொன்னநாமம்
த்யாகராஜனிதஞ்சொல்லுநாமம் தேனும்பாலுமமுதொத்தாமம்

வசனம்.

சாம்பனுர் மானிடதேக மநித்தியமென்று கூறுகிறுர்.

இராகம்-ஆபோகி-தாளம்-ஆதி.

பல்லவி.

தேகம் சந்தேகம் எடுத்த (தேக)

சரணம்.

1. ஏகனளித்ததான தனு கரண புவந
போகங்கொண்டழிந்து போகுமிந்தஜனன (தேக)
2. திறந்தவொன்பது வாயிற் றிகழுமிந்தக்கூடு
வுறைந்தகிளியைநிக ருயிரிருக்குமோநாடு (தேக)
3. கட்டைநெருப்புக்கிந்த கட்டையிரையாகுமே
பொட்டையனுக்கு மிது பட்டப்பகலாகுமே (தேக)

4 பிறந்த மண்ணினிற் சிறந்துவாழ்வைநம்பி
இறந்திடுவோ மென்பதை மறந்துவிடுதலாமோ (தேக)

5. நாறுந்தசையெலும்பு நண்ணிப்பொதிந்தவிந்தத்
தூறித்தூயவர்நீக்கும் துன்பந்தரவே வந்த (தேக)

வசனம்.

ஞானவானே உயர்ந்தவனுவானே யன்றி ஜாதியினாலேயுங்கல்வியினாலேயும் பயனில்லை யென்பது.

விருத்தம்.

வேதமுடனாகமங்கள் மிகவுமோர்ந்து
விதிவழுவா விதநடந்து மேதுமில்லை
நாதனது நாமமதை நாக்காற் சொல்ல
நல்லபத்தி மிருந்ததினால் ஞானமுற்று
ஏதமிலா துணர்ந்தவர்க ளெவற்குமேலா
யிவ்வுலகி லேழினிலும் பெரியோனாகி
போதனையரன்பதத்தைப் பொருந்தியின்பம்
புசித்திடுவான் பூவுலகில் வசித்திடானே.

வசனம்

உலகத்தில் மானிடர்கள் தனங்களைச்சம்பாதித்து தானதர்மங்கள் பண்ணாது லோபத்தனம்பண்ணுவதைக் கூறுகிறார்.

இராகம்-தேவமனோகரி-தாளம்-ஆதி.

பல்லவி

பாழுக்குத்தானிறைப்பார் பணமெல்லாம்
பையையாய்க்கட்டிப் பார்த்தவை யெல்லாம் (பா)

அநுபல்லவி.

நாழிகைக்கு நாழிகை வட்டி பார்த்து
நாணயம் பேசிபல நாளாகச் சேர்த்து (பா)

சரணம்.

வாய்க்கிதமாகிய வுணவையுண் ணாது
வயிற்றைச் சுருக்கி நல்லசெலவுசெய் யாது
தாய்க்குத் தகப்பனுக்கு மினியகொ டாது
தையலர் வேண்டுமுனதற்குத்தப் பாது (பா)

காசுபோகுதென்று கந்தலை யுடுப்பார்
கட்டில் வேண்டாது பழம்பாயனிற் படுப்பார்
யாசகத் தொழிலினுங் கீழ்த்தொழி லெடுப்பார்
அரும் பொருள்சேர்த் தாகாவழி கொடுப்பார் (பா)

ஏழைகள் யாசிக்க விரங்கிகை நீட்டார்
என்றும் பணஞ்சேர்ப்பதை மனம்விட மாட்டார்
வீழும் வழக்குச் செலவுக்குப்பின் காட்டார்
மெய்யர் வாயில்மண்ணைத் தெள்ளியே போட்டார் (பா)

வந்தவுறவினுக்கு வாயுப சாரம்
வார்த்தை சொல்லாது தானந்த நேரம்
சொந்த வேலைதன்னைப் பார்த்துவி சாரம்
சூழ்திந்டுவாரவர் தொல்லைய பாரம் (பா)

போசன மயலகம் புசித்திடத் தேடி
போகுவர் தன்குல தேசி ஞடி
ஆசிகள் கூறிடி லடிக்கவே யோடி
அதட்டிடுவார்பொரு ளவனியிற் றேடி (பா)

வசனம்

பெண்ணாசையா லுண்டாகிப கெடுதிகளைக் கூறுகிறார்

இராகம்-பைரவி-தாளம்-சாபு

பல்லவி.

பெண்ணாசையாகிய பேராசையானபெரும்
பித்தம்பிடித்தால் தீருமோ (பெ)

அநுபல்லவி:

மண்ணாசைபொன்னாசை மனதிலுண்டானாலும்
மாறிநீங்குமுயிர் மாய்ந்திடநேர்ந்தாலும் (பெ)

சரணம்

மஞ்சள்பூசி கிரைந்து வாடினமுகத் தினை
மதியென்று மதியின்றி வர்ணித்துவிழி யினை
கஞ்சநீல மென்று கழறியெ கருத் தினை
கலசக்குயத்தில் நாட்டிகலங் கிடுமற் பனை (பெ)

| | | |
|---|---|---|
| கடைவிழியாலேவவர் | காதல்வலைப் | பட்டு |
| காமவிரகமெனுங் | கடலதிலாழ்ந் | திட்டு |
| நடையன்ன நடையென்று | நன்னடைதனை | விட்டு |
| நாறுஞ் சிக்கற் குழலை | நன்மேகமென் | றிட்டு(பெ) |
| அழியுந் தனத்திற்காக | வருந்தனத்தைத் | தந்து |
| அரைப்பணத்தாசை கொண்டு | முழுப்பணம்போக்கி | நொந்து |
| வழியும் புண்ணேய் கொண்டு | மானிலத்தோர் | பந்து |
| வாயாரத்தூரகாம்ப் | பேயாய்த்திரிந்த | லைந்து(பெ) |
| ஈசனொருவனுண்டு | வென்றவெண்ண | மறந்து |
| இயற்றுவதெல்லாம்பாப | மென்பதையுந் | துறந்து |
| காசினிமாதர்கண்மேற் | காதன்மிகச் | சிறந்து |
| கருதாத வெண்ணங்களைக் | கதிருதிபட்டமாய் | பறந்து(பெ) |
| பத்திமார்கத்தைத்தினம் | பற்றிப்பதஞ் | சேராமல் |
| பாரிற்பிறந்திறக்கும் | பண்பைமன | மோராமல் |
| சித்திதருந்தியாகராஜன் | சொல்லைச் | சாராமல் |
| சிற்றம்பலவனருள் | பெற்றிடப் | பாராமல்(பெ) |

வசனம்

பின்னரும் பத்திமார்கத்தைக் கூறுகிருர்.

இராகம்-தன்யாசி-தாளம்-சாபு.

கண்ணிகள்.

| | | |
|---|---|---|
| அறியாதவன் | பேயன் | சிவபத்தியை |
| மறவாதவன் | றாயன் | |
| பத்தர்கள்நல்ல | ஜன்மம் | பத்தியைச்செய்யார் |
| பாதகர்மிருக | ஜன்மம் | |
| நிமலனைவாழ்த்தாத | வாய் | நேருங்காளவாய் |
| நிணமாறுமலசல | வாய் | |
| அரன்கதைக்கேளாக் | காது | உடையவர்கள் |
| அன்பில்லார்தன்னுயிர் | மீது | |
| நீதனை நினையா | நெஞ்சு | தன்னுவிகொள்ள |
| நெருங்கொடிய | நஞ்சு | |
| சிவனைக்காணுத | கண்கள் | புழுநிறைந்து |
| சீயெழுகிடும் | புண்கள் | |

| | | |
|---|---|---|
| அரனைப்பூசித்திடாத | கை | எட்டிமரத்தா |
| லமைத்தபாழுமுலக் | கை | |
| பரனைப்பணியாத | தலை | நாயின்றலை |
| பாழும்பெரும் பனங் | குலை | |
| தேவாலயஞ் செல்லாதக் | கால் | பெரும்பாதகர் |
| செத்தவீடதின்பந்தற் | கால் | |
| த்யாகன் பணியு | நாதனை | தொழாதவர்க்கு |
| தினமுந்தீராது | வேதனை | |

வசனம்

இவ்விதமாக சாம்பனூர் ஆண்டைக்கு அனேக சன்மார்க்க விஷயங்களையெல்லாம், உபதேசித்தருளவே யாவுமோர்ந்த ஆண்டை சாம்பனாரை வணங்கிக் கூறுகிறார்.

விருத்தம்.

என்னையண்டி தாமிருந்த தாலுமக்கு வென்னாலே
பலனென் றில்லை
மின்னையண்டு மிடையுடைய மெல்லியுமை பாகத்தன்
மென்ப தங்கள்
தன்னையண்டி நின்றிடுமுன் றளிர்ப்பதத்தைத் தமியேனுஞ்
சார்ந்த தாலே
தென்னையண்டு சோலைசூழ் தில்லைமன்றின் பெருமையெலாந்
தெரிந்தே னையே.

வசனம்.

சாம்பனா ரிவ்வாறுகூறி அகமகிழ்கொண்டவராய் உமதருளாலே யான் நல்லவழியுற்றேனென்று கூறுகிறார்.

இராகம்-கௌளிபந்து—தாளம்-மிசிரம்.

பல்லவி.

தன்யனானேன் சிற்றின்பத்திற்கு
அன்யனானேன். (தன்)

அநுபல்லவி.

தன்யனானேன் தமைப்பணிந்தேன்
சனனவாழ்வினை விடத்துணிந்தேன் (தன்)

சரணம்

சிவத்தின் பெருமையைத் தெரிந்துபெற்றேன்
பவத்தை யகற்றும் பதத்தி லுற்றேன் (தன்)
கர்மம்விடுத்தேன் கதியைத் தொடுத்தேன்
தர்மந்தனைசெயுந் தரத்தையடுத்தேன் (தன்)
அடியவரும தடியை நம்பியேன்
கொடியன்யான்குறை கூறிப் புலம்பினேன் (தன்)
ஞானமார்க்கத்தை நானின்று கண்டேன்
ஊனடைந்த உடம்பசை விண்டேன் (தன்)
தில்லைநாதனைத் தெரிசனஞ் செய்வேன்
அல்லலற்று அடியேனு முய்வேன் (தன்)

வசனம்.

இவ்வாறு ஆண்டையானவர் சாம்பனரைப்பார்த்து சுவாமி எனக்கு தாங்கள்செய்த நன்மையெல்லாம் என்னலெடுத்துக் கூறமுடியாதென்று அடிபணிந்து நிற்க, சாம்பனர் ஆண்டையை வணங்கி தன்னை முறிகிழித்துவிடுமாறு உத்தரங்கேழ்க்கிருர்.

இராகம்-சகன-தாளம்-சாபு.

பல்லவி.

இனிமேலாவது யெந்தன் முறியைக்கிழித்தனுப்பி
யின்னருள்செயு மாண்டே.

அநுபல்லவி.

தினமுந்தவருமலே திருத்தொண்டுதனைச்செய்ய
தீயமாயவாழ்வினிற் றேயாமல் நானுய்ய (இனி)

சரணம்.

தில்லைநடேசனுக்கும் தேசிகனனயெந்தன்
தேடரியவுமா பதியார்தனக்குந் தினம்
நல்லவிறகுவெட்டி நாடவருமற் றந்து
நற்கதியடைந்திட நல்லாசிகூறியே (இனி)
புலையனித்தனைநாளாய புன்செய்நன்செய்கடனைப்
பொலியும்படிபயிர் புரிந்ததுபோதுமாண்டே
அலையுமனதடக்கி அன்பிலினிச்சிறந்து
அரனையும் அவாது அடியாரையும்பணிய (இனி)

எந்தனைப்போ துமக்கு எத்தனை புலையரோ
இருப்பதால்யானிருந்து என்னசுகிர்தமாண்டே
நிந்தனைசெய்யாதெனை நீக்கிவிடுத்தால்மிக
நின்குலத்திற்குப்புண்ய நிரம்புஞ்சொன்னேனே (இனி

வசனம்.

விடைதரவேண்டுமென்று மன்றாடி உத்தரங்கேட்குஞ் சாம்பனாரைப்பார்த்து ஆண்டையானவர் கூறுகிறார்.

இராகம்-நீலாம்பரி-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

(ஆ) அடியவரேநானுன் னடிமையேனல்லவோ
அடியேனென் செய்வேன்
படியதில் நெடுநாளாய் பழகின வும்மைவிட்டுப்
பாவியெவ்வித முய்வேன்.

(சா) ஐயேயிக்கடலுலகி லவரவர்செய்திட்ட
வரியபுண்ணிய பாவம்
மெய்யாகவந்ததில் வந்திடுமற்றவரை
விரும்புதல்மனத் தாபம்.

(ஆ) கன்றதுபசுவினை யிழந்துவுளங்கசிந்து
கதறுதல்நிக ரானேன்
என்றினிவும்மை யினியான்காண்பதந்தோ
இன்னலடைய லானேன்.

(சா) அவரவர்வந்திட்ட வழியதனைப்போலே
அகலவேண்டு மாண்டே
சிவனருளாலேயான் சற்கதியடைகுவேன்
திரும்பிவரே னீண்டே.

வசனம்.

ஆண்டையானவர் சாம்பனாருக்கு வணங்கி தன்கையாற் கொண்டுவந்த முறியோலையைக் கிழித்து, அடிமையினின்றும் நீக்கிசாம்பனாருக்கு தனதிட்டப்படி திருத்தொண்டுசெய்து உய்யும்வண்ணம் உத்தரவு அளிக்கிறார்.

இராகம்-யமுனாகல்யாணி-தாளம்-ஆதி.

பல்லவி.

வாரும் நீர்போய் வாரும் உமது
மனதுபோலின்றே
மகிழ்வொடு சென்றே. (வாரு)

சரணம்.

கண்டுவடியவரின் ௌெண்டுபுரியமகிழ்
கொண்டுபோவியெந்தனை விண்டுநீருஞ்சென்று (வா)

ஏதுமிந்த வெள்ளாழன் மீதுமனவலிகொள்
ளாதுயெந்தனன்புமரு துயெண்ணிநீர்சென்று (வா)

தாசனுனத்யாக ராசன்பணிந்திடுநே
டேசன்பதத்திலுல் லாசமாகத்தங்கி (வா)

விருத்தம்.

அன்பரக மகிழ்ந்தாண்டை விடையைப்பெற்று
ஆணவத்தை யொழிந்தபெரு மன்பராகித்
துன்பகன்று திருத்தொண்டைச் செய்துவின்பந்
தோன்றுமரன் பதத்தடையுந் தோற்றமெண்ணி
வன்பிறவி யொழிந்த பெற்முன் சாம்பனுண்டை
மலர்ப்பதத்தை வணங்கியகன் றிட்டாரன்னூர்
தன்பெருமை யறியாத புலையர் சூழ்ந்து
சாற்றுவார் பெற்முனைப் போற்றுவாரே.

இராகம்-தோடி-தாளம்-சாபு.

பல்லவி.

பெருமையை யறியாமற் போனேமே-உந்தன்
அருமையை யறியாப்பாவி யானேமே.

சரணம்.

1. அருளையடைந்துபர னன்புபூண்டொழுகிய
குருவினையுற்றுவுந்தன் கொள்கைநிறைவேற்றிய (பெரு)

2. ஈனப்பறையனென்றும் இழிகுலத்தோனென்றும்
ஞானமில்லாதும்மை நாங்கள்தூறுசொல்லி (பெரு)

3. போதந்தனையெடுத்துப் புகன்றுமதைக்கேட்காது
பாதகந்தனைசெய்யும் பண்புடையோமாகி (பெரு)

4. நம்மையாண்டிடுமாண்டை நாடியுன்பதம்வீழ்ந்து
மெய்ம்மையைச்சொல்லென வேகின்றிடுமுமது. (பெரு)

வசனம்.

பறையர்கள் இவ்வாறு சாம்பனரை வணங்கி தாங்கள் செய்த குற்றங்களை மன்னிக்கவேண்டுமென்றும், இனியாதுந் தீங்குசெய்கிறதில்லையென்றும். மன்றாடி அகன்றார்கள் சாம்பனர் இடர் யாதுமற்றவராய், மனதில் முன்னிலும் பெருகுமுவகையராய், ஈசன் திருத்தொண்டும் அடியவர் திருத்தொண்டும் இனி செய்வதற்கு யான் இப்போதுதான் பாத்திரனுனேனென்றும், திருத்தொண்டைச் செய்துகொண்டு தில்லைநடராஜமூர்த்தியால் அளிக்கப்படும் "இரண்டுபணத்தை"க்கொண்டு இல்லறத்தையும் புரிவாராய் வாழுகின்றார்.

ஸ்ரீமந்நடராஜமூர்த்தி பரமபத்த சிகாமணி யாகிய பெற்றான் சாம்பனர் செய்துவரும் திருத்தொண்டை திருவுள்ளத்திலுன்னிஅப் பெற்றான் சாம்பனரை பரிக்ஷை செய்யும் பொருட்டு ஓர் நாள் பெரியமழை பெய்யும் வண்ணம் திருவருள் செய்யவே மழையானது இடைவிடாது பெய்வதினால் சாம்பனர்திருத் தொண்டிற்கு இடர் நேர தன்மனது நொந்தவராய் தனது பத்தினியான சாம்பச்சியை நோக்கிச் சொல்லி வருத்தமடைகின்றார்.

இராகம்-பியாகு-தாளம்-ஆதி.

நானென்ன செய்குவேனே ஜகதீசனே
வானமழைமிகுந்து பொழிகின்றதந் தோயினி

1. நேற்றுவரையிற்றொண்டு நிதந்தவறுமலே
எற்றவண்ணம்புரிந்தே னின்றுமழையினுலே (நா)

2. மேகங்கள்சூழ்ந்துமழை மேலுக்கு மேலாக
ஏகமாய்ப் பெய்யுதே யீசாயிதென்னகாலம் (நா)

3. இன்றுதொண்டு செய்திடா திடர்வந்துசேர்ந்ததே
மன்றுளாடுமம்பல வாணுயிதுமுறையோ (நா)

4. ஈசன் சோதனையோ என்குருசோதனையோ
தாசன் மேலொன்றுந் தவறிலைமெய்யனே (நா)

பதம்

இராகம்-ஸைந்தவி-தாளம்-ஆதி

பல்லவி

பெண்ணே என்னசெய்வேனடி நானே தொண்டு
இயற்றிட வழிகா ணேனே (பெ)

சரணம்

மன்னியே மேகம் வானத்தைச் சூழ்ந்து
மழையதிடைவிடாமற் பெய்யுதே வீழ்ந்து
நன்னயமாய்க்காட்டில் நானுமே சென்று
நல்லவிறகு வெட்டதடையிது வாச்சே (பெ)

வசனம்.

சாம்பனு ரிவ்வாறு தன்மனைவி யோடு மனம் வருந்தி திருத்தொண்டு செய்ய வழியில்லாமல் மழை பெய்கின்றதே யென்று அழுதாற்றி துன்பமுறவே ஸ்ரீ உமாபதி சிவசாரியார் திருமடத்தில் மழை பெய்த அன்று தினம் மடைப் பள்ளியில்*மடையாளர்கள் திருவமு தமைக்க விறகு இல்லாமல் அன்ன பரிபாகம் தடைபட்டு நிற்க இதனை யறியாத ஸ்ரீஉமாபதி சுவாமிகள்மடையாளர்களை யழைத்துக் கேழ்க்கிருர்.

பதம்

திருவமுது அமைக்காதபடி யிருப்ப
தேனந்த காரணம் யானறியச் சொல்லுவீர் (தி)

அரனதுபூசனைக் காகநைவேத்திய
மாகநீங்கள்வழக்க மாகநிதமும் போலே. (தி)

வசனம்.

இதனைக்கேட்ட மடையாளர்கள் அஞ்சிநடுங்கி ஸ்ரீஉமாபதி சுவாமிகளைப் பார்த்து கூறுகிருர்கள்.

விருத்தம்.

ஐயனே யெங்கண்மேல் வருத்தம்வேண்டாம்
யாரேசவோர் பெற்ருன்சாம் பானெனன்போன்ருன்
நையுமன முடையவனுய் நாள்கடோறு
நல்விறகு கொணர்ந்தளித்து வந்தானன்ருேன்
பெய்யுமிந்த மழையதனு லின்று காணேம்
பெருமழையி லவனென்ன செய்வானங்கோ
மெய்யனே விறகில்லாக் காரணத்தால்
மெலிவுற்ருேஞ் சமைக்கமனம் வலியுற்ருேமே.

---

* படையாளர் பரிசாரகர் அல்லது சுயம்பாகி

வசனம்

என்று கூறுவதைக்கேட்ட ஸ்ரீ உமாபதி சுவாமிகள் வியப்படைந்து அம்மடையாளர்களை நோக்கிக் கூறுகிறார்.

விருத்தம்.

அருமையாய்த்தினமும்வந்து வன்புடன் விறகளிக்கும்
பெருமைசேர் பெற்றான்சாம்பான் பேணியேநாளை வந்தா
லுரிமையாயெந்தன்முன்னே வுற்றிட வாழ்த்துவம்மின்
பரிவுடனவனையானும் பார்த்திடவுளங் கொண்டேனே

வசனம்

என்று சுவாமிகள் கட்டளையிட மடையாளர்கள்கேட்டு அப்படியே செய்கிறோமென விடைபெற்று சுவாமிகள்பூசைசெய்யும்வண்ணம்வேண்டிய உபகரணங்களைத்தேடி திருவமுதமைத்து சுவாமிகள் திருவுள்ளத்தைக் களிக்கச் செய்தார்கள். பின்னர் மறுநாள் மழைகொஞ்சம் நிற்கவே, சாம்பனார் மனமகிழ்ந்து அதிகாலையிலெழுந்து விறகு சேகரித்துக்கட்டித் தலையில் வகித்தவராய் ஸ்ரீஉமாபதி சுவாமிகள் திருமடத்திற்கு வரவே அங்குள்ள மடையாளர்கள், பெற்றா, நீநேற்றுமழையில் வரவில்லைபோலுமென்ன, சாம்பனார் ஒப்புக்கொண்டு வணங்கி நிற்க, மடையாளர்கள், ஸ்ரீஉமாபதி சுவாமிகளிடத்தில் ஓடி அடிபணிந்து பெற்றான் வந்திருப்பதைக் கூறவே, சுவாமிகள் திருவுளமகிழ்ந்து வெளியிற் போந்துநிற்கவே, சாம்பனார் சுவாமிகளைக்கண்டு குருவேயெனஅடிபணிந்து தரிசிக்கிறார்.

இராகம்-மோகனம்-தாளம்-ஆதி.

பல்லவி.

நாதனைக் கண்ணினாற் கண்டாரே பெற்றான்சாம்பனார்
வேதனையாவையும் விண்டாரே (நா)

அநுபல்லவி.

நீதனை யெண்ணி யோக சாதனை செய்துவொரு
வாதனை யின்றி வாழு மாபதி யான குரு (நா)

சரணம்

பத்தர் பலர் வேதங்கள் பாட ஞானசாஸ்திர
சித்தாந்தங்களில் பன நாட பந்தமகன்று

முத்தியடையும் வழி தேட முனிவர்பலர்
சித்தசுத்தியாய் பத்தி நீட கோதிலாவன்பர்

கூட்டமாகவே கூடிப்பணிந்திட
கொற்றவன்குடி மட மதனிலிருந்திட
நாட்டம்வைத்துப் பெற்றானங்கு சென்றிட
நாடிப்பணிந்து மகிழாடியே நின்றிட. (நா)

வசனம்

பெற்றான் சாம்பனார் அடிவணங்கி மெய்சிலிர்த்து சிந்தை நைந்து ஆனந்தக்கண்ணீர் மல்கி கரமலர்குவித்து நிற்கவே ஸ்ரீஉமாபதி சுவாமிகள் சாம்பானை விசாரிக்கிறார்.

இராகம்-தன்யாசி தாளம்-சாபு.

கண்ணிகள்

(உமா) அன்பனே யுனக்கெந்த வூரே என்மு
னன்புடன்சொல்வா யுந்தன் பேரே

(பெற்) ஐயனேயென் னூர் தில்லை தானே அருள்
மெய்யனேயென்பேரும் பெற் றானே

(உமா) உன்குலமின்னதென்று கூறு உன்
றன் கருத்துரையுள்ள வாறு

(பெற்) என்குலம் நீசகுல மையே யான்
நன்னலம் பெறவேண்டு மெய்யே

(உமா) நீசநலமடைய லாமா சர்
வேசனருள் புரியப் போமா

(பெற்) குருவாலடைதல் மிகத் திண்ணம்உங்கள்
அருளைவேண்டினே னெங்க ளெண்ணம்

(உமா) பரிவாய்தினமும்விற கெனக்கே வெட்டிக்
கரவேசொல்லித் தந்ததா ருனக்கே

(பெற்) தில்லையரனினரு ளாலே தினமும்
நல்கினேன் விறகுவன் பாலே

வசனம்.

உமாபதி சுவாமிகள் இவ்வாறு விசாரித்து யோசிக்கிறார்.

விருத்தம்.

அதிகபரி பக்குவனும் முத்திதனை யடைகுவதற்
கருக னாகி
பதியருளைப் பெறக்கருதிப் பலநாளுந் தொண்டியற்றிப்
பரிவி னோடு
கதிபெறுவ தேநலமென் றெண்ணமுடை யிவனுடைய
கருத் திணங்க
வெதின் வழியைக் கொண்டிவனுக் கெதுசெய்வ தெனமனதி
லெண்ணிப் பார்த்தார்

வசனம்.

ஸ்ரீ உமாபதி சுவாமிகள் இவ்வாறு வேதாகமங்களில் நீசனாகி
ய ஒருவனுக்கு எந்தவிதமுஞ் செய்யும்படி சொல்லவில்லையேயெ
ன்று அதிகவிசாரமுடையவரா யிருப்பதை சாம்பனாராறிந்துசு
வாமிகளிடம் விடைபெற்றுக்கொண்டு தான்சேரிவந்துதான்குரு
தரிசனம் பண்ணியதைப்பற்றி நினைந்து ஆனந்தங்கொண்டு தா
னாகக்கூறுகிறார்.

இராகம்-சங்கராபரணம்-தாளம்-சாபு.

பல்லவி

என்ன புண்ணியம்செய்தேனோ இன்றைக்குயான்
என்ன புண்ணியம் செய்தேனோ.

அநுபல்லவி

மன்னு மானிலத்தனில் மாபாவியாகிபாவ
மார்க்கமொழுகும்நீச வாழ்விற்சிறந்தயானும் (என்)

சரணம்.

மறவிக்குருடன்கண்ணைப் பெற்றவிதத்தைப்போலே
பெரியவறுமையுள்ளோன் பெருந்தனம்பெற்றாற்போலே
பறையனெனக்குமொரு பரிதியொளியைப்போலே
பார்க்கும்படிகுருவைப் பார்த்தேனுகையினாலே (என்)

வசனம்.

ஆனந்த பரவசத்தராய் தான் எப்போதும்போல ஆலயத்தி
ற்கும் குருவின் திருமடத்திற்கும் விறகு திருத்தொண்டு செய்து
கொண்டு வருநாளில் ஒருவாள் ஈசனை வேண்டுகிறார்.

இராகம்-சஹானா-தாளம்-சாபு

பல்லவி.

கதிதாரும் ஈசனே எனக்குத்தம
பதிதாருஞ் சர்வேசனே.

அநுபல்லவி

விதிகேசவனது பதவியை வேண்டேன்
விமலனுனது வடிக் கமலத்தை பூண்டேன் (கதி)

சரணங்கள்

பாழும் புலையன் யானே பாரினில் வெகு
பாவங்கள் செய்துள் ளேனே
சூழுந் துன்பப் பிறவி யேழும் பறையனாகத்
தோன்றும லெனக்கருள் தூயா நான்மறைவாயா (கதி)

ஏழையென்முகம் பாரும் குருநாதனே
யேத்திடும் புத்தி தாரும்
கோழைமனதுடைய கொடியன்தினம் விறகு
கொண்டளித்திடுவேனே குற்றமகலத் தானே (கதி)

வேறே கதியில்லை யீசா உனக்குபணி
மேவினேனே தில்லை வாசா
ஆறுமிளமதியும் அணிந்த செஞ்சடையானே
அடியேனுக்கின்னருள் ளளிக்கத் தடையேனே





உ

## 4-வது தீக்ஷா விலாசம்.



வசனம்

ஸ்ரீமந் நடராஜமூர்த்தி யானவர் ஸ்ரீ உமாபதி சிவாசாரியருடைய திருவுளத்தை யறிந்து அவருக்குள்ள ஐயப்பாட்டை நிவிர்த்தித்து சாம்பனாருக்கும் உத்தமமான தீக்ஷையின்மூலமாய் தன்னை யடையச்செய்ய வேண்டுமெனக் கருதி முன்போலவே ஓர் நாள் பெருத்த மழைவரும்படி திருவருள் செய்தார் மழை

யானது இடைவிடாமல் பெய்ய ஆரம்பித்தது சாம்பனுர்மழையினல் திருத் தொண்டு செய்யத் தவக்கப் பட்டு வருந்துகிருர்.

இராகம்-கௌளிபந்து-தாளம்-ஆதி.

பல்லவி.

இனியென் செய்வேனே நானே
இன்றைக்குத் தொண்டியற்றும் வழியைக்காணேனே (இ)

அநுபல்லவி.

பனிமாமொழியுமை பங்கனே தில்லைவாசா
பாம்பும் புலியுந்தினம் பரவுஞ்சிவ நடேசா (இ)

சரணம்

இத்தனைநாள்விற கீந்துமன மகிழ்ந்தேன்
ஏதோ தொண்டினைவிட் டிடாது நிதம் புரிந்தேன்
அத்தனின்சோதனையோ யறியே னுந்தேன்
ஆகாயிந்தவிதிக் காகவோ நான் வந்தேன் (இ)

வசனம்

இவ்வாறு சாம்பனுர் வருந்தி துன்புறுங் காலத்தை யறிந்த ஈசன் சாம்பனை நேரே யடைந்து ஏன் விறகு கொண்டுவரவில்லை யென்று கண்டிக்க வெண்ணி சுவாமி பெற்ருன் வசிக்குமசேரிக்கு வருகிருர்.

இராகம்- மோகனம்-தாளம்-ஆதி

பல்லவி

வந்தார் நடம்பு ரிந்தார் ஒரு வேதியரைப் போலே
மகிழ்ந்து பெற்ருன் சாம்பனுர் தனக்கருள தில்லைநடேசன் (வந்)

அநுபல்லவி

மந்தாகினி யோடிள மதியைமுடி தரித்தோர்
மாதவர்கள் விடுத்த மாதங்கத்தை யுரித்தோர் (வந்)

சரணம்.

பட்டப்பகலில் பறச்சேரியை நாடி
பத்தன் பெற்ருன் மனப்பாங்கதைத் தேடி

சட்டப்படிவிறகு தந்திடா திருந்த
தவறுக்குவிடைதருவா யென்றுமேகேட்க நடந்து (வந்)

வசனம்

ஸ்ரீ நடராஜமூர்த்தி இவ்வித வேடத்தோடு பெற்றான்வசிக்கும் சேரிக்குள் நுழைந்து பெற்றானைக் கூப்பிடுகிறார்.

தண்டகம்

1. பெற்றாவெளியில்நீ வாடா தொண்டின்
பெருமையறிந்திட்டோம் போடா ஜாலங்
கற்றாயிது முறை யோடா உந்தன்
சாதிக்குணமல்ல வோடா

2. நேற்றுவிறகுவெட் டாமல் நீ
நித்தம்போல் தொண்டுசெய் யாமல் மன
மாற்றங் கொண்டேதோவ ராமல் நீ
வசித்ததேன் சொல்மறைக் காமல்

3. பாங்கிதுவோநல்ல குணமா நல்ல
பத்திக்கு இதுவும்ல க்ஷணமா நீ
வாங்கினதுங் கொஞ்சப் பணமா நான்
வந்துகேளேனென்ற வெணமா

4. தலையில் விறகுகட்டைத் தூக்கி தினம்
தடையின்றி வருதலை நீக்கி ஏதோ
நிலைதவிர்ந்தாய்யெதும் பாக்கி ண்டோ
நேரிற்சொலெந்தனை நோக்கி

5. இத்தனைநாள்வர விலையா உன்னை
யேதும்வைததுண்டோ புலையா உன்
சித்தத்திலேயய மிலையா உந்தன்
சேரிக்கும் கோயிற்கும் தொலையா.

வசனம்.

இவ்விதம் ஸ்ரீமந்நடராஜமூர்த்திசுவாமிகள் சாம்பனாரைக் கோபிக்கவே, சாம்பனார் மனந்திகைத்து உடல்குன்றி கண்ணுங் கண்ணீருமாக நாக்குழறி கரங்குவித்து அடிவணங்கிக் கூறுகிறார்.

இராகம்-தோடி-தாளம்-ரூபகம்.

கண்ணிகள்.

1. இடைவிடாமல் மழைபெய் கின்றதே
என்னசெய்வே னையனே
அடைவுடன்விறகளிப் பதைமனம்
யான்மறந்திலேன் மெய்யனே.

2. தொண்டுசெய்வதையன்றி வேறெதுஞ்
சூழ்ந்து செய்திடே னையனே
கண்டுகொள்ளுவீ ரென்றன்மேற்குற்றம்
கருதலாகுமோ மெய்யனே.

3. ஈசனறியச்சொன்னே னிதனை
யேழையல்லவோ ஐயனே
மாசிலாதமன துடையேன் நான்
மகிழ்ந்தருள்செய்யு மெய்யனே.

4. கோபங்கொண்டிடவேண்டாம் விறகு
கொண்டுவருகிறே னையனே
சாபஞ்செய்திடிற் றமியேன்புலையன்
தாங்குவதில்லை மெய்யனே.

அஞ்சனுகீதச்சந்தம்.

1. தொண்டுசெய்வதிற்றண்டையொன்று மில்லை
துன்பமாய்ப் பெய்திடுமழையினுற் றொல்லை
கொண்டனனேயே நம்புமென் சொல்லை
கோபிப்பது முறையா

2 இந்தமழைவந்ததாலேழையென் மனமே
என்னென்னமோதுன்பமடைந்ததித் தினமே
அந்தமாயிந்தமழைநிற்கு முனமே.
யான்கொண்டு வருவேனே

3. ஐய்யனே கோபமில்லாதருள் தாரும்
அடியேனை யுய்ந்திடவேவருள் கூறும்
மெய்யுணர்ந்திடுநல் மார்க்கத்திற் சேரும்
வேறினிகதியிலையே.

வசனம்.

சாம்பனுர் இவ்வாறு சுவாமிகளிடம் விண்ணப்பித்துநிற்க வே, சுவாமிகள் சாம்பனைப்பார்த்து மழைநின்றவுடன் விறகு கொண்டுவருகிருயாயென்று கேட்டபோது, சுவாமி, அசாத்திய மான வெள்ளத்தால் ஒன்றும் போகும்வழி தெரியவில்லையேயெ ன்கிருர்.

இராகம்-நாட்டைக்குறிஞ்சி, தாளம்-சாப்பு.

பல்லவி.

போகும் வழியில்வெள்ளம் புரண்டுவோடுகின்றதே
புலைய னெப்படிச் செல்லுவேன்.

சரணங்கள்

கொஞ்சம் வழிதந்தாலுங் கூறினபடிசெல்வேன்
வஞ்சமில்லையையனே வாய்மையதனைச்சொல்வேன்
தஞ்சமுங்களின்பாதம் தலையில்விறகெடுத்து
தமியேன் மிகுமன்புடன் சார்ந்துவழிகடந்து (போ)

தொண்டுசெய்வதற்கின்று தொலையாதவோரிடர்
தொன்றிற்றேயிதுயெந்தன் தொல்வினையாகுமே
மண்டுமிந்தவெள்ளத்தால் வழியொன்றுந் தெரிகிலேன்
வல்லவாவழியெதும் சொல்லிற்செய்வேன்நாயேன் ()

கங்குகரையில்லாத கனமுடனே வெள்ளம்
கண்டவுடனே திகில் கொண்டுகலங்குதுள்ளம்
எங்கெங்கேமேடுயென்று மின்னவிடத்திற்பள்ளம்
என்றுதெரியேனந்தோ இல்லைகொஞ்சமுங்கள்ளம் ()

வசனம்.

ஈசனிதனைக்கேட்டது மனதிரங்கி சாம்பனுரைப்பார்த்து, பெற்ரு நீ விறகுக்கட்டைத்தூக்கிக்கொண்டு சென்று அவ்வெள் ளத்தின்முன்னரே நின்று, "ஏ கங்கையே யான், ஸ்ரீ உமாபதி சிவாசாரியசுவாமிகளுக்கு அனுதினம் விறகுத்தொண்டுசெய்கிற பெற்ருனென்னும் புலையன், ஆனதினுல் நீ விலகி வழிவிடுவாயெ ன்று வேண்டிக்கொள்வாயாகில் அக்கங்கை பிரிந்துவிடும். நீ செல்லலாமென்று சொல்லி ஸ்ரீ உமாபதிசுவாமிகளிடம் கொடுக் கும்படியாய் தனது அருமைத்திருக்கரத்தால், ஒரு ஓலையொன்

றெழுதி அப்பெற்றானிடங்கொடுத்து, மின்னலைப்போல் மறைந் தார்.

பதம்.

தந்தேனுன்க்குகைச் சீட்டு இதையுன்
சற்குருவினிடம் நீட்டு அவர்
உந்தனுக்குரைப்பதைக் கேட்டு நடந்
துய்வாயிதிலென்னகை நாட்டு.

வசனம்.

ஈசன் இவ்விதங்கூறி ஓலையைக் கொடுத்து மறையவே, சாம் பனார். கண்டு, மெய்மறந்து, ஆ! ஆ! ஈசன்வந்து யேழையானஎன் னோடு வாதாடி. ஏதோ ஓலையுங்கொடுத்துச் சென்றாரே, இதெ ன்ன ஆச்சரியம் என்று, மனம்வருந்தி, அந்தோ, ஈசனைக்கண்டும் அறியாமற் போனேனே, என மனம்வருந்து கின்றார்

இராகம்-முகாரி-தாளம்-சாபு.

பல்லவி.

பாவி யெக்தன்முன்னே நேரில்வந்து மீனப்
பறையனறியாமற் போனேனே.

அநுபல்லவி.

கூவியெனையழைத்து கொடியன்யென்னுடன்பேசி
கோல தன்னுருவைக்காட்டாமற் போயினாரையோ (பா)

சரணம்.

காதகன் யானினி கண்ணிறற் காண்பேனோ
கண்டு யென் றைக்குசிரம் கொண்டு பணிவேனோ
பாதகனிலும்பெரும் பாதகன் யான்தானோ
பரமானந்த தாண்டவா பலத்த வர்மம்ஏனோ (பா)

வசனம்

சாம்பனார் ஈசனால் திருமுகம் பெற்றதை நினைத்து மகிழ டைவது.

கட்கா

திருமுகம் பெற்றாரோ சாம்பனார்
திருவரு ளுற்றாரோ

குருமுகதரிசனங் கண்டிடஆவல்
கொண்டவர் தனமனம் விண்டிடநேரில் (திரு)

| | | | |
|---|---|---|---|
| கண்டார் | திருமுகம் | விண்டார் | தன்கரம் |
| கொண்டார் | மகிழ்வினை | யுண்டார் | மருளற |
| நின்றார் | சிவனரு | ளென்றார் | மயலதை |
| வென்றார் | சிவசிவ | என்றார் | பரவசம் |
| நீடினார் | பின்பு | ஆடினார் | அன்பு |
| கூடினார் | வினை | சாடினார் | பூமியில் |
| விழுந்தார் | பின்பு | எழுந்தார் | மாயை |
| யொழிந்தார் | துன்பங் | கழிந்தார் | மனது |
| துணிந்தார் | ஆவல் | தணிந்தார் | நீற்றை |
| யணிந்தார் | வீழ்ந்து | பணிந்தார் | மகிழ்ந்து (திரு) |

விருத்தம்

கருமுகத்திற் கட்டுண்டு கலங்கி பின்னர்
காசினியிற் பிறந்திறக்குங் கவலை யெண்ணி
அருமுகத்துக் கண்ணீரு மரும்ப நொந்த
விகத்தினொடு தவித்தபெற்றான் சாம்பனாருந்
திருமுகத்தை யரனருள நேரிற்பெற்று
திகழ்ந்துமன மகிழ்ந்துவுமா பதியாரான
குருமுகத்தி லளித்துபதங் கொளலாமென்று
குதித்திட்டார் தன்குருவை துதித்திட்டார்

வசனம்

இவ்வாறு சாம்பனார் மனமகிழ்ச்சிகொண்டு திருத்தொண்டு செய்யும்பொருட்டு மழையால் இடருற்றவராய் விறகு வெட்ட முடியாமல் தான்வசிக்கும் பழையகூறையின் கழிமரங்களை யெல்லாம் பிடுங்கி இரண்டுகட்டாகக் கட்டிக்கொண்டு தன்துபத்தினி சாம்பச்சியின் தலையில் ஓர் கட்டும் தன்தலையில் ஒருகட்டுமாகத் தூக்கிக் கொண்டு தனது பத்தினியோடு புரப்பட்டு வரவேவெள் ளத்தைக்கண்டு ஈசன்சொல்லிய வாக்கின்படி அதை வணங்கிக் கேட்டுக் கொள்ளுகிறார்.

இராகம்-பூரிகல்யாணி-தாளம்-ரூபகம்.

பல்லவி

வழிவிடுவாய்நீ கங்கையே
மாதவர்புகழ் மங்கையே. (வழி)

அநுபல்லவி.

| | |
|---|---|
| இழிகுலத்தவன் | ஏழையென்மேல் |
| இத்தனைகோபம் | சித்தத்தில் வேண்டாம் (வழி) |

சரணம்.

| | |
|---|---|
| சற்குருஉமாபதிக்கு யான் | சந்ததந்தொண்டுசெய்பவன் |
| நிற்கநேரமில்லை யெனக்கு | நீதயவுசெய்தேமகிழ்ந்து (வழி) |
| ஈனமானபாவமே | யியற்றும்நீசன் யானம்மா |
| ஞானமடைய யெண்ணினேன் | நல்லதொண்டை நண்ணினேன் |

விருத்தம்.

இந்நிலை வேண்டுசாம்பாற் கிரங்கியகங்கைமாது
தந்நிலைபிரிந்துசெல்லுந் தனிவழிவிடுத்தொதுங்க
வந்நிலைகண்டுகங்கை யவடனைத்தொழுதிறைஞ்சி
நந்நிலைநல்குஞ்சீரார் நாதனை யணுகப்பெற்றார்.

வசனம்.

இவ்விதம் கங்கையின் உத்தரவுபெற்று ஆனந்தபரவசமாய் தன் ஸற்குருநாதனை பஜனம் பண்ணினவராய்ச் சொல்லுகிறார்.

துக்கடா.

| | | |
|---|---|---|
| சற்குருநாதா | நான் | சரணம் |
| சர்வாதீதா | நான் | சரணம் |
| வேதவேதாந்த | நான் | சரணம் |
| விமலநற்றாயா | நான் | சரணம் |
| சத்துவகுணனே | நான் | சரணம் |
| சகலாகமனே | நான் | சரணம் |
| அப்ரமேயனே | நான் | சரணம் |
| ஆனந்த ரூபா | நான் | சரணம் |

வசனம்

இவ்வண்ணம் குருதியானம் பண்ணிக்கொண்டு ஸ்ரீஉமாபதி சுவாமிகள் மடத்தின் எதிரேகொஞ்சதூரத்தில் நின்று தன்பத்தி னியுந்தானும் விறகுக்கட்டுகளை இறக்கிவைத்து விட்டு பயபத்தி யோடு மடத்தைநோக்கி சப்தமிட்டு யாரேனும் வந்து விறகினை யெடுத்தேகும்படி கூவுகிறார்.

சந்தஸ்-விருத்தம்.

ஆண்டையேபெற்ருன் அடியேன்நீசனே
அணுகினேனிங்கே அன்பாய்தாசனே
வேண்டும்விறகொடு மேவினேன்ஐயே
விரைவுடனெடுத் தேகுவீர்மெய்யே.

விருத்தம்.

கூவியே யழைக்குஞ் சத்தங் குருவுமா பதியாஞ் செம்மல்
மேவியே செவியாற் கேட்க விரும்பியே வெளியிற் போந்து
ஆவலாய் வந்த பெற்ருன் அரும்புலையனைப் பார்த்திட்டார்
தாவில்சீர் பெற்ருன் வீழ்ந்து தாழ்ந்துரை செய்வானன்றே.

அஞ்சனகீதம்

நேற்று மழையினல் நானும் வராமல்
நின்றன்னையே யிதனையல்லாமல்
மாற்ற மொன்றில்லை சினங் கொண் டிடாமல்
மகிழ்ந் தருள் செய்குவீரே

வசனம்

என்றுவிண்ணப் பித்து ஐயே நான் நேற்று வாராத தினல் யாரோ வொரு சாமியாரைப்போல் என்னை மிகக் கண்டித்து ஏன் விறகு கொண்டு போகவில்லை யென்றும் பணம் வாங்கவில்லையா யென்றும் நேற்று வந்து யென்னேடு வாதாடி இந்த" ஓலையை" த்தங்களிடத்தில் கொடுக்கச் சொல்லி மறைந்து விட்டார் நான் பிறகு மறைந்ததை யோசித்து பார்க்குமிடத்து ஸ்ரீமந்நடராஜமூர்த்தியே வந்தாரெனத் தெரிந்து கொண்டேன் ஆனதினல் இந்த வோலையைப் பாருங்கள் என்று அவ்வோலையைகீழே வைத்து வணங்கி தூர வகன்று கூறுகிருன்.

இராகம்-கேதாரம்-தாளம்-ஆதி.

பல்லவி.

கண்ணுரப் பாருங்கள் நீங்கள்
கருணையோடிதனைக் (கண்)

அநுபல்லவி.

பண்ணும் பவங்களைப் பரிவுடன் தினஞ் செயும்
பறைக்குலத்தோ னெனக்கு பரமன் தந்த வோலையைக் (கண்)

சரணம்.

பனவராகப் பட்ட பகல் தனில் வந்து
பாவிகாணகரத் தலேவ ரைந்து
எனதடியவரும பதியிடஞ் சென்று
ஈந்திடென்று ரிதோ ஈந்தன ளின்று (கண்)

வசனம்.

என்று சாம்பனுர் கூறி ஒதுங்கிநிற்கவே ஸ்ரீ உமாபதி சுவாமிகள் ஆச்சரியமுற்று விரைந்து வந்து அவ்வோலையையெடுத்து முடங்கலை விரித்துப் பார்த்து வாசித்தார்.

உ

திருச்சிற்றம்பலம்



வெண்பா

அடியார்க் கெளியவன்சிற் றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதியகைச் சீட்டு படிமிசையிப்
பெற்றான் சாம் பானுக்குப்பேதமறத் தீக்கை பண்ணி
முத்திக் கொடுக்க முறை.

இவண்

தில்லை நகரம், } அடியார்க் கெளியவன திருச்சிற் றம்பலமுடையார்

வசனம்.

இவ் "வேண்பாவை" ஸ்ரீ உமாபதி சுவாமிகள் கண்ணாரக்கண்டு வாசித்துப் பார்த்து அடியில் ஈசன் சுபஸ்தலிகிதம் இருப்பதையும் நோக்கி ஆனந்த முற்று கொஞ்சம் மனவருத்த முடையவராய் ஈசனை யெண்ணி துதிக்கிறார்.

இராகம—முகாரி—தாளம்—ஆதி

பல்லவி.

ஏனெனக்கு மிவ்விதம் இன்னருள் செய்யாமல்
என்னை விடுத்தீரையா என் நாதனே (ஏ)

அநுபல்லவி:

நானுமக் கடியவ னல்லவோ நாதனே
நங்கைபாகத்தமரும் நாதவி னோதனே (எ)

சரணம்

எத்தனேயோ நாளா யென்கரத்தாலுன்னே
யேத்துமலர் கொண்டு பூசித்துப் பணிந்தேன்
பத்தன்யா னல்லவென்று சித்தத்திலெண்ணினீரோ
பறையனுக்கருள் செய்ய பதைப்புடன் வந்தாரோ

வசனம்

ஸ்ரீ உமாபதி சுவாமிகள் இவ்வாறு சுவாமியை தியானித்து பின்னர் நம்மைப்பார்க்கிலும் எத்தனேயோ பங்கில், இப்பெற்ருன் சாம்பன் மேலான தரமுடையவனென்று எண்ணி தான் முத்தி கொடுக்கும் விதத்தில் தீக்ஷாகுருவாக வேண்டி யிருப்பதில் பஹிரங்கமாய் வணங்காமல் அந்தரங்கத்தில் வந்தனவழி பாடுகள்புரிந்து பின்னர் ஈசன் உத்தரவின் படியே நாம் செய்வது தான்முறை யென உத்தேசம்பண்ணி அப்பெற்ருனேப் பார்த்து, சமீபத்திலுள்ள ஓர் தடாகத்தில் ஸ்நானம்பண்ணி வரவெனக்கட்டளேயிட சாம்பஞர் அகமகிழ்ந்து ஸ்நானம்பண்ணி விபூதியணிந்துஸத்குருஉமாபதி சுவாமிகள் முன்னரே ஸ்ரீமந்நடராஜனே தியானித்தவராய் நிற்கிருர். ஸ்ரீ உமாபதி சுவாமிகள் வேதாகம விதிப்படி தன் தன் சன்னிதானத்தில் சமீபத்திருந்த் தடாகத்தில் ஸ்நானம்பண்ணிவந்த பெற்ருனே நிறுத்தி சிவயோகம் பாவனேசெய்து ஞானகண்ணினுல் நோக்கினர்.

இராகம்-கானடா-தாளம்-ஆதி.

பல்லவி

பார்த்தார் பார்த்தது மெரிந்திடவே (பார்)

அநுபல்லவி.

கூர்த்தஞானவிழிகொண்டு சாம்பனது
கோர பார பாச நாச மாகிட (பார்)

சரணம்.

1. ஸஞ்சித வினேயது பஞ்சென ஒழிய
ஜனனமரணபய மானது கழிய

பஞ்சபூதமாகிய வுடல் நீங்க
பரமாநந்த ஞானகர மோங்க (பார்)

2. ரஞ்சிதமாய் நடராஜனது சரண
குஞ்சிதமுற நெஞ்சினிற் கொஞ்சமும்
பஞ்சமனென சஞ்சலமின்றியே வார
பதிதே சிகன் தீக்ஷாவிதி முறைப்படி

3. ஈசனெழுது திரு வோலையைக் கண்டு
இதுவம்பலவ னருளெனக் கொண்டு
மாசிலாத ஆகம சாஸ்திரப் படி
மன்னு ஞானவ் லோகனத்தாற் குரு (பார்த்)

விருத்தம்.

தலையதி லங்கிசூழத் தவித்திடு மொருவன் றண்ணீர்
நிலையதைத் தேடல் போனு நெடுவழி நடந்தோன் வெப்பந்
தொலைந்திட நிழலைத் தேடித் திருவுதல் போலும் நின்று
அலைவுறு பெற்ற னெந்தை யாலரு ளடைந்துய்த்தாரே

இராகம்-கௌளிபந்து-தாளம்-ஆதி

பல்லவி.

முத்திபெய்தினர் சாம்பனர் (முத்)

சரணங்கள்.

பத்திமயமாய் நின்று பரனருளைக்கொண்டு
உத்தமகுருதீக்ஷையா லுலகவாழ்வதைவிண்டு (முத்)

அத்தனம்பலவாணற்கு அனுதினந்தொண்டியற்றி
சத்தானகுஞ்சித சரணத்தலரைப்பற்றி (முத்)

நதியோடியேகடலில் நண்ணியவிதம் போலே
மதியினுடுக்குலங்கள் மன்னுமாறினைத்போலே (முத்)

அருமறைமுனிவர்கள் யாருமகிழ்கூர
மருமலர்மழையென வானவர்பெய்துசார (முத்)

தாசன்தியாகராஜன் தாழ்ந்துபணியும்பெற்றான்
எகிலாச்சிவத்தொடு இரண்டறநிற்கபெற்றான் (முத்)







## 5-வது இராஜாங்க விலாஸம்.



விசனம்

ஸ்ரீ உமாபதி சுவாமிகள் தனது புருஷனை ஸ்நாநம் பண்ணி விபூதியணிந்து வரச்சொன்னதும் வந்துநின்ற தனது புருஷனை சுவாமிகள் எதோசற்றுநேரம் உற்று நோக்கிச்சிறிது நேரத்திற்கு தன்கண்ணில் ஏதோ அக்கினிப் பொறியைக்கிளப்பி, தனது புருஷன் மேற்பட்டெரிக்கச்செய்ததும் கண்ணாரக்கண்ட சாம்பனார் மனைவியான சாம்பச்சி திடீரென கீழே விழுந்து தன் புருஷனை சுவாமிகள் ஏதோ காரத்தினால் வீணாக எரித்தா ரெனக் கருதிப் புலம்புகிறாள்.

பதம்

| | |
|---|---|
| மன்னவாநீவீணாக எரிந் | தாயோ |
| மாதுயானுந்தனியாகப்பிரிந் | தாயோ |
| என்னையுந்தன்மனத்தில்மறந் | தாயோ |
| ஏழையென்னைமயங்கத் துறந் | தாயோ |

விருத்தம்.

அந்தோ! அந்தோ! மிகவு மனியாயு தான்
யார்சகிப்பாருலகிலிதுவடுக்குங்கொல்லோ
எந்தனது ஆவியினி இருக்காதையோ..
என்செய்வே னிதற்குவழி யெதுங்காணேன்
சிந்தைமிகக் கொதிக்குதையோ சிவமேபாழுந்
தெய்வமெனக் கிவ்விதியுஞ் செய்யலாமோ
அந்தமிழ்ந் தனனென்று வன்னாள்கண்ணீர்
அலம்புவாள் கணவனுக்குப் புலம்புவாளே.

இராகம்-புன்னாகவராளி—தாளம்-ரூபகம்.

வண்ணம்.

1. நேசமுறுந் துணைவா எனை
நீங்கினையோ சுணைவா மிக
நீடு சோகமதாகி நேரிழை
வாடி னேன் தனி யாக மேவின

னேயென்தன்மூக் கனியே காண
நேர்வதென்றைக் கினியே
மாசிலா மன்னவனே நல
மாமதி சொன்னவனே நீவு
மாபதிதனக் கேநிதந்தவ
ரூபத மதற் கேபணிசெய்தும்
மாண்டிடவே யெரித்தே கொன்ற
மாயஞ்சொல்வாய் விரித்தே.

2. தோசியாளென் விதியோ நிலத்
தோர்க்கிதுசம் மதியோ ஒரு
சூதுமேவுண ராதுபேசிடும்
வாதுமேயறி யாத மன்னனே
தொல்லையில் மாழ்கினனே பெருந்
துன்பத்தி மூழ்கினனே
ஆசைக்கு கந்தவனே வலி
யாண்மைமி குந்தவனே தெளி
வானதேனேகண் ணாளனேநல
மானயென்னமுத மேதிரவிய
மன்னவனே மணியே நீல
மாணிக்கமே வணியே.

3. காதனைப் பாடினையே தினம்
நல்லன்பு கூடினையே எந்த
நாளுமேமற வாதுயிசனின்
ருளேயேதுதி யேபுரிந்தநீ
நாசமுற் றேகினையே நான்கா
ணாவுரு வாகினையே
தீதில்லாச்செங் கரும்பே தேனே
தெள்ளமுதே அரும்பே எங்குந்
தேடியுங்கிடைக் காததாகிய
கோடிசூரிய சோதிபோலொளிர்
சித்திர ரத்தினமே எங்கு
சென்றனை யித்தினமே

பாதகியான் துறந்தேன் பெரும்
பாவியெனச் சிறந்தேன் நல்ல
பாலுடநறுந் தேனுங்கூடின
போலினள்பிரி யாமலேவாழ்ந்த
பாசத்தை நீக்கினனே அயன்
நேசத்தைப் போக்கினனே

வசனம்

சாம்பச்சி இவ்வாறு புலம்பி அழுது சாம்பனர் தனதுபால் யதிசையிற்செய்த ஒவ்வொன்றையும் நினைத்து வருந்துகிருள்.

சிந்து.

மங்கையென்னைவிட்டு எங்குசென்ருயெந்தன்
மாசிலாத செல்லமே நீ
பேசும்வார்த்தை வெல்லமே இனி
வாழேனெந்த னில்லமே நீயிவ்
வாறுபோவையென்று யானறிந்தான்மாலே
வனையவணங்கேன் கில்லமே

சங்கையின்றிமுன்ன மென்கைதொட்டுயெண்பெண்
சாதியான குட்டியே யென்று
வோதியென்னைக் கட்டியேகொண்டு
தந்துவெல்லக் கட்டியே குழல்
தன்னைச்சீவியேதோ பொன்னவைத்துநீயுந்
தாழம்பூவைத் திட்டியே

வசனம்

முன் நடந்தனவற்றை யெண்ணி பிரலாபித்து என்செயலாமென்று நொந்தவளாய் இதனை அரசனிடம் விண்ணப்பித்துக் கொள்ள நினைத்து அழுது கொண்டு இராசசமுகம் வருகிருள்.

கண்ணிகள்.

1. நாதனே யெரிந்துபோன நாயகாநானென்னசெய்வேன்
ஞாயமோ என்ன மாயமோ
வேதனை யடையவிட்டு மாதெனக்குவொன்றுஞ்சொல்ல
வில்லையே இதென் தொல்லையே

2. மாலையிட்டநாள்முதலாய் வேலைவிட்டுத்தொண்டுசெய்தாய்
மன்னவா நலஞ் சொன்னவா
வாலையானபருவந்தன்னில் மஞ்சள்பூவிழக்கச்செய்தாய்
வஞ்சமே கல்லோ நெஞ்சமே.

3. என்னருமையெந்தன்செல்வம் என்கரும்புயேதினிமேல்
இன்பமே என்றுந் துன்பமே
வன்னியாலெரிந்துபோக வுன்னைவிட்டு யென்னுயிரை
வைப்பதோ யானிருப்பதோ

4. ஆசையாருமென்கணவா மோசஞ்செய்ததேனோயெந்தன்
ஆவியே சொள்வாய் மேவியே
மாசிலாமாணிக்கமேயென் நேசனேயென்நன்மணியே
வாழ்வேனோ இனஞ் சூழ்வேனோ

வசனம்.

மனதுக்கத்தோடு இவ்வாறு புலம்பிக் கொண்டு அரசனின் மாளிகை முன்னரே சென்று நின்று பெருங் குரலிட்டு ஓலமிடலானாள்

தனைகஷரிபதம்

| | | |
|---|---|---|
| மன்னவா மன்னவா | ஓலம் | இந்த |
| மானிலம் காப்பவா | ஓலம் | பெரும் |
| இந்நகர் மன்னவா | ஓலம் | பாரும் |
| என்னரசே அந்தோ | ஓலம் | |
| மானிலந்தன்னிலே | யாரும் | இது |
| மாபவமென்றருள் | கூரும் | விதம் |
| யானடைந்தேன்வந்து | பாரும் | அடி |
| யாள் துயரந்தனைத் | தீரும் | |
| எங்களுக்கெல்லாமோர் | பதியே | மிக |
| ஈனர்க்கருள்செயும் | நிதியே | இனி |
| உங்களையே நம்பி | கதியே | யென்று |
| ஓடிவந்தேனருள் | ததியே | |

வசனம்.

என்று சாம்பச்சி ஓலமிட்டு அழுவதை அரசன் கேட்டுபட படத்து வெளியிற்பொந்து யேழையான புலைச்சி யொருவள் அ

மூது நோவதைக் கண்டு மனதிரங்கி விஷயமென்ன வென்றுகே ழ்க்க சாம்பச்சி கூறுகிருள்.

சிந்து

கொற்றவாயெனக் குற்றதீமையைக்
கூறுவேனிதை யோராய் இந்த
கோரமாகுமோ தேராய் ஞாயங்
கூறுவாய்மனுச் சீராய் அலங்
கோலமிதனைப்போல் ஞாலந்தனிலில்லை
கொடுமையாமிது பாராய்

நற்றவாவென வுற்றயாருமே
நாடிடுமுமா பதியே எனும்
நாதன்செய்திட்ட சதியே சொல்ல
நான் மயங்கினேன் மதியே எந்தன்
நாதன்கணவனுக் கிதுவென்றுமுன்
லபித்ததோயிந்த விதியே

எந்த நாதனுஞ் சிறந்தவன்பினல்
இதமாய்விறகினை வெட்டி அதை
இறுக்கியே நன்ருய்க் கட்டி அவர்
இருக்குமடமதைக் கிட்டி தின
மீந்துவந்ததி லேதுங் குற்றமில்லை
என்னநேர்ந்ததோ அட்டி

விருத்தம்.

இந்தவிதம் சாம்பச்சி யுரைக்கக் கேட்டு
இளகுமன முடையவனு யெழுந்து போந்து
அந்தமா யாகமங்கள் யாவுமோர்ந்து
அவனிதனில் சீவன்முத்த ராகவாழும்
பந்தமக னுமாபதியார் தம்மைக்கண்டு
பறையனை நீ ரெரித்தவிதம் பகருமென்று
சிந்தையினிற் கோபமொடு சிங்கம்போலுஞ்
சிறுவான் றனக்குவவர் கூறுவாரே.

இராகம்-அடாணா-தாளம்-ரூபகம்.

பல்லவி.

ஐயனேநீரனியாயஞ்செய்ததறழி மோமா ஏழை
யானசாம்பனைமனையாளின்பழிவிட்டுப் போமா

அநுபல்லவி.

மெய்யரென்றிருந்தேன் மேதினியிலினி
மேவிநீர் செய்தது வோர்படு
பாவியுஞ் செய்யா ரேயிது (ஐய)

சரணங்கள்.

நித்தந்தவறாது மெத்தக்கவலையாய்
பத்தியுடன் விறகு வெட்டி தூக்கி
உத்தமனாகவ ளித்துவந்தான்யென்வி
தத்தில்வந்ததைய . நட்டி
சித்தத்தி லெண்ணாது நீயெரித் திட்டீரே
செய்யாத பாவத்திற்கே தலைப் பட்டீரே
மெத்தப்படித்ததெல்லாம்நீரும் விட்டீரே
வேதனை யாகிய ஞாயம
லாதன ரெற்றிட லாகுமா. (ஐ)

பார்த்தே நெருப்பா யெரித்திடும் படியேயப்
பறையன்செய்குற்றமும் யாதோ ஏழைப்
பறையனை யெரித்திடும்படி சொன்னசாத்திரம்
படித்ததாற்செய்தது யீதோ
வார்த்தையெல்லாமிக நீதியாய்க் காணுது
வஞ்சகநெஞ் சத்தினர் போலுங் தோணுது
நேர்த்தியிதை நினைத்தால் விந்தை பூணுது
நீரோ பெரியவர் இப்படி
யாரே செய்குவர் செப்பிடும் (ஐய)

விருத்தம்

இந்தவிதம் வேந்தனுளங் கோபங் கொண்டு
ஏழைபாம் பெற்றனேந் திழையினாலே

சிந்தைமிக வருந்தியுமா பதியார்தம்மைச்
சீறியே யென்செய்தீர் சிறந்தோர்நீரோ
விந்தையிலும் விந்தையிது மிகவுநன்ரும்
விமலனடி யவர்க்கிதுவோ மேன்மைநல்கும்
எந்தமுறையா லிவனை யெரித்தீ ரென்ன
வெதுஞ் சொல்வாரன்பரு மாபதி சொல்வாரே.

கண்ணிகள்.

நானெரித்தே னென்று கோபமென்மேற்கொண்டால்
நானென்ன செய்குவேன் மன்னு
ஏனெரித்தே னெனி லீசனருட்படி
யேயெரித்திட் டேனே மன்னு

எரித்தேனென்றும்பழி வேண்டாமவன்பத
மெய்தி யடைந்திட்டான் மன்னு
எரித்ததுதீக்ஷையில் மூன்றிலொன்ரு மது
விளம்பிடிற் றெரியாது மன்னு

எவரும் சேராப்பத மெய்தியவன்றனை
இறந்தானென் றெண்ணுதல் மன்னு
தவறன்ரே நான்பழி செய்வேனே யானுண்மை
சாற்றினேனிது திண்ணம் மன்னு

வசனம்.

இவ்வண்ணம் சுவாமிகள் பலவாறு தகுந்த ஞாயசமாதானங்களை எடுத்துத் திருவாய் மலர்ந்தருள அரசன் கொஞ்சமும் மனம் ஒப்பமிடாதவனு யிருத்தலைக்கண்டு சுவாமிகள் இனி அரசனுக்குக் காக்ஷிப்பிரமாணத்தினுலே காட்டினுலன்றி மனப் சம்திப்பானென்று அறிந்து சுவாமிகள் தம்முடைய சிஷ்யர்களில்முத்தி யடையக் கூடிய பக்குவ நிலையில் யாரேனு யிருக்கின்ருர்களா வென நோக்கு மிடத்து யாரு மில்லாமை கண்டு மனம்வருந்தியிருக்குங்கால் சுவாமிகள் அனுதினம் பூஜை செய்யும் போது விழுந்தோடுகிற ஜலமானது பாய்ந்து மிக செழிப்பாக வளர்ந்து தினமும் சிறசில் சுவையானகத்தரிக் காய்களையுதவி வரும் "முள்ளிக் கத்தரிச் செடியை" உற்றுநோக்கி அச்செடி முத்தியடைவதற்கு யேற்ற பக்குவ நிலை வாய்ந்திருப்பதை யறிந்து அரசன் முதலிய யாவரும் காண சுவாமிகள் அப்முள்ளிச் செடிக்கு ஸத்

யோ நிர்வாண தீக்ஷையைச் செய்து ஞானக் கண்ணால் நோக்க வே அம்முள்ளிச் செடியின்மீது ஓர் அகண்டா கார ஜோதியுண் டாகி எரிந்து அதினின்றும் ஓர் முனிவர் வெளிவந்து உமாபதி சுவாமிகளை மும்முறை வணங்கி கைகுவித்து நிற்க சுவாமிகள் நீயா ரென்று வினவுங்காலத்து அம் முள்ளிமாமுனி சொல்வதா வது, நான்முன் சென்மத்தில் பரமே சுவரனைக் குறித்து அதிகபத் தியோடு தவம் புரிந்தேன் அத்தவத்தின் முதிர்ச்சியால் ஈசன்மன மிரங்கி பிரசன்னமாகி என்னவேண்டு மென்று கேட்க யான் கரு தியதை விடுத்து மற்றொன்றைக் கேட்டகாலத்தில் ஈசன் கோபித் து நீமுள்ளிச் செடியாகப் போவா யென்று சாபம் கொடுக்கஅத னைப் பெற்றுநான் அடிவணங்கி விமோசனம் எவ்வித மென்னவே நம்முடைய பரமபத்தன் உமாபதியாலே தீக்ஷைசெய்விக்கப் பெ ற்று நமது பதத்திற்கு வந்து சேர்வா யென்று சொல்லிமறைந்து விட்டார் அதுபோல யான் முள்ளிச்செடியாகி பிறந்துதங்களா லே நான் உத்தம பதத்தை யடைந்தேனென்று சொல்லவே ஆ காச வீதியினின்றும் அனேகதேவர்கள் கூடி ஒரு புஷ்பரதத்தை க்கொண்டு வரவே அதில் உமாபதியின் திருவடியைவணங்கி உத் தரவு பெற்று ரதாரோஹணம் செய்து ஸ்ரீகைலாசம் சென்றார் இதனைக் கண்ணுற்ற அரசன் மனதில் பயங் கொண்டு நடுநடுங்கி சுவாமிகளை பலவாறுதுதித்து அடியேன்செய்த அபசாரங்களைம ன்னிக்க வேண்டுமென மன்றாடியபின்னர் சுவாமிகளுக்கு வேண்டி மடாலயங்கள் முதலியவைகளை கட்டிவைத்து அப்பெற்றான் மனைவிக்கு அரசன் சமாதானம் செய்து மானியங்கள் விட்டு தா னும் சுவாமிகளை யண்டி பணிவிடை செய்வானாயினன்

## குடவுளுந்து பட்டர் வைபவம்.

ஸ்ரீநடராஜமூர்த்தியின் அருள்வாய்ந்த ஸ்ரீஉமாபதிசிவா சாரிய சுவாமிகள் தமது சிஷ்யகோடிகளில் ஒருவர்க்கு மந்தபுத் தியினால் யாதொன்றும் வராமைகண்டு சுவாமிகள் ஓர்தினம் அம் மந்தபுத்தியுடையாரை விளித்து யாதுபடித்து வருகிறெனனயா தமறியா அன்னவர் யாதுஞ் சொல்லாமலிருக்க உமாபதி சுவாமி கள் கூறியது.

வெண்பா.

வள்ளுவ ரன்பர்மொழி வாசகந்தொல் காப்பியமே
தெள்ளு பரிமேலழகர் செய்தவுரை—யொள்ளியசீர்த்
தொண்டர் புராணந் தொகைச்சித்தி யோராறுந்
தண்டமிழின் மேலாந் தாம்.

என்று அவர்க்கு மனதிற்பட எடுத்துக்கூறி முதலிலெடுத்து, வள்ளுவர், என்னும் திருவள்ளுவ நாயனார் செய்த திருக்குறளி முதற்குறளாகிய,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்று அன்னவர்க்குச் சொல்லி, இது வருமாறு ஒவ்வொருதரம் சொல்லும்போது ஓர் உளுந்தை யோர்குடத்திற்போட்டு வரும்படி செய்தார். இப்படி சகல சாத்திரமும் படித்து வருநாளில் அக்காரணப்பெயர் வாய்ந்த அவருக்கு (குடவுளுந்து பட்டருக்கு) மோக்ஷானந்த கதியும் ஸமீபிக்கவே ஸ்ரீ உமாபதி சுவாமிகள் அப்பட்டருக்கு ஸத்யோ நிர்வாணதீக்ஷைசெய்து திருநோக்கால் நோக்கி ஜோதியாக்கி இரண்டறக் கலக்கச்செய்தார்.

கருடபக்ஷி முனீஸ்வரர் வைபவம் ஸ்ரீ உமாபதி சிவாசாரியசுவாமிகள் திருமடத்திலிருந்தவாறே இவ்வித அத்புதாதிகள்செய்துவருங்கால் சுவாமிகள் மடத்தின்மீது ஓர் கருடபக்ஷி பறந்துகொண்டே யிருந்து சுவாமிகள் பூஜைபண்ணி வெளியில் வரும்போது கண்டு தரிசித்துப்போகும் வழக்கத்தை யனுசரித்து வந்தது ஓர்நாள் இதனை சுவாமியறிந்து அப்பக்ஷியின் முன்ஜன்மத்தின்பிரபாவத்தை யுணர்ந்து பூஜைசெய்து விட்டு வெளியில் வரும்போது ஆகாயத்தில் பறந்து கொண்டிருந்த பக்ஷியைநோக்கி ஞானதிருஷ்டியால்ஸத்யோ நிர்வாணதீக்ஷை செய்யவே ஜோதிஸ்மயமாகி சிவத்தோடு இறண்டறக்கலந்து ஆனந்தமுற்றது.

பின்னர் இவ்விதமான அநேக அத்புதங்கள் செய்து அநேக சிஷ்யர்களுக்கு உபதேசாதிக்ரமங்கள் செய்து பிறகு ஓர் சித்திரைமாதம் அஸ்த நக்ஷத்திரத்தில் சிவத்தோடு இறண்டறக்கலந்துசுகானந்தச் செல்வமாய் வாழ்ந்தார்.

ஸ்ரீ உமாபதி குரவே நம:



## வா ழ் த் து.

வாழ்கமறை யாகமங்கள் மறையோர்யாரும்
வாழ்கசிவ சமயநெறி மானிலத்தோர்
வாழ்கதிருத் தில்லைநகர் மன்றின்கோனும்
வாழ்கதமிழ் முதலான யாவு மல்கி
வாழ்கஸ்ரீ ரங்ககுரு மரபு மோங்கி
வாழ்க வடிவேலினோடு மயிலு நன்றாய்
வாழ்ககந்த சாமித் தேசிகன் சீர் மேலாய்
வாழ்கசிவ நாமமது வளர்ந்து மாதோ.

ஸ்ரீஉமாபதி சிவாசாரிய சுவாமிகள் அருளைப்பெற்ற

பெற்றான் சாம்பனார் சரித்திரக் கீர்த்தனம்.

ஸ ம் பூ ர் ண ம்.

வே லு ம யி லு ந் து ணை

சுபம் முற்றிற்று.

---



